பேராசிரியர் டாக்டர் தி. முத்து-கண்ணப்பன், எம்.ஏ.,
பிஎச்.டி.,

தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை - 600 030.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

" சங்க இலக்கியத்தில் மலர்கள் " என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகப் பேராசிரியை சாரதா கலாவதி, எம்.ஏ., அவர்கள் என் மேற்பார்வையில் 1977 சூலைத் திங்கள் முதல் 1981 திசம்பர் வரை ஆய்வு நிகழ்த்தி எழுதிய இவ் ஆய்வேடு, இவ் ஆய்வாளர் தம் சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும், இதுமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை எதற்கும் யான் சான்றிதழ் வழங்குகின்றேன்.

சென்னை - 30
24.12.81

(கையொப்பம்) 24/12/81
(தி. முத்து-கண்ணப்பன்),
மேற்பார்வையாளர்.

தா கலாவதி, எம்.ஏ.,
த்துறைத் தலைமைப் பேராசிரியை,
திதாசன் அரசினர் மகளிர் கல்லூரி,
சேரி - 605 003.

## ஆய்வாளர் உறுதிமொழி

" சங்க இலக்கியத்தில் மலர்கள் " என்னும்
ப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச்
னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைப்
ாசிரியர் டாக்டர் தி. முத்து-கண்ணப்பன், எம்.ஏ.,
.டி., அவர்களின் மேற்பார்வையில் 1977 ஜூலை
1981 திசம்பர் வரை ஆய்வு நிகழ்த்தி, யான்
க்கும் இவ் ஆய்வேடு, என் சொந்த முயற்சியால்
ானது என்றும், இஃது, இதற்குமுன் வேறு எந்தப்
த்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி
கின்றேன்.

னை - 600 030.

12.1981

சாரதா கலாவதி

( சாரதா கலாவதி ),
ஆய்வாளர்.

## நன்றியுரை

பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ., படிக்கும்பேறு பெற்ற நான் மறுபடியும் இங்கு இடம்பெற்று ஆய்வுப் பட்டத்திற்குப் படிக்கும் வாய்ப்பை எண்ணி மனமகிழ்கின்றேன். டாக்டர் மு.வ. வின் தலைமையில் படித்த நான் இப்பொழுது அதே கல்லூரியில் 18 ஆண்டுகளுக்குப்பின் ஆய்வு மாணவியாகச் சேர்ந்தேன். என்னை ஆய்வு மாணவியாக ஏற்றுக்கொண்டு பல்வகையிலும் ஊக்குவித்த பேராசிரியர் டாக்டர் ரா. சீனிவாசன் அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். அவர்கள் பேராசிரியர் டாக்டர் தி. முத்துக்கண்ணப்பர் அவர்களிடம் வழிப்படுத்தி இவ் ஆய்வினை மேற்கொள்ளச் செய்தார். அப்பெருந்தகை என்னை அன்புடன் ஏற்று ஊக்கமளித்து வழிகாட்டி ஆற்றுப்படுத்திய அருஞ்செயல் எண்ணிப் பார்க்கும்பொழுது அவருக்கு நான் எத்தகைய கைம்மாறு செய்ய முடியும் என்று கூறமுடியாமல் திகைக்கிறேன். தலைப்பைத் தேர்ந்தெடுத்துத் தந்து அவ்வப்பொழுது தக்க அறிவுரைகளும் வழிமுறைகளும் தந்து உதவிய என் வழிகாட்டியாகிய பேராசிரியருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

கல்லூரி முதல்வர் டாக்டர் சுப. சண்முகநாதன் அவர்கள் என்னை ஆய்வு மாணவியாக ஏற்றுக்கொண்டு பழைய மாணவியைப் புது மாணவியாக்கியமைக்குப் பெரிதும் நன்றியுடையேனாக இருக்கிறேன். பச்சையப்பன் கல்லூரி நூலகம் எனக்கு இவ் ஆய்வுக்குப் பெருந்துணையாக இருந்தது..

" சங்க இலக்கியத்தில் மலர்கள் " என்ற தலைப்பு முதலில் தக்க தலைப்புதானா என்ற மலைப்பு ஏற்பட்டது, பின்னர் ஆய்வு தொடங்கியதும் அரிய செய்திகளைக் காணமுடிந்தது. சங்க இலக்கியத்தைப் பல கோணங்களில் ஆய்வு செய்தவர்கள் அரிய செய்திகளைத் தந்து இருக்கிறார்கள். இத்தலைப்பை ஏற்று இவ் ஆய்வேட்டைச் சிறந்த முறையில் ஆக்கியமைக்கப் பெரும் உதவியாக இருந்த என் பேராசிரியப் பெருந்தகைக்கும் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். அவர் காட்டிய வழியில் நின்று இதனை முடித்த மன்நிறைவோடு அமைகிறேன்.

***

**************************
*  சுருக்க விளக்கம்  *
**************************

| | | |
|---|---|---|
| அகம். | : | அகநானூறு |
| ஐங். | : | ஐங்குறுநூறு |
| கல். | : | கல்லாடம் |
| கலி. | : | கலித்தொகை |
| குறிஞ்சி. | : | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | : | குறுந்தொகை |
| சிலப். | : | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | : | சிறுபாணாற்றுப்படை |
| தண்டி. | : | தண்டியலங்காரம் |
| திரு. | : | திருமுருகாற்றுப்படை |
| தொல். | : | தொல்காப்பியம் |
| நம்பி. | : | நம்பியகப்பொருள் |
| நற். | : | நற்றிணை |
| நெடு. | : | நெடுநல்வாடை |
| பட்டின. | : | பட்டினப்பாலை |
| பதிற். | : | பதிற்றுப்பத்து |
| பத்துப். | : | பத்துப்பாட்டு |
| பரி. | : | பரிபாடல் |
| பு.பொ.வெ.<br>புறப். | :<br>: | புறப்பொருள் வெண்பா மாலை |

| | | |
|---|---|---|
| புறம். | : | புறநானூறு |
| பெருங். | : | பெருங்கதை |
| பொருந. | : | பொருநராற்றுப்படை |
| மதுரை. | : | மதுரைக்காஞ்சி |
| மலை. | : | மலைபடுகடாம் |
| முல்லை. | : | முல்லைப்பாட்டு |
| யாப். | : | யாப்பருங்கலக் காரிகை |
| Ety. Dict. | : | A Dravidian Etymological Dictionary |
| J.P.F. Dict. | : | J.P. Fabricius' Tamil and English Dictionary. |

***

# உள்ளுறை

***********************
*                     *
*     1. அறிமுகம்     *
*                     *
***********************

1.0. ஆய்வின் நோக்கமும் அடிப்படைச் செய்திகளும் ஆய்வின் பகுப்புகளும் இக்கட்டுரையில் இடம்பெறுகின்றன.

1.1. ஆய்வின் நோக்கம்

சங்க இலக்கியப் பாடல்கள் முதல், கரு, உரி என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டவை. இவை ஒன்றுக்கொன்று மிக்க தொடர்புடையவை. இவற்றுள் கருப்பொருளாகிய மலர்கள் வருணனைப் பொருளாக அமைவதோடு வாழ்வியல் பொருளாகவும் அமைகிறது. இம்மலர்கள் ஒருசில இலக்கிய மரபுகளைக் கொண்டதாக விளங்குகின்றன. எனவே, கருப்பொருள் என்ற வகையில் இவை ஆராயப்படுதல் தேவைப்படுகிறது. இலக்கிய மரபுகளை அறிவதற்கும் இவ்வாய்வு வேண்டப்படுவதாகும். இவ் ஆய்வில் ஒருசில மரபுகள் வெளிப்படுதற்கு வாய்ப்பு உள்ளது என்ற அடிப்படையில் இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## 1.2. அடிப்படைச் செய்திகள்

கருப்பொருளாகிய மலர்களை ஆய்வு செய்யும்பொழுது நாம் அறியத்தக்க அடிப்படைச் செய்திகள் பின்வருமாறு:-

1. சங்க இலக்கியப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை - 2381 [1]
2. மலர்களைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவன -1019 பாடல்கள் இவற்றுள் மணம் தரும் பூமாலைகளேயன்றி ஒளிதரும் பொன்மணி, முத்து முதலியவற்றால் ஆன மாலைகளும் அடங்கும்.
3. அவற்றைப் பாடியோரின் எண்ணிக்கை - 337
4. நேரிடையாக மலர்கள் வருணனைகளில் இடம்பெறுவதோடு, உவமைகளிலும், உள்ளுறை இறைச்சிகளிலும் இடம்பெறுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## 1.3. ஆய்வின் பகுப்புகள்

### 1.3.1. அறிமுகம்

இதில் ஆய்வைப்பற்றிய அடிப்படைச் செய்திகள் தரப்பட்டுள்ளன.

### 1.3.2. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்

இதில் மலர்கள் யாவை என்பதும் அவற்றின் வரலாற்றுச் செய்திகளும் முடிந்தவரையில் காட்டப்பட்டுள்ளன.

---

1. சங்க இலக்கியம், வையாபுரிப் பிள்ளை பதிப்பு, பக். 1369, பாரி நிலையம், சென்னை, 1967, இரண்டாம் பதிப்பு.

1.3.3. மலர்களும் மக்கள் வாழ்வியலும்

இதில் மக்களின் நடைமுறை வாழ்வியலில் மலர்கள் பெறுகின்ற இடம் காட்டப்படுகின்றன.

1.3.4. மலர்களும் இலக்கிய மரபுகளும்

இதில் இலக்கியத் துறையில் மலர்களின் வழியாக ஏற்பட்ட மரபுகள் காட்டப்படுகின்றன.

1.3.5. மலர்கள் உவமைகளாதல்

இதில் மலர்களைச் சார்ந்த புலவர்கள் பாட்டில் அமைத்த உவமை முதலிய கற்பனைச் சிறப்புடைய அணிகள் காட்டப்படுகின்றன.

1.3.6. மலர்களும் குறியீட்டு மரபும்

இதில் சில சொற்களால் பலவற்றைத் தெளிவுற உணர்த்தும் குறியீட்டு நெறிமுறையும், புலவர்களிடையே அது நெடுங்காலமாக வழங்கி வந்தது என்பதும் காட்டப்படுகின்றன.

1.3.7. மலர்கள் கவிதைப் பொருளாதல்

இதில் மலர்களை எடுத்தாண்ட புலவர்களின் திறன் காட்டப் - படுகின்றது.

Designation Chapter I?

## 1.3.8. தொகுப்புரை

இறுதியாக, ஆய்வின் முடிப்புரைகள் தொகுத்துத் தரப்படுகின்றன.

## 1.3.9. பின்னிணைப்புகள் அதனைத் தொடர்கின்றன.

***

**2. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்**

2.0. சங்க இலக்கியத்தில் மலர்கள் கருப்பொருளாக இடம்பெறுகின்றன. அவை காலந்தோறும் மாற்றுப்பெயர்களும் பெறுகின்றன. பூவின் உறுப்புகள் தனித்தனிப் பெயர்களால் வழங்கப்படுகின்றன. அவை மலரும் நிலைகளைக் காட்டுவதற்கும் வெவ்வேறு பெயர்கள் உள்ளன. மற்றும் தாவரங்களின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு மலர்களைப் பிரித்துக்காண இயல்கின்றது. அன்றியும், நிலத்தின்வழி அமைந்த பாகுபாடும் நெடுங்காலமாக உள்ளது. இந்தக் கருத்துக்களின் அடிப்படையில், சங்க இலக்கியத்தில் காணப்பட்ட 138 மலர்களின் சிற்சில இயல்புகளும் இவண் காட்டப்படும்.

## 2.1. கருத்தும் கருப்பொருளும்

பழம்புலவர்கள் படைத்த இலக்கியத்துள், மக்கள் உள்ளத்து உணர்ச்சியைச் சொல்லோவியமாய்க் காட்டலே அவர்தம்

நோக்கமாகும். அதற்குத் துணையாக உதவுவன மரம், பூ முதலிய கருப்பொருள்கள் ஆகும். எனவே, மலர்களையும் அவற்றைத் தரும் தாவரங்களையும் பற்றிய முழுமையான அறிவுபெறுவதற்கு இலக்கியம் ஒன்றையே துணையாகக் கொள்வது அமையாது. பாட்டின் உயிர்நிலைப்பொருளை உணர்த்துதற்கு ஏற்றவாறு ஆங்கு அமைக்கப்பட்ட உலகியற் செய்திகளை முறைப்படத் தொகுத்து நெறிப்படுத்தி உண்மை காண்பதும் தேவையாகின்றது.

## 2.2. காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்பப் பெயர்கள் வேறுபடுதல்

மலர்கள் காலந்தோறும் இடந்தோறும் புதுப்பெயர்களும் மாற்றுப்பெயர்களும் கொள்ளுதலும் உண்டு என்பதையும் மனத்தில் கொள்ள வேண்டும். ஒரு பூவிற்குப் பல பெயர்களும் வழங்குவதற்கு வாய்ப்பு உள்ளது என்பதும் கவனிக்கத்தக்கது. நிகண்டுகள் இவ் உண்மையை அறிவதற்கு ஓரளவு துணைசெய்கின்றன.

## 2.3. பூவின் உறுப்புகள்

மலர்களைப்பற்றி ஆய்வதற்கு உதவும் வகையில் பூவின் பல்வேறு உறுப்புகளைப் பற்றிய செய்திகளையும் இங்கே குறிப்பிட வேண்டியுள்ளது. இதழ், தாய், தாது, தேன் என்பவை மலரின் பல்வேறு உறுப்புகளாகும். ஏடு, தோடு, மடல் என்பவை இதழ் என்னும் பொருளைக் குறித்த பல சொற்கள். கொங்கு, தாது,

மகரந்தம் என்பவை பூந்தாது என்னும் பொருளைத் தரும் ஏனைய சொற்கள். தேன், பிரசம், மட்டு, மது என்பவையும் கள்ளினை உணர்த்தும் பல சொற்கள். பொகுட்டு என்பது மலர்ந்த தாமரையின் நடுவிடம். புல்லிதழ் என்பது புறவிதழ். அல்லி என்பது அகவிதழ். அணர், இணர், தொத்து, குலை என்பவை மலர்க்கொத்தினை உணர்த்தும் சொற்களாகும்.

## 2.4. பூவின் பருவம் ஏழு

ஒரு பூவின் படிப்படியான வளர்ச்சிப் பருவ நிலைகளும் இந்த ஆய்வுக்கு உதவியாக அறியத் தக்கவையாகும். பூவின் தொடக்க நிலை முதல் அலர்ந்து விரிந்து உதிரும் நிலை வரையுள்ள பருவங்களை ஏழு எனக் குறிப்பிடுவர்.[1]

நனை, அரும்பு, முகை, போது, மலர், அலர், வீ என்பன வெவ்வேறு பருவ நிலைகளை உணர்த்தும் தனிப்பொருள் உடைய காரணப்பெயர்கள் ஆகும்.[2]

2.4.1.

சிறிதே பசுமை தோன்றிய நிலை நனை; பசிய புற இதழிடைச் சிற்றரும்பு தெரிய வருமநிலை அரும்பு, அரும்பு வளர்ந்து

---

1. 'கவிஞர்கோ' கோவை இளஞ்சேரன், 'முல்லை மணக்கிறது', பக்.14, (கலைக்குடில் வெளியீட்டகம், நாகப்பட்டினம்), முதற் பதிப்பு, 1978.

2. 'கவிஞர்கோ' கோவை இளஞ்சேரன், 'முல்லை மணக்கிறது', பக். 14-16.

திரண்ட நிலை முகை; முகையின் பிணிப்பு நெகிழும் தன்மை உடையது போது; இதழ் விரிந்த நிலை மலர் எனப்படும். அடுக்கிதழ் அனைத்தும் நன்கு மலர்ந்து அகன்ற வடிவம் உடையது அலர்; அலர்ந்த இதழ்கள் சுருங்கியோ, சுருங்காமல் உலர்ந்தோ வீழும் நிலைமையை உடையது வீ எனப்படும். இவ்வாறு பூவின் ஏழு பருவ நிலைகளைப் பற்றி அண்மைக் காலத்து நூலாகிய ' முல்லை மணக்கிறது ' என்பதில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்த வளர்ச்சி நிலைகளும் ஆய்வுக்குப் பெரிதும் துணைசெய்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

2.4.2.

நனை, அரும்பு என்னும் வளர்ச்சி சில நாட்கள் நடைபெறும் என்பதும், முகையென்பது சில மணிநேர அளவினது என்பதும், முகைக்கும் மலருக்கும் இடைப்பட்ட போது நிலை சில மணித்துளிகளே நீடிப்பது என்பதும் பொதுவாக இலக்கியப் பாடல்களின்றும் உலகியல் காட்சியின்றும் உணரக்கூடியனவாம்.

இதழ் நெகிழுமுன்பு முகை; நன்கு விரிந்தது மலர். இரண்டிற்கும் இடைப்பட்ட தன்மையே போது எனப்படும். மலர்கள் முகைப்பருவத்தில் தொடுக்கப்படும்; போது நிலையில் அணியப்படும். கூந்தலில் அவை மலர்ந்து கமழும்.

' போதொடு விரிகூந்தல் '[1] எனவும்,

---

1. சிலப். 1:60

'போதவிழ் புரிகுழல்'[1] எனவும்,

வருவன இந்நிலைமையை உணர்த்துகின்றன.

2.4.3.

காரணப்பெயராக மலர்களின் பருவ நிலைகளுக்கு தோன்ற ஏற்பட்ட இந்தச் சொற்கள் இலக்கிய வழக்கிலும் பேச்சு வழக்கிலும் ஓரளவு தடுமாறி இடம்பெறுகின்றன. அரும்பு, முகை, முகிழ், மொக்கு, மொட்டு என்று மலர்வதற்கு முற்பட்ட நிலைகள் குறிக்கப்படும். பொதுவாக, இக்காலப் பேச்சு வழக்கில் பூ என்னும் ஒரு சொல்லே நின்று நிலவுகின்றது. மலருமுன்னரும் மலரும்போதிலும் மலர்ந்த பின்னரும் வேற்றுமையின்றி வழங்கும்சொல் பூ என்னும் ஒன்றேயாகும்.

## 2.5. தாவர அடிப்படையில் பாகுபாடு

பூக்களைத்தரும் தாவரங்களை அடிப்படையாகக் கொண்டு, பண்டையறிஞர் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என நான்காகப் பகுத்துள்ளனர்.

### 2.5.1. கோட்டுப்பூ

உயர்மரங்களிலும் குறுமரங்களிலும் மலர்வன.

---

1. சிலப். 13:81

## 2.5.2. கொடிப்பூ

தரைமீதும் ஏனைப் பற்றுக்கோடு சார்ந்தும் வளர்கின்ற கொடிகளின் மலர்கள் கொடிப்பூ எனப்படும்.

## 2.5.3. நீர்ப்பூ

நீருள் வேரூன்றி வளர்கின்றவை தாமரை, குவளை, ஆம்பல் ஆகியவை.

## 2.5.4. நிலப்பூ

மேற்கண்ட மூன்றிலும் சேராத ஏனைய செடிகளும் புல்வகைகளும் நிலப்பூ எனப்படும்.

## 2.6. நிலத்தின் வழிப் பாகுபாடு

தமிழின் பொருள் இலக்கணத்தில், அகத்திணைக்கு உரிய நிலவகைக்கு ஏற்ப மரம், பூ என்பவற்றையும் பகுத்துச் சொல்லிய நிலைமையைப் பார்க்க முடிகின்றது.

## 2.6.1. குறிஞ்சி (மலை) நிலத்தைச் சார்ந்தவை

அகில், காந்தள், குளவி, குறிஞ்சி, கூதளம், சந்தனம்,

நறை, மூங்கில் வகைகள், வழை, வேங்கை முதலியன.

2.6.2. முல்லை (காட்டு) நிலத்தைச் சார்ந்தவை

கருவிளை, காயா, குருந்து, குல்லை, கொன்றை, தளவு, தழாய், தோன்றி, பிடவு, முல்லை முதலியன.

2.6.3. பாலை ( வறண்ட ) நிலத்தைச் சார்ந்தவை

கள்ளி, ஆவிரை, எருக்கு என்பவையும் வேனிற்காலத்தில் மலர்கின்ற இருப்பை, இலவம், குரவம், கோங்கம், பாதிரி, புன்கு, நுணு, வாகை, வேம்பு முதலியன.

2.6.4. மருதம் (ஆற்றங்கரையும் வயலும்) சார்ந்தவை

ஆம்பல், கரும்பு, காஞ்சி, தாமரை, நெல், நொச்சி, பகன்றை, மருதம், வஞ்சி, வேழம் முதலியன.

2.6.5. நெய்தல் ( கடற்கரை ) சார்ந்தவை

அரும்பு, ஞாழல், செருந்தி, தாழை, நெய்தல், புன்னை முதலியன.

## 2.7.0. சங்க இலக்கியத்தில் காணப்படும் மலர்கள்

சங்கப் பாடலுள் இடம்பெற்ற சொற்றொடர்களை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது 138 மலர்களின் நிலையை ஓரளவு சொல்ல முடிகின்றது. சில பூக்களின் பெயரைக் கொண்டு அவற்றின் தன்மையை அறியக்கூடவில்லை. மேலும், இடந்தோறும், காலந்தோறும் மலர்களின் பெயர்கள் வேறுபட வழங்குகின்றன. எனவே, இந்த வரிசையில் ஒரே மலரினை வெவ்வேறு பெயரில் தனித்தனியே குறிப்பிடும் நிலை உள்ளது எனினும் வியப்பில்லை. இவை அகரவரிசையில் கீழே தரப்பட்டுள்ளன.

### 2.7.1. அகத்தி[1]

கோட்டுப்பூ; வெண்மலர்; சூடப்படாது; மணமில்லை. 'பூகமா வாகை' என்று செய்யுள் நயம்பட அகத்தியைக் குறிப்பிடுகிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.[2]

### 2.7.2. அகில்

மலையைச் சார்ந்த கோட்டுப்பூ. 'காழ்வை' என்னும்

---

1. Coronilla grandiflora - J. P. Fabricious' Dictionary, (Tranquebar, South India) 1972, IV Ed.

2. பெரும். 109,110.

பெயரால் குறிஞ்சிப் பாட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[1]

2.7.3. அடும்பு[2]

கடற்கரை மணலில் படரும் கொடி வகைத்து.[3] இளமகளிர் விளையாட்டிற்கும் சூடுதற்கும் பயன்படும்.[4] கடற்கரை நிலம் சார்ந்த பாடலுக்கு அழகுதரும் வகையில் ஆங்காங்கே அடும்பு இடம்பெறக் காணலாம்.[5]

---

1. குறிஞ்சி. 93; பத்துப்பாட்டு, உ.வே.சா. பதிப்பு, பக்.492.
2. Ipomea Biloba
   - பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.137 சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1967, முதற்பதிப்பு.
3. " இருங்கழி பொருத ஈரவெண்மணல்
   மாக்கொடி யடும்பின் மாயித ழலரி " - நற்.145:1-3.
4. " மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
   தார்மணி யன்ன ஒண்பூக் கொழுதி
   ஒண்டொடி மகளிர் வண்டல் அயரும் " - குறுந்.243:1-3.
5. நற். 254:2; 272:2,3; 349:2;
   குறுந். 401:1-3;
   அகம். 80:8;
   குறிஞ்சி. 87;
   பட்டின. 65.

## 2.7.4. அதிரல் [1]

காட்டில் வளரும் கொடி. [2] இளவேனிற் காலத்தில் மலர்வது. [3] மனையுறை மகளிர் சூடும் தகுதியுடையது. [4] வேனில் மலர் ஆகையால் பாலைத்திணைப் பாட்டில் அதிரல் சிறப்புற இடம்பெறுகின்றது. [5] அதிரலின் கூர்முகை குயில் வாயினை நிகர்ப்பது.

## 2.7.5. அரலை

" பிறிதொன்று அரலை சூட்டி [6]
ஏமுற்றன்று இவ்வழுங்க லூரே "

என்று முருக வழிபாட்டின் பொருட்டுக் கடப்ப மரத்துக்கு அரளிமாலை சூட்டியதைக் குறுந்தொகை காட்டுகின்றது. தங்க அரளி என்று

---

1. Wild jasmine, Jasminum Angustifolium, A Dravidian Etymological Dictionary, P.12.
   புனலிப்பு - நச்சினார்க்கினியர் உரை, பத்துப்பாட்டு, உ.வே.சா. பதிப்பு, பக். 490.
   மோசி மல்லிகை - அடியார்க்கு நல்லார் உரை, சிலப். 13:156
   காட்டு மல்லிகை - அரும்பதவுரை, சிலப். 13:156.

2. 'அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்' - முல்லை. 51; அகம். 237:2.

3. 'முதிரா வேனில் எதிரிய அதிரல்' - நற். 337:3;
   'வேனில் அதிரல்' - அகம். 393:25.

4. நற். 52:1,2; அகம். 213:4,5; 223:14; புறம். 269:1-3

5. ஐங். 345:1-3; அகம். 99:5,6; 157:5-8; 261:2; 289:3,4; 391:1,2;

6. புறம். 269:1

சொல்லப்படும் மஞ்சள் வண்ணமலர் கோயில் வழிபாட்டில் மட்டுமே இடம்பெறுவது. வழிபாட்டிற்குரியதாகக் குறிக்கப்பட்ட அரலை, மஞ்சள் வண்ண அரலி என்று கருத இடம் உள்ளது. இது குறுமர வகையது.

2.7.6. அலரி [1]

அலரி என்னும் சொல், பொதுவாக எந்தப் பூவினையும் உணர்த்தும் காரணப் பொதுப்பெயர் ஆக வழங்குகின்றது.

" பைங்காற் பித்திகத்து ஆயிதழ் அலரி " [2]
" தாதவிழ் அலரி " [3]
" காந்தள் தண்கமழ் அலரி " [4]

என வருவன அலரி என்னும் சொல்லின் பொதுமைக்குச் சான்றாகும். எனினும், எத்தனையோ வகைப் பூக்கள் மலரும் நாட்டில், ஒருவகைப் பூவினை அலரி என்று சொல்லும் தன்மையைப் பற்றி என்னும்போது இந்தப் பூ மக்களிடையே பெரிதும் பயன்பட்டது என்று கருதற்கு இடம் உள்ளது. வழிபாட்டுக்கும் மக்கள் சூடுதற்கும் பயன்படும் அலரி மலர் குறுமரத்தில் மலர்வது.

---

1. Oleander, Nerium Odorum, Efg. Dict. P.15.
2. குறுந். 214:5-72
3. குறிஞ்சி. 117
4. குறிஞ்சி. ~~117~~ :149

" பின்னின்கண்
விரிநன்னூல் சுற்றிய ஈரிதழ் அலரி " [1]

" போதவிழ் அலரி நாரின் தொடுத்து " [2]

என வருவன அரலி என்னும் பெயருடைய குறுமரத்தின் வெண்மலர் உணர்த்தும். ஆண்டு முழுமையும் மலர்கள் காணப்படும். சிவந்த மலருடைய அரலியும் உள்ளது. அதைக் கணவிரி என்றும் புலவர் சொல்லியுள்ளனர்.[3]

" எரியிதழ் அலரி " [4]

என்பது அவ்வகையது. அலரி மரங்கள் எந்தக் காலத்திலும் மலர்ந்து காணப்படும். இந்த மலர்கள் வெண்மை, செம்மை, இளஞ்சிவப்பு என்னும் வண்ணங்களில் காணப்படும். மலருக்கு மென்மணமும் உள்ளது.

## 2.7.7. அவரை[5]

மலையிலும் காட்டிலும் வளரும் கொடிவகை. குளிர் காலத்திலும், பனிக்காலத்திலும் மலர்கள் விளங்கும். மலர்களில்

---

1. கலி. 64:2,3
2. புறம். 371:3
3. கணவிரி என்னும் தலைப்பின் கீழ்ப் பார்க்க. 2. 8:26
4. அகம். 191:2
5. Field bean – Dolichus lab lab. Ety. Dict., P. 20.

மணம் இல்லை. வெண்மையும் செம்மையும் நீலமும் என வெவ்வேறு வண்ண மலர்கள் தனித்தனிக் கொடிகளில் அமைந்து காணப்படும். அவரை மலர் சூடப்படுவதில்லை. எனினும் குறிஞ்சிப் பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றுள்ளது.[1] இந்த மலரின் அமைப்பே ஒரு தனிவகை. வட்டவடிவ இதழமைப்போ, அடுக்கு நிலையோ இதில் இல்லை. மலர்ந்த பூவின் நடுவில் உயர்ந்து விளங்கித்தோன்றும் முனை கிளியின் அலகிற்கு உவமையென்று காட்டப்பட்டுள்ளது.[2] முன்பனிக் காலத்தைப் பற்றிய வருணனையில் அவரைப்பூ சிறப்பிடம் பெறக் காணலாம்.[3]

அன்றியும், அவரை என்ற பெயரால் சங்க காலத்தில் மொச்சையும் சொல்லப்பட்டுள்ளது.[4] 'அவரை வான்பழுக்கு '[5] என்பதற்குரிய உரையில் 'வரிகளையுடைய விதை' என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார்.[6] வரிக்குடன் கூடிய விதை எனில்

---

1. 'நெடுங்கொடியவரை' - குறிஞ்சி. 87
2. குறுந். 240:1,2
3. ஐங். 249:3-5; அகம்: 217:9; 243:1; 294:9; சிறுபாண். 164; மதுரை. 292; மலைபடு. 109:110.
4. குறுந். உ.வே.சா. பதிப்பு, நூலாராய்ச்சி, பக். 31, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1962, நான்காம் பதிப்பு.
5. பெரும். 194,195
6. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 368.

பெரும்பயறு ( காராமணி ) என்று சொல்லப்படும் தானிய வகைக்குத்தான் அவ்வாறு உள்ளது. 'பொற்சிளர் அவரை' என்பதுவும் நோக்கத் தகுந்தது.[1] எனவே, சங்க காலத்தில் அவரை என்பது ஓரினப்பட்ட சில தானிய வகைகளுக்கு உரிய பொதுப்பெயர் என்று கருதலாம்.

### 2.7.8. அனிச்சம்[2]

" நறவம் சுள்ளி அருப்பலம் அனிச்சம் "[3]

என்று கோட்டுப்பூ வரிசையில் நிகண்டு குறித்துள்ளது. அனிச்சமலர் மென்மை மிக்கது; நறுமணமுடையது.[4] மாந்தர் சூடும் மலர்.[5] இதன் வண்ணமும் வடிவமும் பற்றி யாதொரு குறிப்பும் சங்க இலக்கியத்தில் இல்லை. கொங்குவேளில் மாக்கதையினின்று அனிச்ச மரத்தின் மலரிதழ் வரிகளையுடையது என்று தெரிய வருகின்றது.[6]

---

1. புறம். 335:5
2. a plant. nolime tangere, J.P.F. Dict. P.45.
3. பிங்கல நிகண்டு. 2680
4. ' மோப்பக் குழையும் அனிச்சம் ' - திருக். 90
5. கலி. 91:1; குறிஞ்சி. 62
6. பெருங். ஆ. 12:12: - ' வரியித ழனிச்சம் ' - பெருங். அ. 51;52

## 2.7.9. ஆத்தி[1]

ஆர் என்றும் சொல்லப்படும். சோழர் குடிக்குரிய அடையாள மாலை என்னும் புகழுக்குரியது இதுவே.[2] கோட்டுப்பூ. மகளிர் இதைச் சூடுவது இயல்பென்று தெரியவில்லை. எனினும், குறிஞ்சிப் பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றது.[3] இந்த மலரின் வண்ணமும் வடிவமும் பற்றிய எச்செய்தியும் சங்க இலக்கியத்துள் இடம்பெறவில்லை.

## 2.7.10. ஆம்பல்[4]

சுனைகளிலும் பொய்கையிலும் வளரும். இரவில் மலரும். வெள்ளாம்பல் சேதாம்பல் என்றும் வண்ண வேறுபாடு உடையது. அல்லி என்று சொல்லப்படுவதும் இதுவே. மலர்கள் மணம் உடையன. சூடப்படும். தழையுடைக்குப் பெரிதும் பயன்படும் பெரும்பாலும்

---

1. Common mountain ebony, Bauhinia racemosa. - Ety. Dict. P. 27.
2. புறம். 45:3,4; 81:3,4; 82:6
3. குறிஞ்சி. 87
4. Water lily; Nymphaea lotus.' Ety. Dict. P. 26

மருதத்திணைப் பாடல்களில் இடம்பெறுவது.[1]

## 2.7.11. ஆரம்

மலைநிலத்துக்குரிய கோட்டுப்பூ. மலர்கள் மணமுடையன. சந்தனம் என்றும் சாந்தம் என்றும் சொல்லப்படும் மரவகை இதுவே.

" சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம் "[2]

என்று மலர்க்கொத்தினைப் பற்றிச் சொல்லப்பட்டது. குறிஞ்சிப் பாட்டின் பூ வரிசையில் ஆரம் என்று குறிக்கப்பட்டுள்ளது.[3]

## 2.7.12. ஆவிரை[4]

வேனிற்காலத்தில் மலர்வது. மணமற்ற மஞ்சள் நிற

---

1. நற். 100:2,3; 230:1-4; 280:1,2; 290:1-3; 345:1-5; குறுந். 46:1,2; 84:5; 117:1; 122:1,2; 178:1-3; 293:5; 300:2; குறுந். 370:1,2;

ஐங். 34:2-4; 57:1,2; 65:1,2; 72:1; 91; 93:2; 96:2; பதிற். 19:20; 62:17; 71:2; பரி. 12:78; 19:75; கலி. 72:6; 75:2; 91:1; அகம். 6:1;

78:18; 136:27; 156:9; 176:14; 316:2,3; 356:18; புறம். 16:14; 61:2; 63:12; 70:12; 209:3,4; 248:1-5; 250:5; புறம்.266:3; 280:12,1 352:5; மதுரை. 252; குறிஞ்சி.62,223; பட்டின. 66.

2. நற். 140:2;
3. குறிஞ்சி. 93.
4. Cassia auriculata : Ety. Dict. P.28.

மலர்களைக் கொண்டது.

" பொன்னேர் ஆவிரைப் புதுமலர் "[1]
" விரிமலர் ஆவிரை "[2]

மக்கள் விரும்பிச் சூடும் தன்மை இதற்கில்லை. மடல் ஏறும் தலைமகன் துயரத்துடன் சூடும் பூக்களில் ஒன்றென இம்மலரும் இடம்பெறுகின்றது.[3] வறண்ட பாலையில் வேறுமலர் கிடைக்காத-போது பாடினி ஆவிரையை அணிந்ததாக அகநானூறு தெரிவிக்கின்றது.[4]

## 2.7.13. இருப்பை

கோட்டுப்பூ. வன்புல வழியில் வேனிற்காலத்தில் மலர்வது. மங்கிய வெண்மை வண்ணமும் உருண்டை வடிவமும் உடையது. நறுமண-மல்லாத ஒருவகை வாசனையுடையது. நடுப்பகுதியில் துளையும் புறத்தே மெல்லிய தும்களும் கொண்ட இனிய மலர். கரடியின் விருப்பத்துக்குரிய உணவு இதுவே. மரையான் முதலிய விலங்குகளாலும்

---

1. குறுந். 173:1
2. குறிஞ்சி. 71
3. கலி. 138:9,18; 139:8; 140:7
4. அகம். 311:11,12.

மக்களாலும் உண்ணப்படும். பாலைத்திணைப் பாடல்களில் இத்தகைய செய்திகள் இடம்பெற்றுள்ளன.[1]

2.7.14. இலவம்[2]

கோட்டுப்பூ. வேனிற்காலத்தில் மலரும். மலைச்சாரிவில் வளர்வது. சிவந்த மலர்களின் தோற்றம் கார்த்திகை விளக்குக்கு உவமையெனக் காட்டப்பட்டுள்ளது.[3] இளவேனிற்கால வருணனையில் இலவ மலர் சிறப்பிடம் பெறுவதைக் காணமுடிகின்றது.[4]

2.7.15. இல்லம்

மனைமரம் என்றும் தேற்று என்றும் சொல்லப்படும் கோட்டுப்பூ. கார்காலத்தில் மலரும். காட்டுநிலம் சார்ந்தது. சூடப்படுவது.[5] முல்லைத்திணைபற்றிச் சொல்லும்போது இதுவும் இடம்பெறக் காணலாம்.[6]

---

1. நற். 111:1,2; அகம். 9:1-9; 15:13,14; 81:2; அகம். 95:5-9; 135:8,9; 149:3,4; 171:13,14; 225:10-12; 247:4,5; 267:6-8; 275:10-12; 321:4,5; 331:1-7; 351:8; புறம். 384:7,8.
2. Red-flowered silk cotton tree, Bombax malabaricum. - Ety. Dict. P.37.
3. அகம். 11:3-6
4. ஐங். 320:1-3; 368:1; பரி. 19:79; கலி. 26:5;
5. 'இல்லமொடுமிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்' - நற். 376:6
6. அகம். 4:1; 364:7; பொருந. 200.

2.7.16. ஈங்கை[1]

இண்டை, இண்டங்கொடி என்றும் சொல்லப்படும். பனிக்காலத்தில் மலர்வது. இதன் அரும்பும் முகையும் மலரும் குறித்த உவமைகள் பல காணப்படுகின்றன.

" ஈங்கை ... ... திரள்வீ ... ...
மணலாடு கழங்கின் அறைமிசைத் தாஅம்"[2]

" அட்டரக்கு உருவின் வட்டுமுகை ஈங்கை;
துய்த்தலைப் புதுமலர் "[3]

" இரங்காழன்ன அரும்புமுதிர் ஈங்கை,
ஆலியன்ன வால்வீ தாஅய் "[4]

" வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப "[5]

எனவரும் உவமைகளிலிருந்து ஈங்கை மலர்களில் வெண்ணிறமும் செந்நிறமும் உண்டு என்று அறியலாம். பனிக்கால வருணனையில்

---

1. A thorny shrub, mimosa rubicaulis - J.P.F. Dict. P.97.

 "இண்டை புலிதொடக்கி ஈகை ஈங்கை
 இண்டென மொழிப இயல்வல்லோரே " - பிங். 2887.

2. நற். 79:1-3
3. நற். 193:1,2;
4. அகம். 125:3,4;
5. அகம். 243:2

ஈங்கைக் கொடியும் மலர்களும் இடம்பெறக் காணலாம்.[1]

2.7.17. உந்தூழ்

பெருமூங்கிற்பூ என்று நச்சினார்க்கினியர்[2] குறிப்பிட்டுள்ளார். மலைநிலம் சார்ந்தது. பனிக்காலத்தில் மலர்வது. மணமுடையது.

" உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ் "[3]

என்றார் கபிலர். இதில் விளையும் நெல் உண்ணுதற்கு உதவும்.[4]

முந்தூழ் என்னும் சொல்லும் மூங்கிலைக் குறிப்பது. உந்தூழ், முந்தூழ் என்னும் சொல்லிரண்டும் ஒன்றையே உணர்த்துவனவோ வேறு என்பது ஆராய்தற்குரியது.

" குறவர் முன்றில்
முந்தூழ் ஆய்மலர் உதிர ...
வாடை தூக்கும் வருபனி அற்சிரம் "[5]

---

1. நற். 181:4,5; 205:9; குறுந். 110:5,6; 380:5,6; கலி. 31:3; அகம். 252:9,10; 294:6; 306:3; குறிஞ்சி. 86.
2. பத்துப்பாட்டு, உ.வே.சா. பதிப்பு, பக். 489
3. குறிஞ்சி. 65
4. மலை. 133.
5. அகம். 78:7,8,10

என்று முந்நூழ் மலர் குறிக்கப்பட்டுள்ளது.

2.7.18. உழிஞை [1]

கொடிப்பூ. புறத்திணையில் சிறப்பிடம் பெறுவது. [2] சிறுபூளை என்றும் இது சொல்லப்படும். [3]

" ... ... போர்வேட்டு
வேறுபல் பூளையொடு உழிஞை சூடி " [4]

என்று கரிகாலன் போர்க்கோலம் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர், " சிறுபூளையும் உண்மையின் வேறுபல் பூளையென்றார் " என்று உரை வகுத்துள்ளார். [5] எனவே, பூளை என்னும் சொல்லின் சூழ்நிலை நோக்கி இன்னது என்பது அறிதல்வேண்டும்.

" குரீஇப்பூளை " என்று குறிஞ்சிப்பாட்டில் குறிக்கப்பட்டுள்ள மலர் இதுவே தானோ என்று ஐயுறும் நிலை உள்ளது. [6] குரீஇ என்பது

---

1. Balloon vine, Cardiospermum halicacabum.
   - Ety. Dict. P.53

2. 'நன்கொடி யுழிஞை' - பதிற். 43:23; புறம்.76:4-6; 77:2,3:

3. ' உழிஞை சிறுபூளை ' - பிங். 2890;
   ' உழிஞை சிறுபூளைப்பேர் ' - சூடாமணி நிகண்டு. 30:4

4. பட்டின. 234,235

5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 557

6. குறிஞ்சி. 72

குறைமையை உணர்த்த வந்த ஓர் அடைமொழியாகக் கொள்ளின் உழிஞை யென்னும் சிறுபூளையே குரீஇப் பூளை எனவும் சொல்லப்பட்டுள்ளது, என்று கொள்ளலாகும்.

சிறுபூளையின் சிறிய வெண்மலர் வரகின் விரிந்து வெந்த சோற்றுக்கு உவமையாகச் சொல்லப்படுகின்றது.[1]

2.7.19. உன்னம்

கோட்டுப்பூ. காட்டு நிலத்தது; சூடப்படுவதன்று; பொன்போலும் பூக்களையுடையது.

" பொன்னின் அன்ன பூவின் சிறியிலைப்
புன்கால் உன்னம் "[2]

என்றார் கபிலர். பகைவரால் அழிவு வருமோ அன்றோ என்னும் நிமித்தத்தினைப் பார்த்து அறிய உதவும் மரம்,[3] என்னும் நம்பிக்கை முன்னோரிடம் நிலவியது.

---

1. ' நெடுங்குரற் பூளைப் பூவின்அன்ன
குறுந்தாள் வரகின் குறள்அவிழ்ச் சொன்றி ' - பெரும்.192,193

2. பதிற். 61:5,6

3. 'புன்கால் உன்னம் சாய ' - பதிற். 40:17;
உன்னம் சாய என்றது என்னொடு போர்க் கருதுவார் நிமித்தம் பார்த்தவழி அவர்க்கு வென்றியின்மையின் கரிந்துகாட்ட என்றவாறு- பழையவுரை, பதிற். உ.வே.சா. பதிப்பு, பக். 94.

உன்ன நிலை - தொல்.பொருள். புறத்.5.-நச்சினர்க்கினியர் உரை
பு.பொ.வெ. 243.

2.7.20. ஊகு [1]

'அம்' என்னும் சாரியைப் பெற்று ஊகம்புல் என்று வழங்கப்படும். மலருக்கு மணமில்லை, சூடப்படாது. நெடியவும் கூரியவும் ஆகிய துய்களின் தொகுப்பே மலர் என உள்ளது. இதன் விரிந்து உலர்ந்த மலர்க்கொத்து அணில்வாலுக்கு உவமை சொல்லப்படுகிறது.

2.7.21. எருக்கு

எங்கும் இயல்பாக வளரும் காட்டுச்செடியாகிய எருக்கின் மலருக்குக் கண்கவர் வண்ணச் சிறப்பும் இல்லை; நறுமணமும் இல்லை; மலர்ந்த பூ என்றாலும் நடுவே மொட்டுப்போன்று உயர்ந்து காணப்படும் உறுப்பினைக் கொண்டது. எனவே,

" குறுமுகிழ் எருக்கங் கண்ணி " [2]

எனவும்,

---

1. 'வேனில் வரியணில் வாலத்தன்ன
கானவூகின் கழன்றுகு முதவீ' - புறம். 307:4,5

2. நற். 220:2,

" குவியிணர்ப் புல்லிலை எருக்கு "[1]

எனவும்,

இதனைப்பற்றிக் குறித்தனர். இதனை மக்கள் விரும்பிச் சூடுவதில்லை. வேறுமலர் கிடைக்காத வறண்ட நிலத்தில், இதுவும் சூடப்படும்.[2] இறைவனுக்கும் சூட்டப்படும்.[3] மடலேறும் தலைமகன் சூடும் மலர் என்று புலவர் கூறியுள்ளனர்.

2.7.22. எருவை

" எருவை பஞ்சாய்க்கோரை யென்ப "

என்று நிகண்டு குறித்துள்ளது.[4] எருவை என்னும் சொல்லுக்குப் பஞ்சாய்க் கோரை, கொறுக்காந்தட்டை, மலர் விசேடம் என்று உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார்.[5] குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்ற 'எருவை'[6]

---

1. புறம். 106:1,2
2. அகம். 311:9,10
3. புறம். 106:1-3
4. கலி. 138:9; கலி. 139:8
5. சேந்தன் திவாகரம், பக். 95
6. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489.

என்பதற்குப் பஞ்சாய்க் கோரை; கொறுக்கைச்சியுமாம் என்றார் நச்சினார்க்கினியர்.[1] நற்றிணையில் இடம்பெற்ற எருவை என்பதற்கும் உரை 'கொறுக்கைச்சி' என்றே குறிக்கப்பட்டுள்ளது.[2]

சங்க இலக்கியத்தில் சாய்,[3] பைஞ்சாய்,[4] இருஞ்சாய்[5] என்று குறிக்கப்படுவதுவே எருவை எனப்படும் புல்வகை என்று கருத இடம் உள்ளது. இவ்வகைக் கோரை நீர்க்கரையிலும் வயற்புறத்தும் வளர்ந்தோங்கும். இதன் மலர் சூடப்படுவது; நறுமணம் உடையது.

> " அருவிதந்த நாட்குரல் எருவை
> கயநாடு யானை கவளம் மாந்தும் "[6]

> " எருவை கோப்ப "[7]

> " எருவை நறுந்தோடு "[8]

எனவரும் பாடல்களில் எருவை என்னும் சொல் விளங்கக் காணலாம்.

---

1. குறிஞ்சி. 68
2. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489
3. நற். மூலமும் உரையும், பக். 272, (சைவ சித்தாந்தக் கழகம், சென்னை), 1967, நான்காம் பதிப்பு.
4. 'சாயும் நெய்தலும் ஓம்புமதி' - நற். 60:9
5. 'சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ' - கலி.76:11
6. 'பைஞ்சாய்க் கோதை மகளிர்' - ஐங். 54:5
7. 'இருஞ்சாயன்ன செருந்தி' - ஐங். 18:1
8. குறுந். 170:2,3; பரி. 18:48; 19:77

2.7.23. எறுழ்

சாரியை பெற்றக்கால் எறுழம் என்று அமையும். மலைச் - சாரலில் வளர்வது.[1] சிவந்த மலர்களையுடையது.[2] கார் நாற்பதில் உள்ள பாட்டினின்று கார்காலத்தில் மலர்வது என்று அறியப்படும்.[3]

2.7.24. ஓமை

கோட்டுப்பூ. வன்புலத்துக்குரிய மரம். குறிஞ்சிப் பாட்டில் 'பாங்கர்' என்று கபிலர் குறித்தற்கு ஓமை என்று நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.[4] இதனையன்றி, ஓமையின் மலர் பற்றிய யாதொரு செய்தியும் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை.

2.7.25. கடம்பு[5]

'மரா, வெண்கடம்பின் பெயராகும்மே'[6] கடப்பமரம் எனப்படுவதும் இதுவே. கார்காலத்தில் மலர்வது. மலர்கள் முருக வழிபாட்டுக்கு உகந்தவை; நறுமணம் உடையவை; தேரின் உருள்

---

1. ஐங். 308:2,3
2. குறிஞ்சி. 66
3. 'கருங்கால் வரகின் பொரிப்போல் அரும்பவிழ்ந்து
   ஈர்ந்தண்புறவில் எறுழ்வீ மலர்ந்தன' - கார்நாற்பது, 28:1,2
4. குறிஞ்சி. 85; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 491
5. Anthocephalus Cadamba. Ety. Dict. P. 81.
6. சேந்தன் திவாகரம், பக். 79

போலும் வடிவம் கொண்டவை.[1] முருகனை சார்ந்த வீரர் கூட்டம் அணிந்த மாலை 'கார் நறுங்கடம்பின் பாசிலைத் தெரியல்' என்று குறிக்கப்பட்டது.[2] முருகப்பெருமான் சூடுவது கடப்ப மாலை.[3] முருகன் விரும்பி உறையும் இடங்களில் 'பூதப்பூங்கடம்பும்' ஒன்று.[4] சேரனை எதிர்த்த கடல்வாழ் பகைவர் கடப்ப மரத்தினைக் காவல் மரமாகக் கொண்டு வாழ்ந்தனர்.[5]

" துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை "

என்றும் சிறுபாண் தொடருக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர்,

" கோதைபோலப் பூத்தலின் கோதை யென்றார் "

என்று காரணம் குறித்தார்.[6] குறும்பூழின் பார்ப்புகள் கடப்ப மலர்களை ஒக்கும் என்றார் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.[7]

---

1. 'உருளிணர்க்கடம்பு' - பரி. 5:81
2. புறம். 23:3
3. நற். 34:8; பரி. 21:11,50; திரு. 9-11. (முருகன் அணிந்த மாலை செங்கடப்ப மாலை என்கிறார் நச்சினார்க்கினியர் பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 34
4. திரு. 225.
5. பதிற். 11:12
6. சிறுபாண். 69, பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 186
7. பெரும். 203-205

2.7.26. கணவிரி ( பார்க்க. அலரி )

கணவீரம் என்றும் சொல்லப்படும்.

" சினைவளர் வேங்கை கணவிரி காந்தள் " [1]

எனவும்,

" பெருந்தண் கணவீர நறுந்தண்மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி " [2]

எனவும், சொல்லினர் புலவர்.

2.7.27. கமுகு [3]

பாக்கு எனப்படும் முதிர்ந்த காய்களைத் தருவது கமுகு. வடிவத்தால் பெரிய புல்வகையது. இதன்மலர் மங்கிய வெண்நிறமுடையது; சூடப்படாது; நறுமணமும் இல்லை. வளமிக்க மருத நிலத்தில் நன்கு வளர்வது.

---

1. பரி. 11:19
2. திரு. 236,237
3. areca palm. Ety. Dict. P. 84.

கமுகின் பாளை விரிந்து தோன்றும் பூதுமலர்க்காட்சி கண்ணுக்கு இனியது. பாளை விரியுமுன், பூ அதற்குரிய கரு ( அரும்பு ) வரிசையுற அமைந்த தோற்றத்தை யாழ்ப்பத்தின் செறிதுளைக்கு உவமித்துள்ளார் உருத்திரங்கண்ணனார். [1]

கமுகின் அரும்பு நிலைமுதல் வீ நிலைவரையுள்ள வளர்ச்சியைத் தக்க உவமைகளுடன் விளக்குவது ஒரு பாட்டு. [2]

2.7.28. கரந்தை [3]

---

கரந்தை என்னும் பெயரால் வழங்கப்பட்ட தாவர வகை ஒன்றல்ல, பல என்று தெரிய வருகின்றது.

புறத்திணையால் புகழ் படைத்தது ஒருவகைக் கரந்தை. மலர்கள் மணமுடையவை; சூடப்படுவன.

" நாகுமுலையன்ன நறும்பூங் கரந்தை
விரகறியாளர் மரபிற் சூட்ட " [4]

---

1. பெரும். 7, 8
2. அகம். 371:1-10
3. Indian globe thistle, Sphaeranthus indicus. - Ety. Dict. P. 90.
4. புறம். 261:13, 14

என்பதனின்று நிரைமீட்டு மாய்ந்தவர் நடுகல்லிற்குக் கரந்தை சூட்டியமை அறியப்படும்.[1] குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையில் இடம்பெற்ற கரந்தைக்கு " நாறு கரந்தை " என்று நச்சினார்க்கினியர் உரை எழுதினார்.[2]

ஒருவகைக் கரந்தை வயல் சார்ந்து வளரும் கொடி; காய்களை உடையது என்று சங்கப்பாடல்களிலிருந்து அறியமுடிகின்றது.

" காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல் "[3]

" கழனிக், கரந்தையஞ் செறு "[4]

எனவும் குறிப்பிட்டனர் புலவர்.

2.7.29. கருப்பு

புல்வகையது; மருத நிலத்தது; மணமற்ற வெண்மலர்களையுடையது.[5]

---

1. அகம். 269:10-13
2. குறிஞ்சி. 76; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490
3. பதிற். 40:5
4. அகம். 226:6
5. 'வான்பூங் கரும்பு ' - குறுந். 149:3;
'விரிபூங் கரும்பின் கழனி ' - பதிற். 13:13

பூக்கள் பனிக்காலத்தில் மலரும். கரும்பின் மலர்த்தொகுதி சேய்மையிலிருந்து நோக்கும்போது அளிக்கும் பல்வகைக் காட்சி அழகுகளையும் புலவர் பெருமக்கள் உவமை சொல்லியுள்ளனர்.[1]

2.7.30. கருவிளை

கருநீல மலர்களையுடைய கொடிவகை. மாரிக்காலத்தில் மலர்வது. மலர்கள் சூடப்படும். அவை நீலமணிக்கு உவமை சொல்லப்படும்.[2] மயிலிறகின் கண்போலும் வடிவ வனப்பும் வண்ணச் சிறப்பும் உடையவை.[3] புதர்போலச் செழித்து மலர்ந்த கொடி காற்றில் அசைவது, தோகை விரித்த மயிலின் அழகினைக் காட்டுவது.[4] முல்லைத்திணைப் பாடல்களில் சிறப்பிடம் பெறுவது.[5]

---

1. நற். 366:6-10; குறுந். 35:2-5; 85:4,5; 149:3; ஐங். 4:4; 12:1; 18:2; 91:4; அகம். 13:23; 217:4,5; 235:12,13; புறம். 35:9,10; 384:2,3; 386:10,11; பட்டின. 162:240.
2. நற். 221:1; குறிஞ்சி. 68
3. குறுந். 110:4;
4. நற். 262:1,2
5. ஐங். 464:1; அகம். 255:11; அகம். 294:3-5.

2.7.31. கல்லகாரம்

சூடப்படும். நீர்ப்பூ.

" கல்லகாரப் பூவாற் கண்ணி தொடுத்தாளை "[1]

என்னும் பரிபாடல் தொடருக்குக் குளிரிப்பூ என்று உரை குறிக்கின்றது.

" எருமணம் கல்லாரம் செங்கழுநீருமாமே "[2]

" கல்லாரம் உற்பலம் செங்கழுநீரே "[3]

" ... ... ... கருங்குவளை
கல்லாரம் எனக்கழற லாகும் "[4]

எனவும் வருவனவற்றால், சுனைப்பூக்களில் சிவப்பும் நீலமும் ஆகிய வண்ணம் கொண்டவற்றையே குளிரி எனவும் கல்லகாரம் எனவும் குறிப்பிட்டனர் என்று புலப்படுகின்றது.

---

1. பரி. 11:103; 'கல்லகாரம் நீர்க்குளிரியென்ப' - திவாகரம், பக். 95
2. பிங். 3013
3. பிங். 3025
4. திவாகரம், பக். 96.

கல்லகாரம் என்பது மருவி கல்லாரம் என்று ஆயிற்று என்பது உய்த்து உணரற்பாற்று.

2.7.32. கவிர்[1]

காட்டுநிலத்தில் இளவேனிற் காலத்தில் மலர்ந்து விளங்கும் கோட்டுப்பூ. செம்மை சான்ற இதழ்களையுடையது.[2] மாந்தர் வாயிதழுக்கும்,[3] கோழிச் சேவலின் கொண்டைக்கும்,[4] உவமையாக வருவது. பாலைத்திணைப் பாடல்களில் சிறப்பிடம் பெறும் கவிர் என்னும் மரவகையினை முருக்கு என்றும் சொல்வர்.[5]

பண்டைப் புலவருள் ஒருசிலர் பாடலில் 'கவிர்' என்னும் சொல்லும்[6] மற்றையார் பாடலில் 'முருக்கு' என்னும் சொல்லும்[7] காணப்படுகின்றன. இந்த மரவகையில் வெண்மலரும் உள்ளது. அது

---

1. Butea Frondosa, Ety. Dict. P.336
2. குறுந். 156:2
3. அகம். 3:15
4. அகம். 367:11
5. கலி. 33:4; அகம். 41:2,3; சிறுபாண். 234,235 (தற்காலத்தில் பாண்டி நாட்டில் முள்முருங்கை என்றும், தொண்டை நாட்டில் கலியாண முருங்கை என்றும் சொல்லப்படுவது இதுவே)
6. குறுந். 156:2; பதிற். 11:21; அகம். 3:15; 367:11
7. கலி. 33:4; அகம். 41:2,3; 229:16,17; 277:15-17 317:4-7; 362:5.

நாரையின் தூவிக்கு உவமையாகச் சொல்லப்படுகிறது.[1] சேவற்-கோழியின் கொண்டைக்கு உவமையாகச் செந்நிறமலர்கள் சொல்லப்பட்டன.[2]

முருக்க மலர்களைக் குயில் கொழுதுதல் இயல்பு.[3]

" குயில்குடைந்ததிர்த்த புதுப்பூஞ் செம்மல் "[4]

என்பதில் இன்ன பூ என்று சொல்லப்படாவிடினும், வேனிற்காலக் காட்டு வழியில் முருக்க மணியினையே அது குறிக்கும் என்பது உய்த்து உணர்தற்கு உரியது.

பூன்முருக்கு என்று சொல்லப்படும் ' பலாசம் ' இதனின்று வேறுபட்ட மற்றொரு வகை மரம்.[5]

2.7.33. களா

காட்டில் செழிக்கும் புதர் வகையது. கார்காலத்தில்

---

1. குறுந். 103:2,3
2. புறம். 326:6
3. அகம். 229:16,17
4. சிறுபாண். 4,5
5. Erythrina Indica, J.P.F. Dict. P.81.

மலர்வது. மலர்கள் மணமுடையவை. சூடப்படுதலில்லை.

" வைந்நுதிக்
களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்
கார்செயல் செய்த காமர் காலை "

என்றார்.

2.7.34. கள்ளி

வறண்ட நிலத்தில் வளரக்கூடிய பல தாவரங்களை உள்ளடக்கிய ஓரினப் பெயர். ஒருவகைக் கள்ளியின் வண்ணமலர்க் கொத்தினைச் சிறிது சேய்மையிலிருந்து நோக்கினால் சிரல் என்னும் பறவையின் தலையை ஒத்துக் காட்சியளிக்கும் என்பதைச் 'சிரற்றலைக் கள்ளி' [1] என்னும் தொடரால் அறியலாம்.

2.7.35. காஞ்சி

இளவேனிற் காலத்தில் மலரும் கோட்டுப்பூ. ஆற்றோரத்தில் செழித்து வளர்வது. மருதநிலம் சார்ந்தது. மலர்கள் மணமுடையன; சூடப்படுவன; பூந்தாதும் விரும்பி அணியப்படும். [2]

---

1. நற். 169:4; " கள்ளிக்கிளை தன் மலரால் சிரல் பறவை போன்று தோன்றுதலைக் கண்டறிக " - பொ.வே.சோ. விளக்கவுரை, நற்றிணை, பக். 294. (சைவ சித்தாந்தக் கழகப் பதிப்பு, சென்னை ), 1967, நான்காம் பதிப்பு.

2. குறுந். 10:2-4; அகம். 296:1-3

" மீனேற்றுக் கொடியோன்போல் மிஞிறார்க்கும் காஞ்சியும் " [1]

என்பதனின்று பூக்கள் கருநீல வண்ணம் உடையவை என்பது அறியப்படும். காஞ்சிப்பூக்கள் மாலை தொடுத்தாற்போல மலர்வன என்கிறார் நத்தத்தனார்.

" நறும்பூங் கோதை தொடுத்த நாட்கினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி " [2]

இதற்கு, " நாட்காலத்தே மாலை கட்டினாற்போல இடையறுமல் தொடுத்த நறிய பூக்களையுடைய சிறிய கொம்புகளையும் குறிய தாளினையுமுடைய காஞ்சிமரம் " என்று உரை எழுதினார் நச்சினார்க்கினியர். [3]

" காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி " [4]

என்னும் புறப்பாடில் அடிக்கு, ' காஞ்சித்தளிருடன் ஆத்திப்பூவை

---

1. கலி. 26:3

2. சிறுபாண். 178,179

3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 167

4. புறம். 344:8, ஔவை சு, துரைசாமியவர்கள் உரை, புறநானூறு, பக். 288 ( சைவ சித்தாந்தக் கழகப்பதிப்பு, சென்னை ) 1968, நான்காம் பதிப்பு.

விரவித் தொடுத்த கண்ணி ' என்றுர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. இந்தக் கண்ணி ஆண் சூடியது என்று ஐயுறுதற்குரியது. பாடலடிகள் சில சிதைந்தமையால் தெளிவாகத் தெரிதற்கில்லை.

இளவேனிற் வரவு உணர்த்தும் பாலைத்திணைப் பாட்டிலும் மருதத்திணை பற்றிய பாடல்களிலும் காஞ்சி பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன.[1]

2.7.36. காந்தள்[2]

மலையைச் சார்ந்து வளரும் கொடி. கிழங்கினின்று வளரும்; தரையில் பற்றிப் படரும்,[3] மாரிக்காலத்தில் மலர்வது.

2.7.36.1. காந்தளும் கோடலும்

காந்தள் என்னும் சொல் பெரும்பாலும் செங்காந்தள் என்பதையே உணர்த்தும். வெண்காந்தள் என்று சொல்லப்படும்

---

1. ஐங். 1:4; அகம். 25:3,4; 56:6; 246:6; 366:8,9; 341:9,10:

" நீர்த்தாழ்ந்த குறுங் காஞ்சிப்
பூக்கானு உம் இனவாளை " - புறம். 18:7,8.

2. Gloriosa Superba, Malabar glory Lily - Ety. Dict. P.98

3. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.64

மற்றொரு மலர் வகையைக் ' கோடல் ' என்று குறித்தனர். எனினும், ஒருசில இடத்து இவை தடுமாறி வழங்கலும் உண்டு.

" உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள் " [1]

" வளையுடைந்தன்ன வள்ளிதழ்க் காந்தள் " [2]

என வருவன வெண்காந்தளை உணர்த்துவன.

" கோடற் குவிமுகை அங்கை அவிழ " [3]

" வெஞ்சின அரவின் பையணந் தன்ன
தண்கமழ் கோடல் தாதுபிணி யவிழ " [4]

என்னும் இவற்றில், ' கோடல் ' என்னும் சொல் செங்காந்தளைக் குறிக்கின்றது.

2.7.36.2. செங்காந்தள்

செங்காந்தள் மலர்கள் மணங்கமழும் இயல்பின. மக்கள் விரும்பிச் சூடத்தகுவன.

---

1. புறம். 90:1.
2. மலை. 519
3. முல்லை. 95.
4. அகம். 154:6,7.

" குருதிப்பூவின் குலைக் காந்தட்டே "[1]

"காந்தள் கடிகமழும் கண்வாங் கிருஞ்சிலம்பு "[2]

" சுடர்ப்பூங் காந்தள் "[3]

"—

எனவரும் தொடர்கள் காந்தளின், வண்ணமும் வனப்பும் காட்டுவன.

காந்தளின் முகையும் போதும் மலரும் பலவகை உவமைகளாய்ப் பயன்பட்டுள்ளன.

முகை - கூப்பிய கை,[4] புறங்கையின் விரல் தோற்றம்,[5]
முகை நெகிழும் மடல் - படமெடுத்த பாம்புத் தலை,[6]
விரிமலர் - உள்ளங்கையின் பிரிந்த விரல்கள்,[7]

" மொக்கு மலரும் பருவத்தில் நுனியில் மட்டும் மலரிதழ் சிவந்து காணப்படும் "[8]

என்பதவும்,

---

1. குறுந். 1:4;
2. கலி. 39:13
3. திரு. 43
4. பட்டின. 153,154
5. புறம். 144:8,9
6. பெரும். 153,154
7. பரி. 19:76
8. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.6

" கொன்ற யானைக் கோடு கண்டன்ன
செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள் " [1]

என்னும் செய்யுளும் ஒப்புநோக்கி உணர்தற்கு உரியன.

" காந்தள் பூவின் மொக்கு நீண்டு சிறிது நுனி வளைந்து
கூர்மையாகக் காணப்படும் " [2]

என்பதுடன்;

" புகர்நுதல் புண்செய்த புய்கோடுபோல
உயர்முகை நறுங் காந்தள் நாடோறும் பூத்தீன " [3]

என்னும் பாட்டு ஒருங்கு நோக்கி இன்புறத்தக்கது.

" கோடற் குவிமுகை அங்கை அவிழ " [4]

" செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்ப " [5]

என்றும், புலவர் சொல்லியவை யாங்கனம் பொருந்தும் என்பதைப் பின்வரும் வருணனையால் அறியலாம்.

---

1. நற். 294:6,7
2. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.66
3. கலி. 53:4,5
4. முல்லை. 95
5. சிறுபாண். 167

" பூவில் ஆறு அழகிய பூவிதழ்கள் பிரிவுகளோடு இருக்கும். பூக்கும்போது இவ்விதழ்கள் இளம்பச்சை நிறமாகவும், பின்னர் மஞ்சளாகவும் சிச்சிலி நிறமாகவும், இறுதியில் சிவப்பு, கருஞ்சிவப்பாகவும் மாறுவது வியப்பூட்டுவதாகும். மற்றும், இதழ்களின் அடிப்பகுதி ஒரு நிறமாகவும், நடுப்பகுதி வேறு நிறமாகவும், நுனிப்பகுதி பிறிதொரு நிறமாகவும் ஓரங்கள் வெவ்வேறு நிறமாகவும் காணப்படுவது இப்பூவின் தனித்தன்மையாகும் " [1]

மகளிர் கைவிரலுக்கும் நகத்துக்கும் செயற்கைச் சிவப்பூட்டிய கோலமும் மேற்காட்டிய பூவிதழ் வருணனையும் முற்றிலும் பொருந்துதல் நோக்கி மகிழ்த்தக்கது.

மலைச்சாரலுக்கும் குறிஞ்சித் திணைப் பாடலுக்கும் அழகு செய்வன செங்காந்தள் மலர்கள்.[2]

---

1. பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், பக். 65.

2. நற். 14:6,7; 17:10; 34:2,3; 176:5,6; 185:8; 188:1-5; 294:6-8; 313:6,7; 355:1-3; 359:1-3; 379:11-13; 399:2; குறு. 1:4; 84:4; 167:1; 185:5-7; 259:2,3; 284:1-3; 361:1-5; ஐங். 293:1,2; பதிற். 30:9; 67:19,20; பரி. 18:34-37; 19:76; 20:97-100; கலி. 39:15; 40:11-13; 43:8,9; 45:2; 53:3-5; 59:3,4; அகம். 4:10,11; 18:15; 78:8,9; 92:9; 132:10-1 138:17; 152:17,18; 238:15-18; 338:7; திரு. 43,44; சிறுபாண். 167; பெரும். 372,373; குறிஞ்சி. 61,62,196,197; பட்டின. 152-154; மலை. 145-150,159,336.

## 2.7.36.3. காந்தளும் தோன்றியும்

இடந்தோறும் காலந்தோறும் பெயர்கள் மாறுபட வழங்குதல் உலக இயல்பு. நிகண்டுகள் எல்லாப் பெயரையும் ஒருங்கே காட்டும் பண்புடையன.

" தோன்றி பற்றை இலாங்கலி செங்காந்தள் " [1]

" கோடல் தோன்றி கோடை வெண்காந்தள் " [2]

செங்காந்தளை மேந்தோன்றி என்று மலை நாட்டினர் சொல்லுவர் என்று திரு. பி.எல்.சாமி, குறிப்பிட்டுள்ளார். [3]

ஆயினும், காந்தளின்று வேறுபட்ட தோன்றி மலர் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது என்று கருதக்கூடிய சான்றுகள் சில உள.

" கோடற் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்ப " [4]

அங்கை அவிழ்ந்து விரல்கள் விரிவதனை ஒத்துக் காட்சியளிப்பது

---

1. பிங். 2892
2. பிங். 2893
3. ~~அசிசு~~ பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக். 73,74
4. முல்லை. 95,96

செங்காந்தள் மலர். எனவே, 'தோடார் தோன்றி' என்பது செங்காந்தள் அல்லாத மற்றொரு சிவப்புப் பூ என்பது புலனாகும்.

குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில் முதலில் உள்ளது செங்காந்தள்.[1] 'கோடல்' என்று வெண்காந்தளும் தனியே குறிக்கப்படுகிறது.[2] 'சுடர்ப்பூந் தோன்றி'[3] என மற்றொரு பூவும் சொல்லப்பட்டுள்ளது. இதனின்று தோன்றி என்பது வெண்காந்தளும் செங்காந்தளும் அல்லாத வேறுமலர் என்று கொள்ளலாம்.

பரிபாடலில் காந்தள், தோன்றி என்னும் மலர்களை அடுத்தடுத்துத் தனித்தனியே தெரிவிக்கும் நிலையை இருவேறு இடத்தே காணமுடிகின்றது.

" சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்
தாய தோன்றி தீயென மலரா "[4]

" நீரயற்கலித்த நெரிமுகைக் காந்தள்
வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடுகொடிப் பிறந்த மென்றழைத் தோன்றிப்
பவளத் தன்ன செம்பூ "[5]

---

1. குறிஞ்சி. 61,62
2. குறிஞ்சி. 83
3. குறிஞ்சி. 90
4. பரி. 11:19,20
5. பரி. 14:13-16

மேற்காட்டிய பாடலடிகளை நோக்கும்போது காந்தளும் தோன்றியும் ஒரு பொருள் குறித்த பலசொல் என்று கொள்வது எல்லா இடத்திலும் ஏற்புடைத்தென்று தோன்றவில்லை. காந்தள், தோன்றி என்னும் இருவேறு சொற்களும் வெவ்வேறு பூக்களின் பெயர் என்று கொள்வதே பொருத்தமென்று புலப்படுகின்றது.

சிலைமொழி வழக்காறுகளை எல்லாம் கூட்டிச் சேர்த்துச் சொல்வது நிகண்டுகளின் வழக்கம், காந்தள் என்னும் சொல்லைப் பயன்படுத்தாத நாட்டில் தோன்றி என்பது காந்தளைக் குறிக்க வழங்கியிருத்தல் இயல்பு. காந்தள் உயர்ந்த மலைச்சாரலுக்கு உரியது என்பதனாலும், அதன் அழகு மேன்மையைக் குறித்தும், மலையாள நாட்டில் ' மேந்தோன்றி ' என்று அதனை வழங்கியிருத்தல் கூடும். ( பிற்காலத்தில் எழுந்த கல்லாடம் என்னும் நூலில் நிகண்டினைத் தழுவி,

" காலங்கருதித் தோன்றி கைகுலைப்ப " 1

என்று கைபோல் மலரும் செங்காந்தளைத் தோன்றி என்னும் சொல்லினால் ஆசிரியர் குறித்துள்ளார்.)

சங்கத்தமிழைப் பொறுத்தவரையில், முல்லை நிலத்தில் கார் காலத்தில் மலரும் செடிகொடிகளில் தோன்றியும் ஒன்றென அமைந்து

---

1. கல். 20.7

கிடக்கின்றது. இறையனார் களவியலுரையில் கருப்பொருட்களைச் சொல்லுமிடத்துக் காந்தள் குறிஞ்சிக்குரிய பூ என்றும், தோன்றி முல்லைக்குரியது என்றும் குறித்துள்ளார்.[1] எனவே, காந்தள் வேறு, தோன்றி வேறு என்பதே சங்க இலக்கிய வழக்காறு என்பது தெளிவாகும்.

2.7.37. காயா[2]

" காசை பூவை காயா வாகும் "[3]

என்பது நிகண்டில் சொல்லப்பட்டது. காட்டு நிலத்தில் வளரும் கோட்டுப்பூ. மாரிக்காலத்தில் மலரும் மலர்கள் நீலமணி வண்ணம் உடையன. சூடப்படும். பூவை என்னும் சொல்லினைப் பரிபாடலில் காணமுடிகின்றது.[4] மலர்செறிந்த மரக்கிளை மயிலின் கழுத்தைப் போல் வனப்புடன் தோன்றும்.

" புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயி லெருத்தின் தோன்றும் "[5] எனவும்,

---

1. இறையனார் அகப்பொருள் மூலமும் பழைய உரையும், பக். 21, 22
2. Kāyā, Kācā - iron wood tree.
   Kāyāvu - the blue flowered memecylon tinctorium, - Ety. Dict. P. 104
3. திவா. பக். 80
4. பரி. 3:73; பரி. 4:29
5. குறுந். 183:5,6

" கருநனைக் காயாக் கணமயில் அவிழ " [1] எனவும்,

இந்த ஒப்புமை குறிக்கப்பட்டது. முல்லைத்திணைப் பாடல்களுக்கு அழகு சேர்க்கும் மலர்களில் காயாவும் ஒன்று என்று தெரியவருகின்றது.[2]

2.7.38. குடசம்[3]

" குடசம் வெட்பாலை ",[4]

" குடசம் கிரிமல்லிகை வெட்பாலை "[5]

என நிகண்டுகள் தெரிவிக்கின்றன.

" வான்பூங்குடசம் "[6] என்றார் கபிலர். நறுமணமும் வெண்ணிறமும் உடைய கோட்டுப்பூ. மலர்கள் சூடப்படும்.[7]

---

1. சிறுபாண். 165
2. நற். 242:3,4; 371:1,2; குறுந். 183:59; ஐங். 412: 420:1,2; கலி. 101:5; 103:1,52; 108:10,42; அகம். 14:2-4; 133:8; 134:3; 374:13,14; பொருந. 201

   " செறியிலைக் காயா அஞ்சனம் மலர " - முல்லை. 93
   " பல்லிணர்க் காயா " - குறிஞ்சி. 70
3. Holarrhena antidysenterica - Ety. Dict. P.114.
4. திவா. பக். 78
5. பிங். 2829
6. குறிஞ்சி. 67
7. சிலப். 13:157; 14:87

## 2.7.39. குமிழ்

கோட்டுப்பூ. மஞ்சள் வண்ணமலர்களை உடையது குமிழ மரம். குமிழ மலர் மாந்தர் மூக்கின் வடிவம் பெற்றதனை இளங்கோவடிகள் நயம்படக் காட்டியுள்ளார்.[1] குமிழ மலர்கள் வேனிற் காலத்தில் மலர்வன.[2] குமிழ மரத்தின் கனி மானுக்கும்,[3] ஆட்டுக்கும்,[4] உணவாகும், என்பதையும் புலவர்கள் தெரிவித்துள்ளனர்.

## 2.7.40. குரவம்[5]

குரவம், குரவு, குரா என்பவை பொருள் வேறுபடாத சொற்கள். காட்டுநிலம் சார்ந்தது. மரமென்று சொல்லமுடியாது. குற்றுச்செடி என்றார்.[6] சிறிய வெண்ணிய மலர்களை யுடையது.[7]

---

1. சிலப். 5:215

2. " ஊசல் ஒண்குழை உடையுவாய்த் தன்ன
அத்தக் குமிழின் ஆயித மலரி
கல்லறை வரிக்கும் புல்லென் குன்றம் "
— நற். 286:1-3

("குமிழின் பூப் பொன்செய் குழையின் துணர் தூங்க " என்பது ஒப்புநோக்கற்குரியது ) - கார்நாற்பது, 28:1,2

3. நற். 6:7,8

4. புறம். 324:9,10

5. Wehra corymbosa - J.P.F. Dict. P. 269
Chomelia Asiatica (or) Webra Corymbosa.
- பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.184

6. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.184

7. குரவு மலர்ந்து, அற்சிரம் நீங்கிய அரும்பதவேனில்; -அகம். 97:16

மலர்கள் மணமுடையவை.[1] இளவேனிற் காலத்தில் மலரும்.[2] சூடப்படுபவை. பல்லிணர்க் குரவம் என்றார் கபிலர்.[3]

இளமகளிர் விளையாட்டுக்குப் பாவையாகக் குரவ மலர்கள் பயன்பட்டன.

" நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப்பாவை கொய்யும் பொழுதே " [4]

என்றார் ஓதலாந்தையார்.

இளவேனில் இயல்பினைக் காட்டும் பாலைத்திணைப் பாடல்களில் ஆங்காங்கே குரவமும் இடம்பெறுகின்றது.[5]

2.7.41. குரீஇப்பூளை

கபிலரது குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில் குரீஇப் பூளை என்பதுவும் இடம்பெற்றுள்ளது.[6] குரீஇப் பூளை என்பதும் சிறுபூளை

---

1. ' அரவு எயிற்றன்ன அரும்பு முதிர் குரவின் ' - அகம். 237:3,4
2. ' குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீய ' - நற். 56:1,2
3. குறிஞ்சி. 69
4. ஐங். 344:1-3
5. ' கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த
குறுங்கால் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை யிடைமகன் சூடப் பூக்கும் ' - நற். 266:1-3
6. குறிஞ்சி. 72

என்று சொல்லப்படும் உழிஞையும் ஒன்றோ வேறோ என்பது அறிஞர் ஆராய்ச்சிக்குரியது.

2.7.42. குருகிலை

சங்கப் பாடலில் அருகிக் காணப்படும் பெயர்களில் இதுவும் ஒன்று. 'குருகிலை யுதிர' என்று பரிபாடல் குறித்தது.[1] கபிலரது குறிஞ்சிப்பாட்டிலும் இடம்பெற்றது.[2] நச்சினார்க்கினியர் உரை இதனை 'முருக்கிலை' என்று தெரிவிக்கின்றது.[3]

வெற்றிலை, புகையிலை, தேயிலை என்னும் சொற்களைப் போலவே சினைப்பெயரே முதற்பெயர்த் தன்மை அடைந்த நிலையில் ஏற்பட்ட சொல் வழக்காறே குருகிலை என்று கொள்வதில் இழுக்கில்லை. மருக்கொழுந்தைப் போலச் சூடுவதற்குப் பயன்படும் இலையைத்தான் இச்சொல் உணர்த்தும் என்று கொள்ளுதலும் கூடும். எனினும், குருகிலை என்பது தாவரத்தின் பெயரே என்பதை உறுதிப்படுத்தற்குரியவாறு பதினெண் கீழ்க்கணக்கின் தொடர்கள் சில அமைந்துள்ளன.[4] மூன்று புலவர்களின் பாட்டில் நான்கு இடங்களிலும்

---

1. பரி. 15:41
2. குறிஞ்சி. 74
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489
4. 'குருகிலை பூத்தன கானம்' - கார் நாற்பது 27:2

   'அஞ்சனக் காயா மலரக் குருகிலை
   ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொள' - திணைமொழி ஐம்பது, 21:1,2

   'அருவி யதிரக் குருகிலை பூப்ப' - திணைமொழி ஐம்பது, 30

குருசிலை என்றே காணப்படுவதனாலும்,

" குருசிலை பூத்தன "
" குருசிலை பூப்ப "

என்று வருவதனாலும் அப்பெயர் மலருக்குரிய தாவரத்தை உணர்த்தும் என்று அறிந்து தெளிய வழியுண்டு.

மேற்காட்டியவற்றால், கார்காலத்தில் காட்டு நிலத்தில் வெண்மலர்களுடன் திகழ்வது குருசிலை என்பது உணரப்படும்.

2.7.43. குருக்கத்தி [1]

" குருகே மாதவி குருக்கத்தியாகும் " என்று நிகண்டு தெரிவிக்கின்றது. [2] மாதவி என்பது " வசந்தகால மல்லிகை " என்பர். [3] இளவேனிற்காலத்தில் மலரும் கொடிப்பூ. [4] மணமுள்ள வெண்ணிற மலர்கள் சூடப்படும்.

குருக்கத்தி, [5] பைங்குருக்கத்தி, [6] பாசிலைக் குருகு, [7]

---

1. Hiptage Madablata.
—பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.180

2. திவா. பக். 79
3. பக்.619, குருக்கத்தி என்று ஒரு மரமும் உள்ளது. J.P.F. Dict. P.619
4. நற். 97:6, பெரும். 375,376
5. பரி. 11:79
6. குறிஞ்சி. 92
7. பெரும். 376

என்று இதனைப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

2.7.44. குருந்து [1]

" புன எலுமிச்சை குருந்தெனப் புகலுவர் " [2]

காட்டு நிலத்துக்குரிய கோட்டுப்பூ. கார்காலத்தில் மலர்வது. மலர்கள் சூடப்படும். " மாயிருங் குருந்து " [3] என்றார் கபிலர். கரிய பெரிய குருந்தம்பூ என்றார் உரையாசிரியர். [4]

" ... குருந்தே முல்லையென்
றிந்நான்கல்லது பூவுமில்லை " [5]

என்று புறப்பாட்டில் சொல்லப்பட்டது. முல்லைத்திணைக்குரிய பாடல்களில் இடம்பெறுகின்றது. [6]

---

1. Atlantia racemosa; Atlantia missionis - Ety. Dict. P. 121.
2. பிங். 2777
3. குறிஞ்சி. 95
4. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492
5. புறம். 335:3
6. நற். 321:9; ஐங். 439:2; கலி. 103:3; 113:25

## 2.7.45. குல்லை

கஞ்சங் குல்லை என்றும் சொல்லப்படும்.[1] காட்டுநிலத்துக்கு உரியது.

" குல்லை புனற்றுளசி "[2]

" சிந்து ரமும் குல்லையும் செச்சையும் வெட்சி "[3]

என்று நிகண்டில் இருவேறு செய்தி உள்ளமையால், குல்லை என்னும் சொல் வெவ்வேறிடத்தில் வேறுபட்ட பொருளை யுணர்த்தியது என்று அறியலாம்.

குல்லையின் இலைக்கொத்தும் நறுமணம் உடையது. இலையுடன் சேர்த்தே மலர்க்கொத்தும் தொடுத்து அணியப்படும்.

" முடித்த குல்லை இலையுடை நறும்பூ "[4]

என்கிறார் நக்கீரனார்.

---

1. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 34
2. பிங். 2889
3. பிங். 2691
4. திரு. 201

வடுகர் குல்லைக் கண்ணியையுடையர் என்று சங்கப் புலவர்கள் தெரிவித்துள்ளனர்.[1] குறிஞ்சிப்பாட்டிலும், வேறுசில இடத்தும் புலவர் இதைப்பற்றித் தெரிவித்துள்ளனர்.[2]

2.7.46. குவளை[3]

சுனைப்பூ. பகலில் மலரும்; மாலையில் கூம்பும். நறுமணமுடைய மலர்கள் சூடப்படும். பகலில் மலரும் இயல்புடைய நீலமலருக்கும் செம்மலருக்கும் உரிய பொதுச்சொல் குவளை என்பது. ஏற்ற அடைமொழியாலும் ஏனைச் சூழ்நிலையாலும் இன்ன வண்ணம் என்பது தெளிந்து உணரப்படும்.

" சிறு செங்குவளை "[4] என்றார் காக்கை பாடினியார் நச்செள்ளையார்.

" தண்கயக்குவளை "[5] என்பதற்கு நச்சினார்க்கினியர் "செங்கழுநீர்" என்று உரை எழுதினார்.[6]

---

1. குறுந். 11:5
2. குறிஞ்சி. 78, நற். 376:5; பரி. 12:79; கலி.103:3
3. " நீலோற்பலம் இந்தீவரம் குவலயம்
   நீலம்பானல் காவி கருங்குவளை
   கல்லாரமும் எனக் கழறலாகும் " - திவா. பக்.96
4. பதிற். 52:22
5. குறிஞ்சி. 62
6. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 488

கழுநீர், காவி என்னும் சொற்கள் பொதுவாகச் சிவந்த மலரினைக் குறிப்பன.[1] நீலம், குவளை என்பவை அடைமொழியின்றி யில்லாவிடில் கரிய மலரினை உணர்த்தும். நீலம் என்றும் பண்பாகு- பெயர் சில இடங்களில் அமைந்துள்ளது.[2] குவளை என்னும் சொல் சங்க இலக்கியத்தில் பயின்று வழங்குவது.[3] எனினும்,

---

1. " அல்லி கழுநீர் அரவிந்தம் ... " - பரி. 12:78
" காவி வருந்த " - கலி. 131:37
" மாமலர் மணியுரு இழந்த அணியழிதோற்றம் " - அகம். 5:24,2

என்பதற்குப் " பவளம் போலும் உருவினை யிழந்த பொலிவற்ற காட்சி " என்று உரை அமைந்துள்ளது.
" கள் நாறு காவி...மலரும் " - அகம். 150:11
" வள்ளிதழ்க் கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை " -சிறுபாண். 41
" அரக்கிதழ்க் குவளையொடு நீலம் நீடி " - பெரும். 293
" கழுநீர் பொலிந்த கண்கள் பொய்கை " - மதுரை. 171
" ஆயிதழ்த், தண்ணறுங் கழுநீர் துணைப்ப " - மதுரை.550,551

2. நற். 161:2, 357:7-9, 379:8,9; குறுந். 110:3, 366:4, பரி. 5:48, 15:30; கலி. 7:11, 14:2, 25:20, 48:15, 64:20, கலி. 66:1, 85:15,16

91:1, 96:5, அகம். 38:10,11, 138:5, 143:14,15 149, 17,18, 270:1, 302:5, 357:14, புறம்.111:3 மதுரை. 251.

3. நற். 6:1-3, 37:4,5, 77:12, 105:8,9, 119:8, 160:8-10, 332:2, 367:8, 376:5, குறுந். 13:5, 30:4,5, 62:2, 167:3, 300:1, 342:5, 388:1,2,

ஐங். 300:2,3, பதிற். 58:2, பரி. 11:97,101,102, அகம். 19,10,11, 27:13,14-17, 36:3,4, 38:2, 56:4,5, 62:4,5, 125:5,6, 128:9, 129:16,

138:2, 156:8, 165:11, 179:12, 180:5-7, 183:1, 216:9, 223:14,15, 228:4, 285:13, 308:11,12, 310:5, 358:5,6, 361:2, 381:18-21

395:1-3, புறம். 42:16, 105:2,3, 116:1, 348:6, மதுரை. 566,567, பட்டின. 241, மலை.251.

" வாண்முகம் ஒப்ப மலர்ந்த குவளை " [1]

" பறியாக்குவளை " [2]

" நிரையிதழ்க் குவளைக் கடிவீ " [3]

என வருமிடங்களில், சுனைப்பூ இனம் என்னும் ஒருபுடை ஒப்புமையான், தாமரையினை அச்சொல் உணர்த்தியது என்று கொள்ளும் தன்மையும் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## 2.7.47. குளவி [4]

கொடிப்பூ. மலைச்சாரல் சார்ந்து வளர்வது. குளவி என்பது காட்டு மல்லிகை. தாளிப்பூ என்றும் தெரிவித்துள்ளனர்; உ.வே.சா. [5] மலர்கள் மணமுடையன. சூடப்படும். 'கமழும் குளவி' என்கிறார்; குமட்டூர்க் கண்ணனார். [6] குறிஞ்சித்திணை பற்றிய வருணனையில் இடம்பெறுவது.[7]

---

1. கலி. 64:15
2. நற். 34:2;
3. மலை. 189
4. 'குளவி மலைப் பச்சை' - பிங். 2953
   மலைப்பச்சை - குளவி; a kind of wild jasmine with red flowers. - J.P.F. Dict. P.611
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 721
6. பதிற். 12:10
7. நற். 346:9-11; 376:5; அகம். 272:8; திரு.191; 'குளவிப் பள்ளிப்பாயல் கொள்ளும்' - சிறுபாண். 46; குறிஞ்சி. 76

2.7.48. குறிஞ்சி [1]

12 ஆண்டுகட்கு ஒருமுறை மலரும் தனித்தன்மை வாய்ந்த தாவரம். உயர்மலைச் சாரலுக்கு உரியது. பல வண்ணப்பூக்களை உடையது.

" பெருங்குறிஞ்சி "
" பொன்வண்ணக் குறிஞ்சி "
" குரவகம் வாடாக் குறிஞ்சி யென்ப "
" பாணம் நீலி மழை வண்ணக் குறிஞ்சி "
" நீடு தீண்டியம் பவளக் குறிஞ்சி "

என்று ஐவகைகளை நிகண்டு குறிப்பிடுகின்றது. [2]

பல ஆண்டுகளுக்கு ஒருமுறை மலர்வதனால் குறிஞ்சி மலர் நடைமுறை வாழ்வில் பெரிதும் இடம்பெறுதற்கில்லை. எனவே, இலக்கியத்தில் அருகியே இடம்பெற்றுள்ளது. [3] குறிஞ்சி மலர்களின்

---

1. Strobilanthes wallicchi.
-பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.32

2. பிங். 2696 - 2700

3. " கருங்கோற் குறிஞ்சி மதனில வான்பூ " - நற். 268:3,
" நீண்மலைக் கலித்த கருங்கோற் குறிஞ்சி
நாண்மலர் புரையும் மேனி " - நற். 301:1,2

தேன் குறிப்பிடத்தக்கது.[1] முருகனை வழிபடும் பூசாரி குறிஞ்சி மலர் சூடினன் என்கிறார் மாங்குடி மருதனார்.[2] மகளிர் சூடுவதை இளங்கோவடிகள் தெரிவித்துள்ளார்.[3] குன்றத்தைப் பற்றிய பாடல்களில் இடம்பெறுவது.[4]

2.7.49. குறுநறுங்கண்ணி அல்லது குன்றிப்பூ

குறிஞ்சிப்பாட்டில் கபிலர் " குறுநறுங்கண்ணி " என்று குறிப்பிடுகிறார்.[5] குன்றிப்பூவினைப் பற்றி,

" மணிப்பொறிக்
குரலங்குன்றி கொள்ளும் இளையோனீர் "[6]

என்று புறநானூறு தெரிவிக்கின்றது. இவற்றினின்று, குன்றிப்பூ மணமுடையது என்றும் சூடப்படுவது என்றும் தெரிகிறது.

---

1. குறுந். 3:3,4
2. மதுரை. 612
3. சிலப். 14:89
4. குறிஞ்சி. 63
5. குறிஞ்சி. 72
6. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489

2.7.50. கூதளம் ( கூதாளம்,[1] கூதளி[2] )

குளிர் பனி நாட்களில் மலர்வது,[3] வெண்மலர்களையுடையது. மலை நிலத்தது. சிவந்த மலர் வகையும் உண்டென்று தெரிகின்றது.[4] கொடி வகையது.[5] மலர்கள் மணமுடையவை.[6] சூடப்படும்.[7] குறிச்சித்திணை பற்றிய பாட்டிலும், பனிக்காலப் பிரிவு பற்றிய பாடல்களிலும் கூதள மலர் இடம்பெறுகின்றது.[8]

2.7.51 கூவிரம்
2.7.52 கூவிளம்

அகராதிகளில் உள்ளபடி இவ்விரண்டு சொற்களும் ஒருபொருள் குறித்தவை.[9] ஆனல், கபிலரது குறிஞ்சிப் பாட்டில் இவ்விரண்டு

---

1. அகம். 178:9; திரு.192; பட்டின. 84,85
2. " குறுந்தாட் கூதளி பாடிய நெடுவரை " — குறுந். 60:1
3. சிலப். 13:156
4. சிலப். 14:88
5. " கூதள மூதிலைக்கொடி " — அகம். 255:14
6. " கூதள நறும்பொழில் " — நற். 313:8
   " கூதிர்க் கூதளத் தலரி நாறும் " — 244:2
7. " கூதளம் கமழும் " — அகம். 47:17
7. திரு. 191,192; பட்டின. 84,85
8. நற். 313:7,8; 376:5; குறுந். 282:3-6; அகம்.68:2
   178:8-10; 272:8; 273:1.
9. Buel Aegle marmelus — Ety. Dict. P.30.

சொற்களும் தனித்தனியே இடம்பெற்றுள்ளன.[1] எனவே, இவை வெவ்வேறு மலர்களைக் குறிக்கும் சொற்கள் என்று கருதவும் இடம் உள்ளது. கூவிரத்தைப் பற்றித் தெளிவான செய்திகள் எதுவும் அறியக்கூடவில்லை. விளமரத்தின் வகையொன்று "கூவிளம்" என்பதை நிகர்ப்ப, இர மரத்தின்,[2] வகை ஒன்று "கூவிரம்" என்று கருதவும் தகும். கூவிளம் என்பது வில்வமரம். புறத்திணைத் தலைவன் எழினி கூவிளங்கண்ணி சூடியதைப் பெருஞ்சித்திரனார் பாடல் தெரிவிக்கின்றது.[3] பிறரும் சூடினர்.[4]

## 2.7.53. கைதை[5]

> " கண்டல் கேதகை மடி கைதை முடங்கல்
> வண்டமர் தாழை எனவகுத் தனரே "[6]

தாழை என்னும் பெயரே இலக்கியத்தில் பெரிதும் வழங்கப்படுகின்றது. கைதை என்பது அருகிய வழக்கு.[7]

---

1. குறிஞ்சி. 65,66
2. " இரங்காழன்ன அரும்புமுதிர் ஈங்கை " - அகம். 125:3
   " இரங்காழன்ன திரங்குகண் வறுமுலை " - புறம். 276:2
   " தீங்கனி இரவமொடு " - புறம். 281:1
3. புறம். 158:8,9
4. நற். 119:8,9
5. Fragrant screwpine. Pandanus odoratissimus. - Ety. Dict. P.137.
6. திவா. பக். 81
7. கலி. 127:2, குறிஞ்சி. 83

கடற்கரை சார்ந்த பூதர் வகையது. மலர்கள் மணமுடையவை; சூடப்படும்.[1] பூவின் நடுவிலுள்ள தாதும் கூந்தலில் அணியப்பட்டது.[2]

" அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை "[3] எனவும்

" வெள்வீத் தாழை "[4] எனவும்,

" தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை "[5] எனவும்

வருவனவற்றால் தாழையின் மடலும் மலரும்பற்றி அறியப்படும். கடற்கரைச் சோலை பற்றிய பாட்டில் பெரும்பாலும் தாழை இடம்பெறுகின்றது.[6]

2.7.54. கொகுடி

கொடிப்பூ வகையது. கொகுடி முல்லை என்பது முல்லை வகையுள் ஒன்று என்றார் உ.வே.சா.[7] இது சூடப்படுவது;

---

1. பட்டின. 88
2. அகம். 353:18,19
3. நற். 235:2
4. குறுந். 163:4
5. குறுந். 226:5,6
6. நற். 19:1-5; 49:9; 78:4; 163:8-11; 203:1-6; 235:1-3; 299:1-4; 211:2-8; பதிற். 53:5; கலி. 127:2; 128:2; 131:10.
7. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490

மணமுடையது.[1] வேறு சங்கப் பாடலுள் இந்தச் சொல் இடம்-பெறவில்லை.

2.7.55. கொன்றை[2]

மரவகையது. காடு சார்ந்தது. மஞ்சள் வண்ண மலர்களையுடையது. கார்காலத்தில் மலரும் இயல்புடைய கொன்றையைக்,

" கார்நறுங்கொன்றை " என்றனர் புலவர்.[3]

" பொற்கொன்றை "[4] எனவும்,

" சுடர்ப்பூங்கொன்றை "[5] எனவும்,

" முறியிணர்க்கொன்றை நன்பொன்கால "[6] எனவும்,

கொன்றைப் பூவின் வண்ணச் சிறப்பினைப் புலவர் புகழ்ந்தனர்.

---

1. " நறுந்தண் கொகுடி " - குறிஞ்சி. 81
2. A genus of flower trees, Cassia; its species are சரக்கொன்றை, பெருங்கொன்றை, மயிர்க்கொன்றை, முட்கொன்றை — J.P.F. Dict. P.310.
3. புறம். கடவுள் வாழ்த்து. 1
4. பொருந. 201
5. மதுரை. 277
6. முல்லை. 94.

ஆயர்கள் கொன்றை சூடினர். [1] கடுக்கை என்ற சொல்லாலும் கொன்றையைக் குறித்தனர் புலவர். [2] கார்காலத்து எழிலைக் காட்டும் முல்லைத்திணைக்குரிய பாடல்களில் கொன்றை சிறப்புற இடம்பெறுகின்றது. [3]

கொன்றை வகையில் மற்றொன்று " தூங்கிணர்க்கொன்றை " [4] என்று சிறப்பிக்கப்படுவது. [5] கீழ்நோக்கியவாறு தொங்கும் பூங்கொத்துகள் இம்மரத்தின் தனிச்சிறப்பு. இதன்காய் முதிர்ந்த நெற்றுத்தான் கொன்றைக் குழல் என்று சொல்லப்படுவது.

" துணர்க்காய்க் கொன்றை குழற்பழம் ஊழ்த்த " [6]

என்று பேயனார் அதைப்பற்றிப் பாடியுள்ளார்.

---

ம். கலி. 102:3; 103:1

2. பதிற். 67:13; அகம். 393:15,16

3. நற். 99:9; 221:4; 242:3; 246:8; 302:1-3; 371:1,2; குறுந். 66:1; 148:1-4; 183:1,2; ஐங். 412:1-3; 420:1; 430:1,2; 432:1,2; 435:3; 462:1-3; 497:1; அகம். 4:2; 197:16; 364:4,5; 398:3-5; பெரும். 328:329.

4. குறிஞ்சி. 86

5. Cassia fistula. - பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், பக். 99.

6. ஐங். 458:1; 'புழற்காய்க் கொன்றை '- நற். 296:4;

" ஞாங்கினர்க் கொன்றை " மரங்கள் தற்போது வேனிற் காலத்தில் மலர்ந்து விளங்குவதை இந்தியா முழுவதும் காணமுடிகின்றது. இம்மலர்களில் நறுமணமும் அமைவதில்லை. அன்றியும், இளவேனிற் காலத்தை அழகுறுத்தும் மலர்களைக் குறிப்பிடும்போது " பாதிரியும் பாவைஞாழலும் பைங்கொன்றையும் பிணியவிழ்ந்து " என்றார் களவியலுரையாசிரியர்.[1] எனவே, " கார்நறுங்கொன்றை " வேறு; " ஞாங்கினர்க்கொன்றை " வேறு என்பது தெளிவாகும்.

## 2.7.56. கோங்கம்[2] ( கணிகாரம் )[3]

கோட்டுப்பூ. வேனிற்காலத்தில் மலரும். குன்று சார்ந்த காடுகளில் காணப்படுவது. கண்ணைக் கவரும் பெரிய வண்ணமலர்கள் உடையது. கோங்கம்[4] பாலைத்திணைப் பாடல்களில் பெரிதும் இடம்பெறுவது.[5]

---

1. இறையனார் அகப்பொருள் - மூலமும் உரையும், - பக். 32 ( சைவ சித்தாந்தக் கழகம், சென்னை ) 1969, ஐந்தாம்பதிப்பு.
2. The buttercup tree, cochlospermum gossypium. —பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக். 146, 153.
3. கலி. 143:5
4. மதுரை. 337-339
5. நற். 48:3-5; 86:6-7; 202:9-11; ஐங்.343:1-3; 367:1; 370:1; பரி. 19:79; கலி. 42:16,17; அகம். 25:10,11; 99:5; 153:15-18; 240:11; 317:8-11; புறம். 321:4,5; மதுரை. 338;
' விரிபூங்கோங்கம் ' - குறிஞ்சி. 83

2.7.57. கோடல் ( வெண்காந்தள் )

காந்தள் என்றும் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.[1] குன்றம் சார்ந்து குளிர்காலத்தில் மலர்வது.[2] சங்குவளையின் உடைந்த துண்டுகளைப்போலும் பூவிதழ் உடையது.[3] ஏனை மலருடன் சேர்த்தும் தனித்தும் தொடுத்துச் சூடப்படும்.[4] குளிர்காலமும் பனிக்காலமும் பற்றிய பாடல்களில் கோடற்பூ இடம்பெறக் காணலாம்.[5]

2.7.58. சிறுசெங்குரலி

கொத்தாக மலரும் சிறிய மலர் என்பதுவும் சிவந்தபூ என்பதுவும் இதன் பெயரினின்று அறியப்படும். குறிஞ்சிப்பாட்டில் இப்பெயர் இடம்பெற்றது.[6] உரையாசிரியர் 'கருந்தாமக் கொடிப்பூ' என்றார்.[7]

---

1. 'வளையெனக் காந்தள் வள்ளிதழ்' - நற். 161:5,6
'உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்' - புறம். 90:1
'வளையுடைந்தன்ன வள்ளிதழ்க் காந்தள்' - மலை. 519
2. நெடு. 5,6
3. அகம். 23:6
4. கலி. 103:3; புறம். 157:7
5. நற். 44:7,8; 99:9; குறுந். 62:1; கலி. 7:15,16 48:11; 101:3,4; அகம். 264:3,4;
6. குறிஞ்சி. 82
7. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490

" ஒண் செங்குரலித் தண்கயம் கலங்க " [1]

என்பதனின்று மருத நிலத்து நீர்த்துறை சார்ந்தது என்று தெரியவரும்.

2.7.59. சிறுமாரோடம்

குறிஞ்சிப் பாட்டில் இப்பெயர் காணப்படுகின்றது. [2] செங்கருங்காலிப் பூ என்று உரை குறிப்பிடுகின்றது. [3] ' பசுமோரோடம் ' [4] எனவும் ' நறுவீமாரோடம் ' [5] எனவும் குறிக்கப்பட்ட மலர்களும் " சிறுமாரோடம் " என்பதுவும் ஒன்றோ வேறோ என்பது ஆய்தற்குரியது.

2.7.60. சுள்ளி

குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்றது. [6] கோட்டுப்பூ. வெண்மலர்; சூடப்படுவது. உரை மராமரப்பூ என்று குறிக்கின்றது. [7] மராம் என்றும் மரவம் என்றும் சொல்லப்படும்.

---

1. புறம். 283:1
2. குறிஞ்சி. 78
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490
4. ஐங். 93:2
5. நற். 337:5
6. குறிஞ்சி. 66
7. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489

## 2.7.61. குரலி

'குரலி பிரம்பே'[1] குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்றது.[2] 'குரைப்பூ' என்று குறிப்பிட்டுள்ளது உரை.[3]

## 2.7.62. செங்கழுநீர்

குவளை வகையில் சிவந்த மலர் செங்கழுநீர் என்று சொல்லப்படும். ( பார்க்க: குவளை ) தண்கயக் குவளை என்று குறிஞ்சிப் பாட்டில் சொல்லப்பட்டது. சிவந்த மலரேயாகும். இதன் இதழ்களைக் கோத்து அமைத்த மாலை ஆடவன் சென்னியை அழகு செய்தது.[4] தழையுடை அமைப்பதற்கும் கழுநீர் மலர் உதவும்.

## 2.7.63. செங்கொடுவேரி[5]

குறிஞ்சிப் பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றது.[6]

---

1. சேந்தன் திவாகரம், பக். 83
2. குறிஞ்சி. 71
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489
4. குறிஞ்சி. 62, பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 488
5. அகம். 48:8,9
6. அகம். 59:13,14; 156:9

மலர்கள் சிவந்த வண்ணம் உடையவை; சூடப்படும். 1

2.7.64. செண்பகம் ( சண்பகம் ) 2

கோட்டுப்பூ. வேனிற்காலத்தில் மலரும். வண்டு மொய்க்காத மலர்களில் சண்பகம் ஒன்று. 3 குறிஞ்சிப்பாட்டில் ' பெருந்தண்சண்பகம் ' என்று குறிக்கப்பட்டது. 4 பூக்கள் மணமுடையவை. 5 சூடப்படுவன. 6

2.7.65. செம்மல்

குறிஞ்சிப்பாட்டின் மலர்த்தொகுதியில் இடம்பெற்றது. 7 ' சாதிப்பூ ' என்றார் உரையாசிரியர். 8

" கருமுகை பித்திகை சாதியாகும் " 9 எனவும்,
" தளவம் முல்லை சாதி பிச்சி ' 10 எனவும்,

---

1. குறிஞ்சி. 64
2. ' செங்கொடுவேரிச் செழும்பூம் பிணையல் ' - சிலப். 14:91
3. ' சண்பகமும் வேங்கையும் வண்டுணு மலர்மரம் ' - திவா. பக். 82
4. குறிஞ்சி. 73
5. ' மணங்கமழ் சண்பகம் ' - பரி. 12:77
6. ' பெருந்தண் சண்பகம் செரீஇ ' - திரு. 27
7. குறிஞ்சி. 82
8. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490
9. பிங். 2947
10. பிங். 2948

" சாதி மாலதி சிறுசன் பகமே " [1] எனவும்,

வரும் நிகண்டுத் தொடர்களின்று,

சாதிப்பூ என்னும் சொல் இடந்தோறும் வேறுபட்ட பொருளைத் தந்தது என்பதை அறிய முடிகின்றது. எவ்வாறாயினும், சாதிப்பூ என்னும் சொல் நறுமணமுடைய கொடிப்பூவினை உணர்த்தியது, அதன் மலர்கள் சூடப்படுவன என்று கொள்வதில் இழுக்கில்லை.

2.7.66. செயலை [2] ( பிண்டி, அசோகு. )

பிண்டி என்னும் சொல் குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்றது. [3] ' பல்பூம் பிண்டி ' என்று சிறப்பிக்கப்பட்டது. மணங்கமழும் கோட்டுப்பூ.

" சினைதனை மணந்த சுரும்புபடு செந்தீ
ஒண்பூம் பிண்டி யவிழ்ந்த காவின் " [4] எனவும்,

" கன்றெரி ஒள்ளிணர் கடும்பொடு மிலைந்து
சேர்ந்த செயலைச் செப்பம் போகி " [5] எனவும்,

---

1. பிங். 2659
2. ' பிண்டி செயலை காகோளி அசோகு ' - திவா. பக்.76
3. குறிஞ்சி. 88
4. மதுரை. 700, 701
5. மலை. 159,160

வருவன வற்றால் பூக்கள் சிவந்த வண்ணம் உடையவை என்று அறிய முடிகின்றது.

வேனிற் காலத்தில் தழைத்து வரும் சிவந்த தளிர்கள் ஒப்பனைப் பொருளாகக் காதில் செருகப்பெறும். [1]

" பிடவங் குருந்தொடு பிண்டி யலர
மடவ மயில் கூவ " [2]

என்பதனின்று கார்காலத்தில் செயலை, மலரும் என்பதை அறியலாம்.

2.7. 67. செருந்தி [3]

அ. மரம்

ஆ. வாட்கோரை முதலிய கோரை வகைகள்.

2.7.67. அ

" பஞ்சரம் செருந்தி செங்கோடு மாகும். " [4]
" பாசிலைச் செருந்தி தாய இருங்கழி " [5]

---

1. திரு. 31,32; குறிஞ்சி. 118-120
2. கைந்நிலை. 36:1,2
3. a flower tree, Ochna squarrhosa; a kind of sedge, வாட்கோரை. - J.P.F. Dict. P.439
4. பிங். 2692
5. ஐங். 110:1,2

எனவரும் அம்மூவனார் பாடலும்,

" அரும்மலர் செருந்தி நெடுங்கால் மலர்கமழ்
... ... ... முற்றம் " [1]

என்னும் பாட்டிலும் செருந்தி மரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

" பொன்னடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள் " [2] எனவும்,

" பருதியஞ் செல்வன்போல் நனையூழ்த்த செருந்தி " [3]
எனவும்,

"" தலைநாட் செருந்தி தமனியம் மருட்ட " [4] எனவும்,

வருவனவற்றால், பொன் வண்ணமுடைய செருந்தி மலர்கள் சூடப்படும் என்பதும், இளவேனிற்காலத்தில் மலரும் என்பதும், கடற்கரையில் செருந்தி மரங்கள் இடம்பெறும் என்பதும் தெரியவரும்.

நெய்தல் திணைக்குரிய பாடல்களிலும் குறிஞ்சிப் பாட்டிலும் செருந்தி மரம் மலர் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. [5]

---

1. புறம். 390:3,4
2. அகம். 280: 11,12
3. கலி. 26:2
4. சிறுபாண். 147
5. " நனைத்த செருந்திப்போது வாய்அவிழ " - அகம். 150:9

2.7.67. இ

" இருஞ்சாயன்ன செருந்தியொடு " [1]

என வருமிடத்துச் செருந்தி என்பது கோரை வகையினை உணர்த்தும். [2] நீர்க்கரையில் செழித்து வளர்வது; மருதநிலம் சார்ந்தது.

நீர்த்துறையில் செழித்து வளரும் பலவகைக் கோரைகளையும் செருந்தி என்னும் சொல்லினால் குறிப்பிடும் தன்மையைப் பத்துப்பாட்டில் பார்க்க முடிகின்றது.

" கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடி " [3]

என்பதற்குக் " கொழுவிய தண்டுகளையுடைய அறுகோடே கோரைகளும் வளரப்பட்டு " என்கிறார் நச்சினார்க்கினியர். [4]

" கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
கலிழுமாய் செருந்தியொடு கண்பு அமன்று ஊர்தர " [5]

என்பதற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர்,

---

1. " விரிந்த செருந்தி வெண்மணல் முடுக்கர் " - அகம்.240:13 குறிஞ்சி. 75

2. ஐங். 18:1

3. " செருந்தி - ஒருவகைக் கோரை; இது நெட்டிக்கோரை என்றும் வாட்கோரை என்றும், தண்டான் கோரை என்றும் பழைய உரைகளில் வழங்கப்படுகின்றது. " என்றார், உ.வே.சா. - ஐங். உ.வே.சா. பதிப்பு, பக். 11 ( கபீர் அச்சுக்கூடம், சென்னை) 1947, நான்காம் பதிப்பு.

4. பட்டின. 243
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 557

" வாட்கோரையுடனே சண்பங்கோரையும் " எனவும்,
" செருந்தி - நெட்டிக்கோரையுமாம் " எனவும்

குறிப்பிட்டுள்ளார்.[1]

2.7.68. செருவிளை

செருவிளை என்பது வெண்காக்கணம்பு எனப்படும்.[2] இது மாரிக்காலத்தில் மலரும் கொடிப்பூ; சூடப்படுவது.

2.7.69. சேடல்

குறிஞ்சிப் பாட்டில் இடம்பெறுகின்றது.[3] " பவளக்கால் மல்லிகை " என்று தெரிவித்துள்ளார் உரையாசிரியர்.[4] பவள-மல்லிகை எனவும், பாரிசாதம் எனவும், தற்காலத்தில் சொல்லப்-படுவது இதுவே. கோட்டுப்பூ. வெண்ணிறமும் மணமும் உடையது. குளிர்காலத்திலும் பனிக்காலத்திலும், மாலையில் மலரும்.

---

1. மதுரை. 171,172
2. குறிஞ்சி. 68
3. குறிஞ்சி. 82
4. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489

## 2.7.70. ஞாழல்[1]

கடற்கரை சார்ந்து வளரும் மரம்.

" ஐயவி யன்ன சிறுவீ ஞாழல் "[2]

என்பதனின்று இம்மலரின் சிறிய வடிவம் புலப்படும். இளவேனிற் காலத்தில் மலரும்.[3] மலர்க்கொத்தினை மகளிர் சூடுதல் இயல்பு.[4] நெய்தல்திணைக்குரிய பாடல்களில் இஞ்ஞாழல் இடம்பெறுகின்றது.[5]

## 2.7.71. தணக்கம் ( நுணா )[6]

நுணவம், நுணவு என்றும் சொல்லப்படும். வெண்ணிறம் உடைய கோட்டுப்பூ. வேனிற்காலத்தில் அந்தி மாலையில் மலர்ந்து கமழும்.[7]

---

1. Name of various plants. Cassia sophera, caesalpinia pulcherrime, Cochlospermum gossipium, crocus sativus. — J.P.F. Dict. P.405

" நாகம் பலினி ஞாழலாகும் " - பிங். 2682

2. குறுந். 51:1

3. கலி. 26:4,8

4. கலி. 56:2,3; அகம். 370:9,10

5. நற். 31:5; 54:9; 74:5; 91:1; 106:6-8; 167:8,9; 191:1-4; குறுந். 50:1; 397:1,2; ஐங். 141:1; 142:1; 144:1; பதிற். 30:1; கலி. 127:1; 131:19; அகம். 70:9; 216:8; 240:1; 270:3; பொருந. 199.

6. "நுணவு தணக்கே " - திவா. பக். 80
" பல்பூந் தணக்கம் " - குறிஞ்சி. 85

7. "கருங்கால் நுணவம் கமழும் பொழுதே "-ஐங். 342:3
" சிறுவெள் ளருவித் துவலையின் மலர்ந்த
கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூச்
செம்மணற் சிறுநெறி கம்மென வரிப்ப " - அகம். 345:15-1

இம்மலர்கள் சூடப்படுவதில்லை. மரத்தில் பழங்கள் உண்டு.

2.7.72. தமாலம்

" பச்சிலை தமாலம் பசும்பிடியாகும் " 1

" பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து " 2

என்று பசும்பிடி மலர் சூட்டப்பட்டதைப் பெருங்குன்றூர் கிழார் தெரிவித்தார். " பசும்பிடி இளமுகிழ் " 3 என்று பரிபாடலும் முகிழினைக் காட்டுகின்றது. குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில் " பசும்பிடி " என்னும் சொல் இடம்பெற்றுள்ளது. 4 அதனைப் " பச்சிலைப்பூ " என்றார் உரையாசிரியர். 5

" நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலம்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும் " 6

என்பதனின்று, பச்சிலைக்கொடி எனப்படும் தமாலக்கொடியின் தன்மை புலப்படும்.

---

1. பிங். 2739
2. பதிற். 81:25
3. பரி. 19:75
4. குறிஞ்சி. 70
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489
6. நற். 292:1-3

தமாலம் அல்லது பசும்பிடி என்பது, நறுமணம் உடைய கொடிப்பூ. மலை சார்ந்தது; சூடப்படுவது என்பது தெரிய வருகின்றது. [1]

முருக வழிபாடு செய்யும் வேலன் பச்சிலைக் கொடியைக் கொண்டு, மலர்களையும், ஏனைய நறுங்காய்களையும் கட்டி அணிந்ததனை நக்கீரர் பாட்டும் நச்சினார்க்கினியர் உரையும் தெரிவிக்கின்றன. [2]

" பசுங்கேழிலைய நறுங்கொடித் தமாலம் "

என்பதை நக்கீரர் " பைங்கொடி " என்றே சுருங்கக் கூறியுள்ளார்.

2.7.73. தளவு ( செம்முல்லை )

காட்டுநிலத்தில் வளரும் கொடிப்பூ. முல்லை இனத்தது. மாரிக்காலத்தில் மாலையில் மலரும். இதழ்ப்புறத்தே செம்மை வண்ணம் உடையது. எனவே, செம்முல்லை எனப்பட்டது. மணமுடைய மலர்கள் சூடப்படும். [3] முகையின் முனை சிறிதே வளைந்து

---

1. "சண்பகம் மாதவி தமாலங் கருமுகை" - சிலப். 8:45
2. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 62
3. " புதல் தளவின் பூச்சூடி " - புறம். 395:6

மீன்கொத்திப் பறவையின் அலகினை ஒத்துக் காணப்படும். 1
முல்லைத்திணைப் பாடல்களில் சிறப்பிடம் பெறுவது. 2

2.7.74. தாமரை 3

காலை மலரும். சுனைப் பூக்களில் தலையாயது. சிவப்பும் வெண்மையும் என இருவகை மலர்கள் உள. தெய்வ வழிபாட்டுக்குரியது. 4 மாந்தர் சூடுவதாகப் பாடல்கள் தெரிவிக்கவில்லை. 5

---

1. " சிரல் வாயுற்ற தளவு " - நற். 61:8;
" தளவின் சிரல்வாய்ச் செம்முகை " - ஐங். 447:2

2. நற். 242:2; குறுந். 382:2-4; ஐங். 412:2,3; 422:1-3; 440:3; 447:2; 499:1; கலி.102:2; 103:2; 108:42; அகம். 23:3; 64:4; 254:15,16; புறம். 395:6

3. Lotus Nelumbium Speciosum, Ety.Dict. P.203.

4. " திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை " - சிறுபாண். 73

5. " பறியாக் குவளை " - நற். 34:2;
" கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி " - பெரும். 290
" நிரையிதழ்க் குவளைக் கடிவீ தொடினும் ...
உயிர்செல வெம்பிப் பனித்தலு முரியிர் " - மலை.189:191
நச். உரை.

" தெய்வம் விரும்புதலிற் கடியவாகிய பூக்களைக் கிட்டினும் "
பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 625.

உவமை நிலையிலும் உள்ளுறை நிலையிலும் பாடலில் பயில்வது தாமரை.[1] மருதத்திணைக்குரிய பாடல்களிலும்[2] தெய்வத்தைப் பற்றிய வருணனையிலும்[3] தாமரை சிறந்த இடம்பெறுகின்றது.

## 2.7.76. தாழை[4]

சங்க இலக்கியத்தில் தெங்கு என்பதைத் தாழை என்று புலவர் பலரும் குறித்துள்ளனர். குறிஞ்சிப் பாட்டிலும் 'தாழை' என்பதற்குத் 'தெங்கிற் பாளை' என்றே நச்சினார்க்கினியர் உரை வரைந்தார்.[5]

---

1. " குண்டுநீர்த் தாமரைக் கொங்கினன்ன
நுண்பல் தித்தி மாஅ யோளே " - குறுந். 300:3; 376:4-

" போதவிழ் தாமரையன்ன நின் காதலம் புதல்வன் "
-ஐங். 424:3,4

2. கலி. 69:1-7; 71:6-8; 72:7,8; 73:2-4; 76:3,4; 77:1-7; 78:1-4; 79:1-6;
அகம். 6:16; 16:1-3; 46:5,6; 176:1-7;

3. பரி. 2:53; 3:13; 5:70; 13:50,51;
பிற மேற்கோள்கள்: பதிற். 19:20; 78:4;
பரி.திரட்டு. 1:10-13; பரி.8:12-15; 8:112-117; 12:78; 19:67-74; கலி. 5:14; 13:11-13;

22:15,16; 39:2; 44:6; 55:7; 112:2,3;
அகம். 91:15; 163:8; 361:1; புறம். 28:12,13; 397:19-21; திரு. 73; சிறுபாண். 70-75; 182-184;

பெரும். 114,115; 402-405; மதுரை. 249,460-465 710,711; குறிஞ்சி. 80.

4. Coconut tree, Ety. Dict. P. 206

5. குறிஞ்சி. 80; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக்.490.

'தெங்கின் பாளை' சூடப்படுவதன்று; மணமுடையதன்று; கண்ணுக்கினிய காட்சி தரும்; காய் தரும்.[1] தமிழ் இலக்கணக் கருப்பொருள்களில் தெங்கு எனப்படும் தாழை இடம்பெறவில்லை. நீர் வளம்மிக்க இடங்களில் தெங்கு வளர்ந்து பயன்தந்ததைப் பாடல்கள் குறிக்கின்றன.

2.7.76. திலகம் [2]

'திலகம் மஞ்சாடி' என்றது நிகண்டு.[3] குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்ற கோட்டுப்பூ.[4]

" நாகம் திலகம் நறுங்காழாரம் " [5]

என்று மலைச்சாரலுக்குரிய மரங்களுடன் இதுவும் ஒருங்கே சொல்லப்படுகிறது.

2.7.77. தில்லை [6]

கடற்கரை சார்ந்து வளரும் மரம்.

---

1. புறம். 24:14,15; 29:15,16;
 " தாழை யிளநீர் விழுக்குலை " - திரு. 207,208;
 பொருந. 208; பெரும் 356,364
2. Atrea ; adenanthera, மஞ்சாடி மரம். - J.P.F. Dict. P.527.
3. பிங். 2687
4. குறிஞ்சி. 74,
5. மலை. 520.
6. Blinding tree. Excoecaria agallocha, Excoecaria crenulata - Ety. Dict. P. 212.

" மாமலர் முண்டகம் தில்லையோடு " [1]

என்று நல்லந்துவனார் குறித்தார். குறிஞ்சிப் பாட்டிலும் இடம் - பெற்றுள்ளது. [2]

2.7.78. தும்பை

நிலப்பூவகையது. மணமற்ற வெண்மலர் உடையது. புறத்திணை நிகழ்ச்சிக்குப் பயன்பட்டது. [3] மங்கைப் பருவம் ஊருத—சிறுமி தும்பை மாலை சூடியதாகச் சொல்லப்பட்டுள்ளது. [4] வேறெங்கும் மகளிர் விரும்பிச் சூடுவது குறிக்கப்படவில்லை. குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்றுள்ளது. [5]

2.7.79. துழாய் ( துளவம், துளசி )

' திருத்துழாய் ' என்றார் கபிலர். [6] திருமால் வழிபாட்டுக்குச் சிறந்தது. செடியின் அனைத்து உறுப்பிலும் மணம்

---

1. கலி. 133:1,
2. குறிஞ்சி. 77
3. " ஆடுகொளக்குழைந்த தும்பை " - புறம். 21:10
   " அலர்பூந்தும்பை " - புறம். 961:1,
   " கவிழ் பூந் தும்பை " - புறம். 283:14,15
4. ஐங். 121:2,3
5. குறிஞ்சி. 90
6. குறிஞ்சி. 90, பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 491
7. பரி. 4:58; 15:54

உண்டு.[1] காட்டு நிலத்தில் தழைக்கும். எல்லாக் காலத்திலும் மலரும். மருத்துவப் பயன்மிக்கது.

2.7.80. தெறுழ்

இருண்ட புதரிடை வெளுத்த தோற்றம் வழங்கும் மலர். கார்காலத்தில் மலர்வது. காட்டுநிலம் சார்ந்தது.

" வருமழைக்கு எதிரிய மணிநிற இரும்புதல்
நரைநிறம்படுத்த நல்லிணர்த் தெறுழ்வீ "[2] எனவும்,

" களிற்றுமுக வரியின் தெறுழ்வீ "[3] எனவும்,

அதன் தோற்றம் தெரிவிக்கப்பட்டது.

2.7.81. தொய்யில்

நீர்க்கரை சார்ந்து மலரும் கொடி வகையது. குளிர்காலத்தில் மலர்வது.

---

1. " கமழ்குரல் துழாய் " - பதிற். 31:8
2. நற். 302:4,5
3. புறம். 119:2

" துனிநீர் மெல்லவல் தொய்யிலொடு மலர
... ... ... புறவு " [1]

என்கிறார் மாங்குடி மருதனார்.

## 2.7.82. தோன்றி

செந்நிற மலர்களையுடைய கொடி,[2] மாரிக்காலத்தில் மாலை நேரத்தில் மலரும்,[3] காட்டுநிலத்துக்குரியது. சூடப்படுவது.[4] காட்டுநிலத்தில் மழைக்காலத் தன்மையைச் சொல்லுமிடத்துத் தோன்றி இடம்பெறக் காணலாம்.[5]

## 2.7.83. நந்தியாவர்த்தம் [6]

" வலம்புரி நந்தியாவர்த்தமாகும் " [7]

---

1. மதுரை. 283
   " தொய்யிற் கொடியோடே மாறுபட மலர "-நச்.உரை, பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 367
2. "விடுகொடிப் பிறந்த மென்றைகைத் தோன்றிப் "
   " சுடர்ப்பூந் தோன்றி "
   " பவளத்தன்ன செம்பூ " - பரி. 14:15,16;
   - குறிஞ்சி. 90
3. " தோடார் தோன்றி குருதி பூப்ப " - முல்லை. 96
4. கலி. 102:3; நற். 69:6
5. நற். 221:2; ஐங். 420:2; 440:1-3; பரி.19:78 அகம். 94:5,6; 164:6; 217:10; 218:20; 235:7,8; 36:4,6
6. A beautiful flowering shrub. Nerium Coronarium. J.P.F. Dict. P.455.
7. பிங். 2951

குறிஞ்சிப்பாட்டில் ' நந்தி ' என்று குறிக்கப்பட்டது. [1]
வெண்ணிற மலர்கள் மணமுடையவை; சூடப்படுபவை. வழிபாட்டுக்-
கேற்றவை.

2.7.84. நரந்தம் ( நரந்தை ) [2]

அ. மரம் [3]
ஆ. புல் [4]

2.7.84. அ. நரந்த மரம் 5

மலையைச் சார்ந்து வளர்வது.

" பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாள்மலர் உதிரக்
கலைபாய்ந்து உகளும் " 6

---

1. குறிஞ்சி. 91
2. Parasitic leafless plant, Cassytha filiformis. - Ety. Dict. P. 239.
3. Citrus aurantium - J.P.f. Dict. P.588.
4. Lemon grass, Cymbogon Nardus.
   - பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக். 83
5. " நாகம் தாறு நரந்தம் நிரந்தன " - சிலப். 12: பாடல் 2:1
   " நளியிருஞ்சோலை நரந்தம் தாஅய் " - பரி. 9: 11
   " நரந்த நன்மலர் நன்கலிக்கும்மே " - பரி. 16: 15
6. அகம். 141: 25-27

என்று சொல்லப்பட்டது.

" நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் " 1

என்று குறிஞ்சி நிலப் பொருளுடன் ஒருங்கு வைத்துக் கூறுகிறார், முடத்தாமக் கண்ணியார். குறிஞ்சிப் பாட்டின் மலர் வரிசையில் நரந்தம் இடம்பெறுகின்றது. 2 ' நரந்தம் பூ ' என்கிறார் உரையாசிரியர். 3

2.7.84. இ. நரந்தம் புல்

' நரந்தம் ' என்று சொல்லப்பட்ட புல்லும் மணமுடையது. 4 அதுவும் மலைச்சாரலில் வளர்வது. கவரிமானுக்கு உணவாகும் தன்மைத்து. 5

" நரந்தம் நாறு இருங் கூந்தல் " 6 எனவும்,
" நரந்தம் நாறும் குவையிருங் கூந்தல் " 7 எனவும்,

---

1. பொருந. 238
2. குறிஞ்சி. 94
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492
4. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக். 83, 84
5. " நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி " - புறம். 132:4
" துஞ்சும் கவரி, பரந்திலங்கு அருவியொடு நரந்தம் கனவும் " - பதிற். 11:21,22
6. கலி. 54:5
7. குறுந். 52:3, அகம். 266:4

" நரந்தம் நாறும் தன்கையால் " [1] எனவும்,

வருமிடங்களில் நரந்தத்தின் நறுமணம் என்பது நரந்தம் புல்லின்று வடித்து எடுக்கப்பட்ட நறுமணத் தைலம் என்று கொள்ளுதல் ஏற்புடைத்து. [2] நறுமணத்தைலத்தைத் தொடுத்த பூக்களுக்கு ஊட்டும் வழக்கமும் உண்டு.

" வேளூர் வாயில்
நறுவிரை தெளித்த நாறிணர் மாலை " [3] எனவும்,

" நரந்தப் பசுங்காழ்க் கோதை சுற்றிய
... ... ... சீறியாழ் " [4] எனவும்,

உள்ளவை செயற்கை மணம் ஊட்டப் பெற்றமை காட்டும். [5] நரந்தம் என்னும் சொல் மணம் சிறந்த கத்தூரியைக் குறிக்கவும் வரும். [6]

---

1. புறம். 235:8
2. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.84
3. அகம். 166:4,5
4. புறம். 302:4
5. " பைங்காற் பித்திகத்து ஆயிதழ் அலரி
அந்தொடை ஒருகாழ் வளைஇ " - குறிஞ்சி.117,118

–என்பதற்கு "... ... இஃது அந்திக் காலத்து மலரும் பூவாதலின், அதனைத் தேங்கலந்து ஒருகாழ் வளைஇ ... எனக்கூட்டும்" என்றார் நச்சினார்க்கினியர். பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 495

6. " நரந்தம் அரைப்ப " என்னும் மதுரைக் காட்சித் தொடருக்கு (553) 'கத்தூரியை அரைக்கும்படியாக ' என்றார் உரையாசிரியர் நச்சினார்க்கினியர். பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 401

2.7.85

1. நள்ளிருள் நாறி ( இருவாட்சி )
2. பெருவாய் மலர் ( இருவாட்சி )
3. மயிலை ( இருவாட்சி )

2.7.85.1

கபிலரது குறிஞ்சிப் பாட்டில் நள்ளிருள் நாறி என்னும் சொல் இடம்பெற்றுள்ளது.[1] உரையாசிரியர் இருவாட்சி என்று பொருள் தந்துள்ளார்.[2]

அந்தி மாலையில் கமழ்ந்து மலரும் வெண்மை நிறங்கொண்ட கொடிப்பூ வகையொன்று இருவாட்சி யெனப்படும். இது சூடப்படுவது.

2.7.85.2

பதிற்றுப் பத்தில்,

" பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து "[3]

என்று அரசியார் அணிந்த மலர்கள் குறிக்கப்பட்டன. பெருவாய் மலரை 'இருவாக்ஷி' என்றே உரை வகுத்தோர் தெரிவித்தனர்.[4]

---

1. குறிஞ்சி. 94
2. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492
3. பதிற். 81:25
4. பதிற். மூலமும் விளக்கவுரையும், ( சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை ) 1968 ஐந்தாம் பதிப்பு, பக்.389,390.

2.7.85. 3

" மயிலை அரிங்கம் இருவாட்சியாகும்." [1]

என்று நிகண்டு தெரிவிக்கின்றது. இருள்வாசி, இருவாட்சி, இருவாச்சி என்னும் சொற்கள் இருட்டு நேரத்துடன் தொடர்புடையன என்பதோடு இருண்ட நிறத்துடனும் தொடர்புபடுத்தற்குரிய என்பது எண்ணுதற்பாற்று.

' மயிலைக்கண்ணி ' என்று இருண்ட வண்ணங்கொண்ட மாலையைப் பற்றிப் புறநானூறு தெரிவிக்கின்றது.

" கானக் காக்கைக் கலிச்சிறகு ஏய்க்கும்
மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள் " [2]

மை, மயில், மயிலை என்னும் சொற்கள் கரிய நிறத்தினை உடைய பொருட்களை உணர்த்தும் சொற்கள். ஆகவே, மயிலை எனப்படும் இருவாட்சி மலர் கரிய வண்ணம் உடைய ஒருவகை மலர் என்று கொள்ளத்தகும்.

அணிதற்குரிய மயிலை மலரையும் மயிலைக்கொடியின் செறிவையும்

---

1. பிங். 2946

2. புறம். 342 : 1, 2; ( இந்தத் தொடரில் ' மயிலைக்கண்ணி ' என்பதற்கு இருண்ட நிறக்கண்ணினை யுடையவள் என்னும் பொருள் கொள்ளக்கூடும். ஆனால், இருண்ட நிறத்திற்கு அடைமொழியாக வரும் தொடரை — " காக்கைச் சிறகு என்பதை நோக்கும்போது, அதைத் தலைவி கண்ணுக்கு உவமையாகக் காட்டுதல் அலங்காரக் குற்றத்தின் பாற்படும்.)

சிலப்பதிகாரம் காட்டுகின்றது.[1] பெருவாய் மலர் எனப்பட்ட இருவாட்சி, கரிய மயிலை மலரோ, இருளில் கமழும் வெண்மலரோ என்பது ஆராய்தற்குரியது.

2.7.86 நறவம் ( நறவு )

( நறவம் என்னும் சொல் நறைக்கொடியினை உணர்த்தவும் வரும் [2] )

" நல்லிணர் நாகம் நறவம் சுரபுன்னை "[3]

என அமைந்த வரிசையைப் பார்க்கும்போது, குன்றத்தைச் சார்ந்த கோட்டுப்பூ என்று கருத இடம் உள்ளது. சிவந்த வரிபடர்ந்த வெண்மை நிறமுடைய இதழ்களைக் கொண்டது என்பதை,

" அவ்வளை வெரிநின் அரக்கீர்த் தன்ன
செவ்வரி இதழ் சேண்நாறு நறவின் "[4]

என்னும் அடிகளின்று அறியலாம்.

---

1. சிலப். 5:191; 13:158
2. பத்துப். உ.வே.சா. பதிப்பு, 492
3. பரி. 12:80
4. நற். 25:1,2 .

* மலர்கள் மணம் உடையவை; சூடப்படுவன. [1]

" சூடுநறவொடு காமம் முகிழ் விரிய " [2]

" ஊழினர் நறவம் " [3]

" நறுஅ அவிழ்ந்தன்ன என் மெல்விரற் போது " [4]

" நகைசால் அவிழ்பதம் நோக்கி நறவின்
முகைசூழும் தும்பியும் போன்ம் " [5]

" நறவின் சேயிதழ் அனைய வாகி . . .
. . . . . . . . . . ஈரிமை " [6]

மேற்காட்டிய தொடர்களிலிருந்து நறவம்பூ, முகை, போது இதழ்பற்றி அறியலாகும்.

2.7.81. நறை

மலையைச் சார்ந்த கொடிவகையது.

" தண்கமழ் நறைக்கொடி " [7] என்றார் கபிலர்.

---

1. "நறவோடு அமைந்த
தெரிமலர்க் கண்ணியும் தாரும் " - கலி. 91:2,3
2. பரி. திரட்டு. 1:55
3. பரி. 19:78
4. கலி. 54:9
5. கலி. 105:41,42
6. அகம். 19:9-11
7. ஐங். 276:2

' நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் ' என்றார் முடத்தாமக் கண்ணியார்.[1] நறைக்கொடியின் மலர்கள் சூடப்படுவதாக எங்கும் சொல்லப்படவில்லை. பயன்தரும் காய்கள் உடையன என்பதனால், பூக்களைப் பறித்துச் சூடும் வழக்கம் இல்லை, என்று கொள்ளத்தகும். வழிபாடு நிகழ்த்தும் வேலன் அணிந்த மாலையில் நறைக்கொடியின் காய்கள் இடம்பெற்றதை நக்கீரனார் தெரிவித்தார்.[2]

" பைங்கொடி நறைக்காய் இடையிடுபு "

என்பதன் உரையில் நறைக்காயினைச் ' சாதிக்காய் ' என்று குறிப்பிட்டுள்ளார். நறுமணம் மிக்க பூ ஒன்றினைச் ' சாதிப்பூ ' என்றனர்.[3] மணம்மிக்க காயினைச் ' சாதிக்காய் ' என்றனர் என்பதை அறியமுடிகின்றது.

அன்றியும், நறைக்கொடி சந்தன மரத்தைச் சுற்றி வளரும் இயல்புடையது. பற்றிப் படரும் கொடியினால் அந்த மரம் செழிப்பும் சிறப்பும் அடைகிறது, என்பதைத் தாவர நூலாரும் தெரிவிக்கின்றனர்.[4]

" குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழாரம் சுற்றுவன அகைப்ப "[5]

---

1. பொருந. 238

2. " பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூதாளந் தொடுத்த கண்ணியன் " - திரு. 190-193

3. பார்க்க. 2.8.65

4. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக். 5, 6

5. நற். 5.3,4

என்பதற்கு உரையெழுதிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்,

" ஏனை மரங்கொடிகள் இவற்றின் வேர் சந்தனவேரோடு முயங்காத வழித் தனித்தள மரம் நறுமணம் எய்தாமை கண்கூடாகக் கண்டலால் ஈண்டு நறைக்கொடி சுற்றுவது கூறி ' நறுங்காழாரம் ' என்றார் " என்று தெரிவித்துள்ளார்.[1]

2.7.88. நாகம்[2]

மலையைச் சார்ந்த கோட்டுப்பூ.[3] குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்றுள்ளது.[4] நச்சினார்க்கினியர் உரை ' நாகப்பூ ' என்று குறிப்பிடுகின்றது.[5]

நாகம் என்பது சுரபுன்னை மரத்தையும் உணர்த்த வழங்கியது என்பதைப் பத்துப்பாட்டு உரையினின்று அறிய முடிகின்றது.

" நல்லிணர் நாகம் நறவஞ் சுரபுன்னை "[6]

---

1. நற்றிணை மூலமும் உரையும், பக். 12 (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை)1967 நான்காம் பதிப்பு.
2. " நாகம் பலினி ஞாழலாகும் " - பிங். 2682
3. " நாகம் நாறும் நரந்தம் நிரந்தன " - சிலப். 492
4. " குறிஞ்சி. 94
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492
6. பரி. 12.80

என்று வருவதனின்று நாகம் வேறு, சுரபுன்னை வேறு என்பது அறியப்படும்.

சுரபுன்னைக்கு வழை என்று மற்றொரு பெயரும் உண்டு. குறிஞ்சிப் பாட்டில் " கொங்குமுதிர் நறுவழை " [1] என்று குறிக்கப் பட்டது சுரபுன்னைப்பூ, " நாகம் " [2] என்று பின்பு குறித்தது அதனின்று வேறுபட்ட மற்றொன்று என்பது புலப்படும்.

ஆனால், " நீளுக நறுந்தண்டார் " [3]
" மலர் நாகத்து " [4]
" மீமிசை, நாக நறுமலர் உதிர " [5]
" நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்து " [6]
" நறுவீ நாகமும் " [7]
" நாகம் திலகம் நறுங்காழாரம் " [8]

---

1. குறிஞ்சி. 83.
2. குறிஞ்சி. 94
3. கலி. 39:3
4. பொருந. 209
5. திரு. 301, 302
6. சிறுபாண். 108
7. சிறுபாண். 116 " நறுவீ யுறைக்கும் நாக நெடுவழி " - சிறுபாண். 8
8. மலை. 520

என்னும் பாடல் வரிகளுக்குரிய உரையில் நாகம் என்பது சுரபுன்னை என்று நச்சினார்க்கினியர் தெரிவித்துள்ளார்.

2.7.89. நெய்தல்[1]

பகலில் மலரும் சுனைப்பூ வகையை உணர்த்தும். தாமரைக்கு அடுத்தபடியாக அழகுமாட்சி அமைந்த நீர்ப்பூக்கள்.

நெய்தல் என்பதை இனப் பொதுப்பெயராகக் கொண்டு, அதன் வெவ்வேறு வண்ணங்களைத் தக்கவாறு அடைமொழி தந்து வழங்குவது சங்கப் பாடலில் பயின்றுள்ள நிலைமையாகும். வண்ணம் குறிக்கும் அடைமொழியின்றி வழங்கப்படும்போது, நெய்தல் என்பது பொதுவாக வெண்ணிற நெய்தல் மலர்களை உணர்த்தும்.[2]

" முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும் " [3]

எனவும்,

---

1. a class of water flowers, Nymphaea alba. J.P.F. Dict. P.630
Nymphaea stellata.
- பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.58

2. டாக்டர் தி. முத்து—கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல்நிலம், பக். 301, (அதிபத்தர் அச்சகம், சென்னை-20) 1978, முதற்பதிப்பு.

3. திரு. 73-76

" முட்டாள சுடர்த் தாமரை
கட்கமழும் நறு நெய்தல்
வள்ளிதழ் அவிழ் நீலம்
மெல்லிலை யரி யாம்பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கை "[1] எனவும்,

" தண்ணறு முல்லையும் தாழ்நீர்க் குவளையும்
கண்ணவிழ் நெய்தலும் கதுப்புற அடைச்சி
வெண்பூ மல்லிகை விரியலொடு தொடர்ந்த
தண்செங் கழுநீர்த் தாதவிரி பிணையல் " எனவும்

வரும் பாடல்களில் நெய்தல் என்பது வெண் நெய்தல் மலரையே உணர்த்தியது.

குறிஞ்சிப்பாட்டில்,

" நீணறு நெய்தல் "[2] எனவும்,

" மணிக்குலைக் கட்கமழ் நெய்தல் "[3] எனவும்,

சொல்லப்பட்டவற்றுள், முன்னையது வெண்ணிறப் பூவினை உணர்த்தும், மற்றையது, மணிபோலும் நீல வண்ணம் உடைய குவளையினைக் குறிக்கும் " நீல்நறு நெய்தல்" என்று நீலமலர் சொல்லப்பட்டது.[4]

" பல்லிதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும் "[5]

---

1. மதுரை. 249-253; சிலப். 14:76-79
2. குறிஞ்சி. 79
3. குறிஞ்சி. 84
4. புறம். 144:4
5. ஐங். 2:4

எனவரும் பாட்டிலும் நெய்தல் வெள்ளை மலரைக் குறிக்கும். இவற்றால், வெள்ளைப்பூவாகிய நெய்தலுக்கு வண்ணம் பற்றிய அடைமொழி தரும் வழக்கம் இல்லை என்பதை அறியலாம்.

அன்றியும், ஐங்குறுநூற்றில் வெள்ளாங் குருகுப் பத்து என்னும் பகுதியில் இலைகளின் இடையே காணப்பட்ட வெண்மலரை வெள்ளாங் குருகின் இளங்குஞ்சு என்று கருதிப் பார்க்கச் சென்றமடநடை நாரையின் கால்களால் வெண்ணிற நெய்தல் மொட்டுகள் கட்டவிழ்ந்த நிலையை அம்மூவனார் காட்டியுள்ளார்.[1]

" மணிக்கலத்தன்ன மாயிதழ் நெய்தல் "[2] எனவும்,

" வண்பிணி யவிழ்ந்த கண்போல் நெய்தல் "[3] எனவும்,

" மையென விரிந்தன நீணறு நெய்தல் "[4] எனவும்,

வரும் இடங்களில் கருநீல மலர் என்பது புலப்படுகின்றது. சுனையும் வயலும் பொய்கையும் ஏரியும் பற்றிச் சொல்லும் பாடல்களில்

---

1. ஐங். 151
2. பதிற். 30:2
3. பதிற். 51:17
4. மலை. 124

நெய்தற் பூவும் இடம்பெறுகின்றது.[1]

2.7.90. நெருஞ்சி[2]

முள்ளுடைய செடிப்பூ. இதன் மஞ்சள் வண்ணப் பூக்கள் மணம் அற்றவை; சூடப்படுவதில்லை.

" சிறு பூ நெருஞ்சி "[3]

என்று சிறிய பூவினையுடைய நெருஞ்சி குறிக்கப்பட்டது. சின்னம்போன்ற உட்குழிந்த அமைப்புடைய நெருஞ்சி மலரைப் பற்றிப் புறநானூறு தெரிவிக்கின்றது.[4] ஞாயிறு செல்லும் வழி நோக்கி மலர் பார்த்து

---

1. நற். 8:8; 23:7-9; 27:9-11; 60:9; 78:2; 7,8:113:7; 138:6,7; 155:2; 183:10; 190:5; 195:6-9; 239:6,7; 283:1-3; 287:5; 349:3; 372:3; 397:2; குறுந். 9:4-6; 55:1; 276:4; 336:3-5; 407:1,2; ஐங்.2:4; 412:1-3; 435:2; பதிற். 13:3; 19:21; 64:16,17; 71:2; 78:4; பரி. 8:74; 11:104; கலி. 74:2; 75:1; 142:23 143:31; அகம். 10:5; 70:11,13; 83:12-14; 100:15-17; 130:12,13; 130:8; 160:13,14; 170:4,5; 230:1-3; 240:3; 290:14; 360:4,5; 370:10,11; 400:20-23; புறம். 48:3; 61:2; 209:2; 339:8; பொருந. 218,219; பெரும்.213; மதுரை. 281. பட்டின. 241.
2. Cow's thorn, tribulus terrestris - Ety. Dict. P.189. பெருநெருஞ்சி, a large thistle, Tribulus Conginuous. — J.P.F. Dict. P.631.
3. பட்டின. 256
4. புறம். 155:4,5

நிற்கும் தன்மையைப் புலவர் சிலர் குறித்தனர். [1]

## 2.7.91. நெல்

மருத நிலத்துப் பயிர். மங்கலமும் மிக்க பயனும் உடையது.

" வேப்புநனை யன்ன நெடுங்கட் களவன்
தண்ணக மண்ணளை நிறைய நெல்லின்
இருப்பு உறைக்கும் ஊரன் " [2]

என்னும் பாடலில், நெல்லின் பூக்களால் நண்டுவளை நிறைக்கப்பட்டமை உள்ளுறைக் கருத்தாக இடம்பெற்றது.

## 2.7.92. நொச்சி [3]

மருதநிலம் சார்ந்த குறுமரவகை. வேலியாகவும் நொச்சி வளர்க்கப்படும். [4] வெண்ணொச்சி, கருநொச்சி என இருவகை உள. கருநொச்சி சிந்துவாரம் என்றும் சொல்லப்படும். குறிஞ்சிப் பாட்டின் மலர்வரிசையில் சிந்துவாரம் இடம்பெற்றது. [5] இதன்

---

1. குறுந். 315:3,4; அகம். 336:16-18
2. ஐங். 30:1-3
3. Vitex negundo, vitex trifolia - Eng Dict. P.255
4. "நொச்சி வேலித்தித்தன் உறந்தை "-அகம்.122:21
5. குறிஞ்சி. 84; உரை: கருநொச்சிப்பூ - பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 491

மலர்கள் கருநீல நிறம் உடையவை.[1] நண்டின்கண் போன்ற அரும்புகளை உடையது நொச்சி.[2] நொச்சி மாலை சூடற்குரியது.[3] ஊர் காக்கும் மறவர் நொச்சியை அணிந்தனர்; தழையுடைக்கும் நொச்சி பயன்பட்டது.[4]

2.7.93. பகன்றை

" பகன்றை சிவசிவப்பை "[5]

" சிவேதை பகன்றை "[6]

" பகன்றை நறையா லென்னப் பகர்வர் "[7]

இவற்றால், தாவரத்தின் பெயர் இடந்தோறும் காலந்தோறும் மாறுவது உண்டு என்பதையும் ஒரே பெயரில் இருவேறு பொருட்கள் அமைவதையும் அறிய முடிகின்றது.

பகன்றை என்னும் சொல் சிவதை, சிவசிவப்பை என்று சொல்லப்பட்ட இருவேறு வகைத் தாவரத்துக்கும் உரிய இலக்கியச் சொல்லாக அமைந்தது.

---

1. நற். 184:9; குறுந். 138:3-5
2. நற். 267:1,2
3. நற். 293:1
4. புறம். 271,272
5. பிங். 2882
6. பிங். 2898
7. திவா. பக். 94; பகன்றை என்பது பெருங்கையால் என்னும் கொடி என்றார் அடியார்க்கு நல்லார்-சிலப். 13:155-160 உரை.

குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்ற பகன்றை என்னும் சொல்லுக்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர்,

" இது சிவதை ... ... சிறுசிறுப்பை யன்று " [1]

என்று எழுதியுள்ளார். பகன்றை என்பது, மருதநிலம் சார்ந்த சேற்றில் வளர்ந்து படரும் கொடி வகையது.[2] பெரிய வெண்மலர்களை உடையது. பனிக்காலத்தில் மலரும். உழவரும் கோவலரும் பிறரும் பகன்றையை அணிவர்.[3]

மருதம்பற்றியும், பனிக்காலம் பற்றியும் அமைந்த பாடல்களில் பகன்றை மலரின் தோற்றம் பல உவமைகளுடன் தெரிவிக்கப் பட்டுள்ளது.[4] நறுமணத்திற்கு மாறுபட்ட கள்ளின் மணத்தினையுடையது பகன்றை என்னும் ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.[5]

---

1. குறிஞ்சி. 88; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக்.491

2. " இவர் பகன்றை " - பொருந. 195
"ஒலிந்த பகன்றை விளைந்த கழனி " - மதுரை. 261
" பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர் " - புறம்235:18

3. " சில்லே நாளர்,
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
.... ... ... ... சூடி " - பதிற்.76:11-13

" பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர் "-ஐங். 87:1
" பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர் " - மலை.459

4. நற். 86:3; ஐங். 97:1,2; 456:1,2; கலி. 73:1,2
அகம். 24:1-5; 217:6-8; 219:3-5; 243:3,4;
255:11,12; 316:6; புறம். 16:14; 393:17,18;

5. குறுந். 330;

## 2.7.94. பயினி

குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்ற மலர்களில் பயினியும் ஒன்று.[1] இதைப்பற்றி வேறொன்றும் அறியக்கூடவில்லை.

## 2.7.95. பலாசம் ( புனமுருக்கு )[2]

வேனிற்காலத்தில் மலரும் கோட்டுப்பூ. சிவந்த வண்ணம் உடையது. குறிஞ்சிப்பாட்டில் அது இடம்பெற்றுள்ளது.[3] முருக்கு என்றும் கவிர் என்றும் சொல்லப்படும் பூவினின்று இது வேறுபட்டது, இந்த பலாசம். புரசமரம் எனப்படுவதும் இதுவே.[4]

## 2.7.96. பனை ( பெண்ணை, போந்தை )

பல பயன்களும் தரும். புல் வகையுள் பெரியது. பனையின் பாளை கட்டவிழ்ந்து விரிந்த, மலர்திலையில் சுரக்கும் இனிய சாறு பற்றி வேம்பற்றூர்க் குமரனார் தெரிவித்துள்ளார்.

---

1. குறிஞ்சி. 69
2. Erythrina Indica, J.P.F. Dict. P.617 & P.812
3. குறிஞ்சி. 88
4. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 779

" அரியற் பெண்டிர் அலகிற் கொண்ட
பகுவாய்ப் பாளைக் குவிகுலை சுரந்த
அரிநிறக் கலுழிஆர மாந்தி " [1]

விரியாத பாளை ( நகும்பு ) சினைமுதிர் வரானுக்கு உவமையாயிற்று.[2]

## 2.7.97. பாங்கர்

பாங்கர்ப்பூ முல்லைக்கலியுள் சொல்லப்பட்டது.

" பாங்கரும் . . . . . . . . .
. . . . . . . . . கமழ்கண்ணி மலைந்தனர் " [3]

" பாங்கரும் முல்லையுந் தாய பாட்டங்கால் " [4]

குறிஞ்சிப் பாட்டின் மலர்வரிசையில் பாங்கர் என்ற சொல்லுக்கு நச்சினார்க்கினியர் ஓமை என்று உரை வரைந்துள்ளார். [5]

## 2.7.98. பாதிரி [6]

வேனிற்காலத்தில் மலரும் மணமுடைய கோட்டுப்பூ. சூடப்படுவது. ' தேங்கமழ் பாதிரி ' என்றார் கபிலர். [7]

---

1. அகம். 157:1-3; சங்க இலக்கியம், வையாபுரிப்பிள்ளை பதிப்பு.
2. புறம். 249:5;
3. கலி. 103:3,4
4. கலி. 111:3,4
5. குறிஞ்சி. 85; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக்.49
6. trumpet flower tree, Stereospermum chelonoides, stereosperm[um] Bignonia suaveolens. Ely. Dict.
— பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.120,
7. குறிஞ்சி. 74

பாலைத்திணைப் பாடலுள்ளும் வேனிற்கால வருணனையிலும் பாதிரி மலர் பற்றிய செய்திகள் இடம்பெறக் காணலாம். [1]

2.7.99. பாரம் [2]

பருத்திச் செடியைப் பாரம் என்று இலக்கியம் குறிப்பிடுகின்றது. குறிஞ்சிப் பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றுள்ளது. [3] பருத்தி மலருக்கு மணமில்லை. அது சூடப்படுவதுமில்லை.

2.7.100. பாலை. [4]

வெண்ணிறமுடைய கோட்டுப்பூ. [5] வேனிற்கால மலர். குறிஞ்சிப் பாட்டின் மலர்வரிசையில் இடம்பெற்றுள்ளது. [6]

2.7.101. பிடவம் ( பிடவு ) [7]

கார்காலத்தில் காட்டுநிலத்தில் மலர்ந்து விளங்கும்.

---

1. நற். 52:1,2; 118:7-9;
"பராஅரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்" -நற்.337:4;
" வேனிற் பாதிரிக் கூன்மலரன்ன ..." -குறுந்.147:1
ஐங். 346:1-3; பரி. 12:79; அகம்.99:6,7; 191:1; 237:1; 257:1,2; 261:1; புறம். 70:14; 399:7-9
பெரும். 7-9.
2. Indian cotton plant, Gossypium herbaceum - Ety. Dict. P. 26
3. குறிஞ்சி. 92
4. Wrightia tinctoria.
—பி.எல். சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.6
5. " கொடிறுபோல் காய வாலிணர்ப்பாலை "-நற்.107:3
6. குறிஞ்சி. 77
7. A wild shrub bearing sweet smelling white flowers. — J.P.F. Dict. P.697.

குறுமர வகையது.[1] முல்லைத்திணைப் பாடல்களில் பெரிதும் இடம்பெற்றுள்ளது.[2]

## 2.7.102. பித்திகை ( பித்திகம் )[3]

மாரிக்காலத்தில் மாலையில் மலரும் கொடிப்பூ.[4] முகைகளின் புறம் சிவந்து தோன்றும். விரிந்த மலர் வெண்மை வண்ணம் உடையது. முகையின் முனை கூரியது; காம்பு நீண்டது; எனவேதான், ' பித்திகைக் கொழுமுகை ஆணியாக '[5] மாதவிக்குப் பயன்பட்டது. மலர்கள் நறுமணம் உடையவை. தொடுத்துச் சூடப்படும். மாரிக்காலத்தையும் குளிர்காலத்தையும் பற்றிய பாடல்களில் இந்த மலர்பற்றிச் சொல்லப்படுதலைக் காணலாம்.[6]

குறிஞ்சிப்பாட்டில் ' பித்திகம் ' என்பதற்கு நச்சினார்க்கினியர் ' பிச்சிப்பூ ' என்று உரை வகுத்தார்.[7] சொல் வரலாற்றின்படி,

---

1. " தலைப்பெயற்கு அரும்பு ஈன்று
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவம் " - கலி.101:1,2
2. நற். 99:9,10; 242:1; 246:8,9; 251:1,3; 256:7; ஐங். 455:3; 461:1,2; 499:1; பதிற்.66:1; கலி. 102:1,2; 103:2; அகம். 23:4; 34:1,2; 147:1; 154:4,5; 183:11,12; 184:7; 304:11 344:1-3; குறிஞ்சி. 78
3. A flowering shrub. - J.P.F. Dict. p.699.
" கருமுகை பித்திகை சாதியாகும் " - பிங். 2947.
4. " மாரிப் பித்திகத்து ஈரிதழ் அலரி " - நற். 314:3;
5. சிலப். 8:55
6. நற். 97:8; குறுந். 94:1,2; குறுந். 168:1-4; அகம். 42:1-3; நெடு. 39-41.
7. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 491

பித்திகை என்பது மருவிப் பிச்சி என்று ஆவது இயல்பு எனினும் தமிழகத்தின் சில இடங்களில் இப்போது பிச்சி என்று சொல்லப்படுவது சங்க இலக்கியப் பித்திகை அல்லாத மற்றொன்று. முகைப்புறம் சிவந்த பித்திகை தமிழகத்தில் முல்லையைப்போல் மிகுதியாகக் காணப்படாவிடினும், சில மாவட்டங்களில் இடம்பெறக் காணலாம்.[1] அண்மையில் சென்னைக் கடைவீதிகளில் இந்த மலர் விற்பனைக்கு வருகின்றது.

## 2.7.103. பீரம் ( பீர்க்கு)[2]

வெளிர் மஞ்சள் நிறம் உடைய கொடி மலர். குளிர் பனிக் காலத்தில் மலரும். மென்மணம் உடையது. சூடப்படாதது. பனிக்காலப் பாடல்களில் சிறப்பிடம் பெறுவது.[3]

## 2.7.104. பூழகு ( மலையெருக்கம்பூ )

" அரக்கு விரித்தன்ன பரேரம் புழுகு "[4]

---

1. தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட்டினம் மல்லி என்று சொல்லப்படுகின்ற
2. Sponge guard, Luffa acutangula - Ety. Dict. P.281.
3. நற். 197:2; 197:2; 277:6-8; 326:6,7; ஐங்.464:
கலி. 31:4; 53:15; 124:8; அகம்.45:7,8;
57:12,13; 135:2; குறிஞ்சி. 92
4. குறிஞ்சி. 96.

என்று கபிலரது குறிஞ்சிப்பாட்டில் சிறப்பிக்கப்பட்டுள்ளது. எனவே, சிவந்த மலர் என்பதை அறியலாம். பூழகு என்பதற்கு மலையெருக்கம்பூ என்று உரையெழுதிய நச்சினார்க்கினியர், "பூழகு என்பது செம்பூ, புனமுருங்கையும் ஆம்" என்றும் தெரிவித்துள்ளார்.[1] செம்பூவினைப் பற்றிப் பிற புலவரும் கூறியுள்ளனர்.[2]

2.7.105. புன்கு[3]

இளவேனிற்காலத்தில் மலரும் கோட்டுப்பூ. மலருக்கு மணமில்லை. சூடப்படுதலுமில்லை. உதிர்ந்த மலர்கள் சிதறிய தெந்நெற்பொரி போலத் தோன்றும்.[4] பாலைத்திணைப் பாட்டில் புன்க மலர் இடம்பெறல் இயல்பு.[5]

2.7.106. புன்னாகம்

கோட்டுப்பூ. 'நறும்புன்னாகம்' என்று கபிலர் குறித்தமையால் மணமுடையது என்பதை அறியலாம்.[6] இது 'புன்னை விசேடம்' என்றார் நச்சினார்க்கினியர்.[7]

---

1. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492
2. "செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர்" - பரி.22:21
* " மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணி " - புறம். 264:2
3. Pongamia glabra, Ety. Dict. p.281
4. குறுந். 53:2-4
5. குறுந். 341:2; ஐங். 347:3; 368:2;
6. குறிஞ்சி. 91
7. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 492 ('புன்னை புன்னாகம்' என்று (பிங்.2689) நிகண்டு குறிக்கின்றது. பொதுப்பெயரும் சிறப்புப்பெயரும் ஒருங்கே நிகண்டுகளில் குறிக்கப்பெறும் என்பதற்கு ஈதோர் எடுத்துக்காட்டு.

## 2.7.107. புன்னை [1]

கடற்கரை நிலத்துக்குரிய கோட்டுப்பூ. மணம் பொருந்திய வெண்மலர்க் கொத்துடையது. [2] அரும்புகள் முத்தினை ஒத்துத்திரண்டு உருண்ட தோற்றம் உடையவை. [3] அந்தி மாலையில் மலரும்; மலர்கள் சூடப்படும். நெய்தல் சார்ந்த பாடல்களில் புன்னை பெரிதும் இடம்பெறக் காணலாம். [4]

## 2.7.108. பூளை [5]

' வேறுபல் பூளை ' என்று பட்டினப்பாலை குறிப்பிட்டமையால் [6] பூளை என்னும் பெயர் கொண்ட செடிவகை பல என்று அறியலாம்.

---

1. Mastwood, Calophyllum inophyllum - Fty. Dict. P 289. Alexandrian Laurel.
   —பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.121
2. ' கடியிரும் புன்னை ' - குறிஞ்சி. 93
3. ' நெடுங்கால் புன்னை நித்திலம் வைப்பவும் ' - சிறுபாண்.149
4. நற். 49:8; 74:6,7; 76:6; 78:3; 87:6,7; 94:5,6; 278:1-5; 323:7,8; 327:8; 96:2; 167:8; 231:6,7; 235:1; 249:1-5; 375:1-3;
   குறுந்.123:3; 299:3; 311:5,6; பதிற்.30:3,4; கலி.123:1,2; 127:1; 132:8; 135:6,9,12; 136:13; அகம். 10:1-4; 30:13,14; 70:9,10;
   80:11-13; 100:12,13; 126:15; 145:13; 170:2; 180:13,14; 230:8,8; 240:19; 250:2,3; 260:9; 310:12; 320:20; 360:17; புறம்.24:7,8.
5. a medicinal shrub - J.P.F. Dict. P.135
6. பட்டின. 235.

சிறுபூளை, பெரும்பூளை என்னும் வகைகளை, நச்சினார்க்கினியர் உரை குறிப்பிட்டுள்ளது.[1]

சிறுபூளை என்பது உழிஞைக்கொடி ( பார்க்க: உழிஞை 2.7.18 ) பெரும்பூளை என்னும் மற்றொரு வகைத் தாவரத்தின் பூ, பஞ்சினை ஒத்துக் காற்றில் விரைந்து பறந்து பரவும் இயல்புடையது.

" வளிமுனைப் பூளையின் ஒய்யென்று அலறிய "[2]

என்பதற்கு " பூளைப்பூவென விரைந்து " என்று உரை அமைந்துள்ளது.[3]

" கரும்பின் கணைக்கால் வான்பூ
கோடைப்பூளையின் வாடையொடு துயல்வர "[4]

என்று பூளைப்பூவின் மென்மையான மேனிக்குப் பூளைப்பூ உவமை சொல்லப்பட்டுள்ளது.[5] மணமற்ற பூளைப்பூ விரும்பிச் சூடப்படுவதன்று.

---

1. " சிறுபூளையும் பெருபூளையும் உண்மையின் "–பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 537
2. அகம். 199:10
3. அகநானூறு மூலமும் நாட்டார் உரையும், பக். 163 (பாகனேரி தனவைசிய இளைஞர் சங்க வெளியீடு, சென்னை)1964, நான்காம் பதிப்பு.
4. அகம். 217:4,5
5. " வெருகின், பூளையன்ன பொங்குமயிர்ப் பிள்ளை "–அகம். 297:13 14.

மடல் ஏறுவோன் சூடுவனவற்றுள் ஒன்றாகப் பூளைப்பூவும் சொல்லப் பட்டுள்ளது.[1]

2.7.109. போங்கம் ( மஞ்சாடிப்பூ )

குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றுள்ளது.[2] ' மஞ்சாடிப்பூ ' என்று உரை தெரிவிக்கின்றது.[3] இதனைப்பற்றி வேறுயாதும் அறிதற்கில்லை.

2.7.110. மணிச்சிகை ( செம்மணிப்பூ )

குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்றது.[4] உரை, ' செம்மணிப்பூ ' என்று குறிக்கின்றது.[5] சிவந்த மலர் என்று உய்த்து உணரக்கூடும். வேறொரு தன்மையும் அறிதற்கில்லை.

---

1. 'அணிப்பூளை யாவிரை எருக்கொடு பிணித்தியாத்து '-கலி.138:9, 138:18,19, 140:4
2. குறிஞ்சி. 74
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 490
4. குறிஞ்சி. 64
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 489

## 2.7.111. மராஅம் ( மரவம், வெண்கடம்பு )[1]

வேனிற்காலத்தில் மலர்ந்து மணங்கமழும் கோட்டுப்பூ. சூட்டப்படுவது; வெண்ணிறம் உடையது. முருகனோடு தொடர்புபடுத்திச் சொல்லப்படும் கடம்பு; கார்காலத்தில் மலர்வது;[2] அதைச் செங்கடம்பு என்கிறார் நச்சினார்க்கினியர்.[3]

" எரிகான்றன்ன பூஞ்சினை மராஅத்து "[4]

என்று மலைபடுகடாம், செங்கடம்பு பற்றித் தெரிவித்தது. வேனிற் காலத்தில்மலர்ந்து தோன்றும் மராம் பற்றிப் பாலைத்திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.[5] குறிஞ்சிப்பாட்டில் ' மராம் ' என்று குறிக்கப்பட்டதனை ' மரவம்பூ ' (வெண்கடம்பு ) என்றார் நச்சினார்க்கினியர்.[6]

## 2.7.112. மருதம்[7]

" வயல் சார்ந்த நிலத்துக்குரிய கோட்டுப்பூ ".

---

1. Seaside Indian oak, Barringtonia racemosa, Small Indian oak, Barringtonia acutangula - Ety. Dict. P. 3
2. திரு. 10,11
3. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 34
4. மலை. 498
5. நற். 20:2,3; குறுந். 22:3,4; 211:4,5; ஐங்.348:2, 383:1-3; கலி. 26:1; அகம். 21:9-12; 83:1,2; 99:1,2; 121:7,8; 127:13,14; மலை.428.
6. குறிஞ்சி. 85; பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக்.491
7. Lagerstroemia.
பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.44.

ஊதா நிறம் சிறிது கலந்து இளஞ்சிவப்பான பெரிய இதழ்கள் மருதப் பூவிற்கு உண்டு. கண்ணை ஈர்க்கும் மிக அழகு வாய்ந்த பூக்கள் ஆறு சிவந்த இதழ்கள் ஏந்திய தட்டுகள் போலத் தோன்றும்.[1] இதை முருக வழிபாடு செய்யவுற்ற சூரரமகளிர் சூடியதை நக்கீரனார் தெரிவித்துள்ளார்.[2] மருத மலர் மணம் உடையது.[3] மருத நிலம் பற்றிய பாடலில் மருத மலர் குறிக்கப்பெற்றமை காணலாம்.[4]

2.7.113. மல்லிகை[5]

மணமுடைய வெண்மலர்களைக் கொண்ட கொடிவகையது. வேனிற்காலத்தில் மலரும். மலர்கள் சூடப்படுவன. மல்லிகை என்னும் சொல் சங்க இலக்கியத்தில் அருகிய வழக்கு.

" நெய்தல் தொடுத்தாளே
மல்லிகா மாலை வளாய் "[6] எனவும்,

---

1. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.44
2. "கருந்தகட்டு
   உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டி " - திரு.27,28
3. 'தேங்கமழ் மருதினர் '- திரு. 34
4. நற். 350:3; குறுந். 50:2; ஐங். 7:4; புறம்.351:10; குறிஞ்சி. 73
5. Arabian Jasmine, Jasminum Sambac. J.P.F. Dict. P.62
6. பரி. 11:104,105.

" மல்லிகை மௌவல் "[1] எனவும்,

பரிபாடல் இந்தப் பெயரைக் குறிக்கின்றது.

" மாலதி அநங்கம் பூருண்டி மல்லிகை "

என்று நிகண்டு குறிக்கின்றது.[2] இவற்றுள் மல்லிகை என்பதைத் தவிர ஏனைச் சொற்கள் சங்கத் தமிழில் இடம்பெறவில்லை.

2.7.114. மா

கோட்டுப்பூ. இளவேனிற்காலத்தில் மலரும். நீர்வளமுடைய மருதநிலத்தில் சிறப்பாகக் காணப்படும். மாம்பூக்கள் மங்கிய வெண்ணிறம் கொண்டவை; மென்மணம் உடையவை. மா என்னும் மரத்தில் பலவகைகள் உள.

" வேறுபடக் கவினிய தேமாங்கனியும் "[3]

என்று பலவகைக் கனிகளை மதுரைக் காஞ்சி தெரிவிக்கின்றது. " கடிகமழ்கனி மா ", "தேமா" என்னும் இருவகை மலர்களைக்

---

1. பரி. 12:77
2. பிங். 2944
3. மதுரை. 528

குறிஞ்சிப் பாட்டில் கபிலர் குறித்துள்ளார்.[1] மருதத்தினை சார்ந்த பாடல்களில் மாம்பூ இடம்பெறுகின்றது.[2]

2.7.115. மால்வெள்ளோத்திரம் ( வெள்ளிலோத்திரம் )

வேனிற்காலத்தில் மலரும் வெண்மலர். சூடப்படும்.

" மால்வெள்ளோத்திரத்து மையில் வாலிணர்
அருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டும் "[3]

என்பதற்கு, " வெள்ளிலோத்திரத்துக் குளிர்ச்சியையுடைய மலரை ஆற்றின் வெம்மை தீரச் செல்வோர் அணிந்து செல்வர் "[4] என்று பழையவுரைக் குறிப்பு உள்ளது.

உலோத்திரம் என்னும் பெயரில் சிவந்த பூ ஒன்றினைக் கல்லாடம் சொல்லுகின்றது.[5]

2.7.116. முசுண்டை[6]

பனிக்காலத்தில் மலரும் கொடிப்பூ. வெண்மை நிறமுடையது.

---

1. குறிஞ்சி. 76,90
2. ஐங். 10:4; 19:1-3
3. ஐங். 301:1,2
4. ஐங். உ.வே.சா. பதிப்பு, பக். 123
5. கல்லாடம். 98:31
6. Rivea ornata - Ety. Dict. P.329.

" சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ "[1]

" குழையமல் முசுண்டை வாலிய மலர "[2]

" கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும் "[3]

" பூங்கொடி முசுண்டைப் பெரிப்புற வான்பூ "[4]

எனவரும் பாடல்களின்று முசுண்டை மலரின் இயல்பு அறியப்படும். இம்மலர் பனிக்காலம் பற்றிய வருணனையில் பெரிதும் இடம்பெறக் காணலாம்.[5]

2.7.117. முண்டகம் ( கழி முள்ளி )

கருநீல வண்ணம் கொண்ட செடிப்பூ.[6] நீர்க்கரை சார்ந்து வளர்வது. செடியில் முட்கள் உண்டு.[7] பூக்கள் தொடுத்துச்

---

1. அகம். 235:9
2. அகம். 264:1,2
3. சிறுபாண். 166
4. நெடு. 13
5. அகம். 94:1-3; மதுரை.281: மலை.99-101
6. "மணிப்பூ முண்டகம் " - நற். 191:9; மதுரை.96
7. "அணிற்பல்லன்ன கொங்குமுதிர் முண்டகம் " -குறுந்.49:1

சூடப்படும்.[1] கடற்கரைச் சூழலைச் சொல்லுமிடத்து, இந்த மலர்பற்றிக் குறித்துள்ளனர் புலவர். [2]

2.7.118. முருங்கை

வெண்மை நிறமுடைய கோட்டுப்பூ. நறுமணம் உடையதன்று. சூடப்படுவதுமில்லை. கோடைக்காலத்தில் இம்மலர்கள் மிகுதியாய்க் காணப்படும்.

" அலங்குசினை, நாரில் முருங்கை நவிரல் வான்பூ
சூரலங் கடுவளி யெடுப்ப ஆருற்று
உடைதிரைப் பிதிர்வின் பொங்கிமுன்
கடல்போல் தோன்ற காடிறந்தோரே " [3] எனவும்,

" நெடுங்கால் முருங்கை வெண்பூ " [4] எனவும்,

முருங்கை மலர் பற்றிக் குறித்துள்ளார்கள் புலவர்கள்.

---

1. புறம். 24:10,11
2. நற். 248:2; குறுந். 51:1-3; கலி. 133:1; அகம். 130:3,4; சிறுபாண். 148
3. அகம். 1:15-19;
4. அகம். 53:4.

2.7.119. முல்லை [1]

கார்காலத்தில் மலரும் கொடிப்பூ. வெண்மை நிறமும் நறுமணமும் உடையது. மனையற மகளிர் விரும்பிச் சூடும் தன்மையது. முல்லைத் திணைக்குரிய பாடல்களில் பெரிதும் இடம்பெறுகின்றது. மாலை வழிபாட்டுக்குச் சிறந்தது. [3]

2.7.120. முள்ளி

மருதநிலச் சூழலில் இடம்பெறும் முட்செடி மலர். நீலமணி நிறமுடையது. சூடப்படுவது.

---

1. Jasminum auriculatum.
— பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், பக்.56

2. நற். 248:1-4; 321:3-5; 361:1,2; 367:8; குறுந். 62:1; 126:3-5; 162:3; 186:1-3; 220:3- 323:4,5; 348:2,3; 358:6,7; 382:1,2;
387:1; ஐங். 408:2; 412:1-3; 422:2; 437:3; 446:1; 448:3; 454:3; 476:1-3; 489:1,2; 492:2; 494:2; பதிற். 66:16; கலி. 22:9;
32:16; 35:10; 66:6; 91:2; 103:6; 105:54 கலி. 108:15; 42; 113:25; 115:5; 118:19,20; 119:7; அகம். 4:1; 43:9-11; 74:6-8; 84:8;
124:11,12; 134:5; 144:3-5; 164:6; 184:9,10 216:10; 234:13,14; 244:4-6; 254:15,16; 274:12,13; 314:19,10; 364:7; 391:5;
புறம். 117:8,9; 137:9,10; 200:9; 242:6; 335:3; 352:4; பொருந. 200; சிறுபாண். 89;28-30. குறிஞ்சி. 77.

3. முல்லை. 9,10.

" கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்
பொய்தல் மகளிர் விழவணிக் கூட்டும் " 1

" மணிமருள் மலர முள்ளி அமன்ற
துணிநீர் இலஞ்சி " 2

" முட்சினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கால் மாமலர் கொய்துகொண்டு " 3

மேற்காட்டியவற்றால் முள்ளியின் நிலைமை தெரியவரும்.

2.7.121. மௌவல்

" மௌவல் என்பது வனமல்லிகையே " 4

என்பதனின்று மல்லிகை இனம் சார்ந்த கொடிப்பூ என்பது தெரியவரும். வேனிற்காலத்தில் மாலையில் மலரும். மணமுடைய மலர்கள் சூடப்படும். 5

மல்லிகையுடன் ஒருங்கு சொல்லப்படும் தகுதியுடையது என்பதை,

---

1. அகம். 26:1-3;
2. அகம். 23:1,2
3. பெரும். 214-216;
4. பிங். 2945
5. குறுந். 19:4; கலி. 14:3; 27:4;

" மல்லிகை மௌவல் " [1] எனவும்,

" மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து " [2]

எனவும் வருவனவற்றால் அறியலாம். வேனிற்காலச் சார்புடைய பாடல்களில் மௌவல் குறிக்கப்படுகின்றது.[3]

2.7.122. யா

கோட்டுப்பூ. தொடுத்துச் சூடப்படுவது.

" உம்பல் அகைத்த ஒண்முறி யாவும் ...
.... .... ... மிடைந்த கண்ணி " [4]

என்பதற்கு " யானைமுறித்த ஒள்ளிய தளிர்களையுடைய யாம்பூவும் " [5] என்று உரை எழுதியுள்ளார் நச்சினார்க்கினியர். மலரைப்பற்றி வேறொன்றும் அறிதற்கில்லை.

2.7.123. வகுளம் ( மகிழம் )

வேனிற்காலத்தில் மலரும் கோட்டுப்பூ. மணமுடையது.

---

1. பரி. 12:77
2. இறையனார் அகப்பொருள் - மூலமும் பழையவுரையும், பக். 32
3. நற். 122:4; அகம். 23:11,12; குறிஞ்சி. 81
4. மலை. 429; 430
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 648

சூடப்படும். வகுளம் [1] என்றும் மகிழம் [2] என்றும் புலவர் குறித்துள்ளனர்.

## 2.7.124. வஞ்சி

அ. கொடி [3]

ஆ. மரம்

## 2.7.124. அ

" பூவா வஞ்சி " [4] எனவும், " வாடா வஞ்சி " [5] எனவும் வஞ்சி முதுரைப் புலவர் குறித்தமையால், பூக்களுடன் விளங்கி, வாடுந்தன்மையும் உடைய கொடி வஞ்சியும் உண்டென்பது உணரப்படும். வஞ்சிதொடுத்த கண்ணி புறத்திணை நிகழ்ச்சியால் புகழ் படைத்தது. [6]

---

1. பரி. 12:79; குறிஞ்சி. 70
2. பரி.திரட்டு. 1:7
3. Common rattan of South India, Calamus rotang. (and some other aromatic plants) Ety. Dict. P.353.
4. சிலப். 25:148
5. புறம். 39:17; சிலப். 25:190; 27:113
6. சிலப். 26:50, 51

2.7. 124. ஆ.

" நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய் " [1] எனவும்,

" வஞ்சிக்கோட்டு உறங்கு நாரை " [2] எனவும்,

வருவனவற்றால் வஞ்சி ஒரு மரம் என்பதை அறியலாம். வஞ்சி மரத்து உலர்ந்த நிலை விறகாகப் பயன்பட்ட தென்று சொல்லப்பட்டது.[3] மருதத்துக்குரிய கருப்பொருள் சொல்லுமிடத்து,

" மரம் - வஞ்சியும் காஞ்சியும் மருதும் "

என்று இறையனார் களவியலுரை குறிக்கின்றது. [4] எனவே, ஆற்றங்கரை சார்ந்து வளரும் மரவகை என்று தெரிகிறது. வஞ்சியின் கிளைகள் வீட்டுக் கூரையமைப்பதற்கு உதவியதை உரையாசிரியர் தெரிவித்துள்ளார்.[5] குறிஞ்சிப்பாட்டில் இடம்பெற்ற வஞ்சிப்பூ என்பது கொடி சார்ந்ததா, மரம் சார்ந்ததா என்று அறிதவதற்கில்லை. [6]

---

1. அகம். 226:9;
2. புறம். 384:2
3. அகம். 216:4
4. இறையனார் அகப்பொருள், மூலமும் பழைய உரையும், பக்.22
5. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 236
6. குறிஞ்சி. 89

2.7.125. வடவனம்

குறிஞ்சிப் பாட்டில் இந்தப் பெயர் இடம்பெற்றுள்ளது.[1] வேறு தன்மைகள் ஏதும் அறிதற்கியலவில்லை.

2.7.126. வழை ( சுரபுன்னை )[2]

கோட்டுப்பூ. மலையைச் சார்ந்தது. மணமுடையது. சூடப்படும். குறிஞ்சிப்பாட்டிலும்[3] புறநானூற்றிலும்[4] வழை என்று குறிக்கப்பட்டுள்ளது. பத்துப்பாட்டில் ஒருசில இடங்களில் நாகம் என்ற மரப்பெயருக்கு நச்சினார்க்கினியர் ' சுரபுன்னை ' என்று உரை வரைந்துள்ளார்.

" மீமிசை
நாகநறுமலர் உதிர் "[5]

" நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்து "[6]

" நறுவீ நாகமும் "[7]

---

1. குறிஞ்சி. 67
2. " வழை சுரபுன்னை " - பிங். 2690;
Rottelera tinctoria - Ety. Dict. P.288.
3. " கொங்குமுதிர் நறுவழை " - குறிஞ்சி. 83
4. " வழைப்பூங்கண்ணி " - புறம். 131:2;
5. திரு. 301, 302
6. சிறுபாண். 108
7. சிறுபாண். 116

" அன்றியும், நாகம் திலகம் நறுங்கா ழாரம் " [1]

என்ற தொடருக்குப் புன்னை என்று உரை வரையப்பட்டுள்ளது.[2] இந்தப் புன்னையும் சுரபுன்னையே என்று கருத இடம் உள்ளது.

2.7.127. வள்ளி

மலையைச் சார்ந்த கொடி. குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில் இடம்பெற்றுள்ளது.[3] " மலர்ந்த வள்ளியங் கானம் "[4] என்றார் கபிலர்.

2.7.128. வள்ளை [5]

கொடிவகையது. மருத நிலத்தில் நீர்க்கரை சார்ந்து வளர்வது.

வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும் " [6]

என்பதனின்று குடுதற்குப் பயன்பட்டதனை அறியலாம்.

---

1. மலைபடு. 520
2. பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக்.656
3. குறிஞ்சி. 79
4. ஐங். 250:3
5. Ipomea acqpatica, Ety. Dict. P.363.
6. பதிற். 29:3

" மயங்கு வள்ளை மலராம்பல் " [1]

என்று மருத நிலத்தின் வளமையைக் காட்ட வள்ளையும் பயன்பட்டது.

2.7.129. வாகை [2]

இளவேனிற் காலத்தில் மலர்ந்து தோன்றும் கோட்டுப்பூ. காடு சார்ந்து காணப்படுவது. புறத்திணை வகையால் சிறப்புப் பெற்றது. மென்மணம் உடையது. இதழ் என்னும் உறுப்பு இன்றித் துய்களின் தொகுப்பே மலராயிற்று.

" துய்வீ வாகை " [3] எனவும்,

" கடவுள் வாகைத் துய்வீ " [4] எனவும்,

வாகை மலர்களைப் பற்றிப் புலவர் படினர். மயிலின் கொண்டைக்கும் வாகைப்பூவினுக்கும் உள்ள ஒப்புமைத் தோற்றத்தையும் புலவர் பாடியுள்ளனர். [5] இதனை மகளிர் சூடும் வழக்கம் எங்கும் சொல்லப்படவில்லை. எனினும், குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையில் வாகையும் இடம்பெற்றுள்ளது. [6]

---

1. புறம். 16:14
2. Fragrant sirissa - Ety. Dict. P. 364. Mimosa flexuosa - J.P.F. Dict. P. 859
3. பதிற். 43:23
4. பதிற். 66:15
5. குறுந். 347:2,3; அகம். 136:10,11
6. குறிஞ்சி. 79

2.7.130. வாழை

நீர்வளமும் நிலவளமும் உள்ள இடத்தில் வளர்வது. இதன் காயும் கனியும் பயன்மிக்கவை. இதன் மலர்களை அழகுக்கென்று பறிப்பதில்லை. காய்த்து எஞ்சிய பூ சமைப்பதற்கு உதவும். கபிலரது குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையில் வாழைப்பூவும் இடம்பெற்றது.[1] வாழைப்பூவின் தோற்றத்தைப் பற்றி உவமைகள் பல உள்ளன.[2]

2.7.131. வாள்வீரம்

வையை யாற்றுடன் வரும் மலர்களைக் குறிப்பிடும் இடத்து வாள்வீரம் என்பதுவும் இடம்பெற்றுள்ளது.[3] இதன் தன்மைகளை அறிதற்குரிய குறிப்பு யாதும் சங்க இலக்கியத்தில் இல்லை. கணவீரம், வாள்வீரம் என்பவற்றிடையே என்ன தொடர்பு என்பது ஆராய்தற்குரியது.

2.7.132. வானி

குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையில் இடம்பெற்றுள்ளது.[4] பிற செய்திகள் அறியப்படவில்லை.

---

1. குறிஞ்சி. 79
2. நற். 188:1-5; 355:1-5; அகம். 134; 9-11; புறம். 237:10,11: சிறுபாண். 21,22; மலை.129-131
3. பரி. 11:19
4. குறிஞ்சி. 69

2.7.133. வெட்சி

மலைநிலத்துக் கோட்டுப்பூ.[1] சிவந்த மலர்கள் மணம் உடையவை. இவை சூடப்படுவன. புறத்திணையால் புகழ் உடையது. எனினும், நிரை கொள்ளும் கருத்து இல்லாத நிலையிலும் ஆடவரும் மகளிரும் இப்பூவினை, அணிந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.[2] குறிஞ்சிப் பாட்டிலும், இடம்பெற்றுள்ளது.[3] வெட்சியின் முகை காடையின் கால்நகம் போல்வது.[4]

2.7.134. வேங்கை[5]

மலையைச் சார்ந்த கோட்டுப்பூ. வேனிற்காலத்தில் பொன்னிறம் கொண்டு மலரும் பூக்கள் விரும்பிச் சூடப்படும். பூத்த வேங்கையின் கிளைகளும் வேங்கை மலர் சிதறிய இடங்களும் புலியினை

---

1. " வெட்சி குறிஞ்சிக்குப் புறனாய தெய்வமாறெனின் .... சூடும்பூவும் அந்நிலத்திற்குரிய பூவாதலானும் - தொல்.பொருள். இளம்பூ. பக். 74, ( சைவ சித்தாந்தக் கழகம் , சென்னை 1961, மூன்றும் பதிப்பு.
2. "சிந்தூரமும் குல்லையும் செச்சையும் வெட்சி "-பிங்.2691 "செச்சைக் கண்ணியன் " - அகம். 48 " கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சித் தளையவிழ் பல்போது கமழும் " - குறுந். 209:5,6; கலி. 103:3; புறம். 100:3-6; திரு.21
3. குறிஞ்சி. 63
4. " இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி " -அகம்.138:14
5. East Indian kino tree, Pterocarpus marsupium - Fly. Dict. P. 382.

ஒத்துக் காட்சியளிக்கும் என்று புலவர் குறித்துள்ளனர்.[1] குறிஞ்சித் திணைப் பாடல்களில் இந்த மலர் பெரிதும் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.[2]

## 2.7.135. வேரல்

வேரல் என்பது சிறுமூங்கில்,

" வேரல் பூவுடை யலங்குசினை "[3]

என்றார் நக்கீரனார். குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையிலும் இடம்பெற்றது.[4]

---

1. குறுந். 47:1,2; 44:3-7

2. நற். 13:6,7; 28:5,6; 51:11; 112:1; 125:9; 151:9; 157:8,9; 161:3; 202:5,6; 206:7; 216:6; 217:1-3; 232:7,8; 257:1,2; 259:1,2; 313:1-4; 334:3,4; 373:6; 379:3,4; 383:1,2; 384:6-8; 396:3-7; குறுந். 26:1-3; 47:1,2; 84:4; 134:3,5; 343:5,6; ஐங். 294; 311:1; 324:4; 367:2; 396:1,2; பதிற். 40:22; 41:7-13 88:33-35; பரி. 15:32; 19:77; கலி. 32:5; 39:33; 41:11; 44:3-7; 45:16,17; 46:1-5; கலி. 48:1,7; கலி. 49:1-6; 57:17; அகம். 2:16; 12:9-11; 38:1; 48:6,7; 52:1-3; 85:10,11; 132:10,11; 133:4 141:25,27; 174:10,11; 182:1; 188:6-10; 202:5; 218:21; 228:10,11; 232:78; 242:14; 272:16,17; 282:9-10; 288:3; 292:13; 298:4; 302:6; 319:8,9; 345:8,9; 349:9-1; 365:13,14 368:5-7; 378:2-4; 388:6,7; 398:17; புறம். 100 168:15; 202:18-21; 224:13-16; 265:2,3; 352: 390:21,22; திரு. 35,36; பொருந. 194,195; மதுரை. 296,297; குறிஞ்சி. 95; மலை. 305,306,434-436

3. திரு. 297,298

4. குறிஞ்சி. 71

2.7.136. வேம்பு

வறண்ட நிலத்திலும் வளர்ந்து தழைக்கும் இயல்புடைய கோட்டுப்பூ. இளவேனிற் காலத்தில் மலரும். இதன் வெண்ணிற மலர்கள் மென்மணம் உடையன. கோடையில் இளைப்பாற்றிக் கொள்ளும் குளிர் தருவதாகவும், மருத்துவப்பயன் நிறைந்ததாகவும் விளங்குவது வேம்பு. வேம்பின் மொட்டு நண்டுக்கண் போல்வது.[1] இளவேனிற் காலத்து வருணனையில் வேம்பின் மலர்ச்சியும் இடம்பெறக் காணலாம்.[2] பாண்டியர் அடையாள மாலையென்னும் சிறப்பும் வேம்பிற்குரியது.[3]

2.7.137. வேழம்

நீர்க்கரை சார்ந்து வளரும் புல்வகையது. வேழத்தின் மலர்கள் கரும்பின் மலரை ஒத்த தோற்றம் வழங்கும்.[4] பனிக் காலத்தில் மலரும். வெண்ணிறமுடையவை. மணம் அற்றவை. சூடப்படுவதில்லை. வேழத்தின் தண்டுகளை இணைத்து நீரில் மிதப்பதற்கு ஏற்ற புணையாகப் பயன்படுத்தினர்.[5] வீட்டின் மேற்கூரை

---

1. ஐங். 30:1
2. குறுந். 24:1; ஐங். 35:2; ( மருத்துவப் பயன் - புறம். 281:1; 296:1 )
3. கலி. 92:27; புறம். 45:2; 76:4-6; 77:2,3; 79:2; 371:7; நெடு. 176.
4. ஐங். 12:1; 18:1,2.
5. "வேழவெண்புணை தழீஇ" - அகம். 6:8;

அமைப்பதற்கும் வேழத்தின் உலர்ந்த தண்டுகள் உதவின.[1] ஆற்றங்கரையும் வயலும்பற்றிய பாடல்களில் வேழம் இடம்பெறக் காணலாம்.[2]

2.7.138. வேளை

காட்டுநிலத்தில் தழைக்கும் கீரை வகையது. வேளை மலர்கள் வெண்ணிறமுடையன. இவை சூடப்படுவதில்லை. வேளைப் பூவும் இலையும் புளிப்புக்கூட்டிச் சமைத்து உண்ணப்பட்டதனைப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.[3] மானுக்கும் " வேளைவெண்பூ " உணவாகும்.[4]

இதுவரையில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற மலர்களைப் பற்றிய செய்திகள் எடுத்துக்காட்டப்பட்டன. மலர்களின் பெயர்களால் ஏற்படும் தடுமாற்றத்தைப் பற்றிய கருத்துகள் எவையும் முடிந்த முடிவெனக் கொள்ளுதற்கில்லை. மேலும் அறிஞர் ஆய்வதற்குரியன.

***

---

1. பெரும். 263, " வேழக்கோலை வரிச்சாக நிரைத்து " - பத்துப். உ.வே.சா. பதிப்பு, பக். 236

2. நற். 241:5,6; ஐங்.13:1,2; 14:1; 16:1; 17:1,2; 19:3,

```
***********************************
*                                 *
*  3.    மலர்களும் மக்கள் வாழ்வியலும்  *
*                                 *
***********************************
```

3.0. மலர்களை மக்கள் பயன்படுத்தும் நிலைகள் பல திறத்தன ஆகும். வழிபாடு, வாழ்த்து, விரிச்சிகேட்டல், உண்டி, உடை, உடலோம்பல், ஒப்பனை ஆகியவைகளுக்கு மலர்கள் பெரிதும் பயன்படுகின்றன. மற்றும், காலம் அறிவித்தல், இனம் காட்டுதல், கடமையைச் சுட்டுதல், வெற்றிச்சின்னங்களாதல், முதலிய பலவகைகளில் மலர்கள் பயன்பட்டுள்ளன.

பூக்களைத் தொடுத்துப் பயன்படுத்தும் வகையைக் கொண்டு கண்ணி, தார் எனப்பல்வேறு பெயர்களைப் பெறும் நிலையும் இவண் குறிக்கப்பட்டுள்ளது. அன்றியும், பருவகாலத்துக்கேற்ப மலர் சூடுதல் வழக்கம் என்பதும் தனிமுல்லைக் கண்ணியைக் கன்னியர் சூடுதல் வழக்கமில்லை என்பதும், மனைவிக்கும் முல்லைக்கும் உள்ள ஒப்பற்ற தொடர்பும், முல்லையைத் தவிர ஏனைய மலர்களைக் கன்னியர் சூடுதல் மரபு என்பதும் தெரிவிக்கப்படுகின்றது.

மேலும், பூவிற்பனையும் மலரல்லாத செயற்கை மாலைகள் பற்றியும், பூச்சூடாத தன்மைபற்றியும், தற்கால நிலைமையும் இக்கட்டுரையில் காட்டப்படுகின்றது.

## 3.1. மலர்களால் ஆய பயன்

" மங்கல மாகி இன்றியமையாது
யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே " 1

என்னும் பண்டைப் பாடலுக்கேற்றபடி, மலர்கள் மக்கள் வாழ்க்கையில் பெரிதும் பயன்பட்டன. கடவுளை வழிபடுவதற்கும், மங்கல விழாவிற்கும், பெருந்துயர்ப் பிரிவிற்கும், மக்களை ஒப்பனை செய்வதற்கும், இடங்களை அழகுபடுத்துவதற்கும் பயன்பட்டதோடு பிறந்த குடியும் நாடும் உணர்த்தும் அடையாளப் பூக்கள் ஆகவும், செய்யும் கடமையுணர்த்தும் அறிகுறியாகவும் மலர்கள் பழங்காலத்தில் பயன்பட்டன.

### 3.1.1. வழிபாடு

வெவ்வேறு காலத்தில் மலரும் பலவகைப் பூக்களும் வழிபாட்டில்

---

1. நன். பொதுப்பாயிரம், 30

சிறப்பிடம் பெற்றன.[1] சிறப்புடைய மலர்கள் கிடைக்காதபோது எவ்வகைப் பூவும் இறைவனுக்கு ஏற்கும் என்கிறார் கபிலர்.[2] வழிபாடு நிகழும் இடத்தையும் பூமாலைகளைத் தொங்கவிட்டு ஒப்பனை செய்தல் வழக்கம்.[3] வெறியாடும் களத்தில் பலவண்ண மலர்கள் விரவிச் சிதறிய கோலம் காணப்படும்.[4]

வையைப் புதுவெள்ளத்தைக் கொண்டாடிப் போற்றி வழிபடும் போது, மலரும் பிறவும் இடம்பெற்றன.[5] நடுகல் வழிபாட்டில் சூழ்நிலைக்கேற்ற மலர்கள் பயன்பட்டன.[6] அரசனுக்குரிய முரசு,

---

1. நற். 321:3,4; 322:10,12; ஐங். 259:1-4; பரி. 8:80, 99; பரி. 17:1; திரு. 188,218,229,241; பெரும். 338; மதுரை. 466,476; நெடு. 43,44; குறிஞ்சி. 5;

   பட்டின. 37,159,178,252,253; சிலப். 5:14; 5:69; 9:1-3; 18:3,4; 24:19,20; 28:231; 30:153.
   "தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது"
   - திருப்பாவை. 5:5.

2. "குவியிணர்ப் புல்லிலை யெருக்க மாயினும் உடையவை கடவுள் பேணேம் என்னா" - புறம். 106:1-3;

3. அகம். 22:8; திரு. 235,236; குறிஞ்சி. 176,177

4. நற். 322:10,12; அகம். 138:11-13; 232:16,18; 382:3;

5. பரி. 6:11; 41,42; 8:80,99; 16:52,53

6. "நறும்பூங் கரந்தை" - புறம். 261:12-14
   "செம்பூங் கண்ணி" - புறம். 264:2-4
   "வேங்கை மலர்" - புறம். 265:2-5

வாள், வேல், கொடி, குடை முதலியவும் மதிந்து வழிபடுதற்குரியன. அவற்றுக்கு மயிற் பீலியும் மலர்மாலையும் அடையாளக் கண்ணியும் சூட்டியமை தெரியவருகின்றது.[1] வாள் முதலிய கருவிகளுக்கும் முரசினுக்கும் குளிர்ச்சி வாய்ந்த இயற்கை மலர்களைச் சூட்டுதல் கான அழகுடைத்து என்றலும், ஏனை இடையூறும் உள்ளது. எனவே, அவ்வாறு அணிவிக்கப்பட்டவை பெரும்பாலும் உலோகத்தால் செய்யப்பட்ட செயற்கை மலர்கள் என்று கொள்வது தகவுடைத்து.[2]

யாழில் தெய்வம் உறைவதனல் அதற்கும் மலர் அணிவித்தல் மரபு.[3]

---

1. முரசு:- " ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை உழிஞையொடு பொலியச்சூட்டி "

- புறம். 50:3,4

படைக்கலம்:

" இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டி "-புறம்.95:1

வேல்:-

" மறவன் வேலோ
மங்கல மகளிரொடு மாலை சூட்டி "-புறம்.332:2,

"வேம்புதலை யாத்த நோன்காழெஃகம்"-நெடு.176

வாள்:- "வாய்வாள் மலைந்த வஞ்சி சூடுதும்"-சிலப்.25:149

2. " பொன்புனை யுழிஞை " - பதிற். 22:27
" பொலம்பூந்தும்பை " - பதிற். 43:1, புறம்.2:14, 99:1

3. " நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய
ஐதமைபாணி வணர்கோட்டுச் சீறியாழ் "-புறம்.302:4,5

சித்திரப்படத்துள் புக்குச் செழுங்கோட்டின் மலர்புனைந்து"

- சிலப்.7:1

களைளயுண்பார்க்குத் துணைப்பொருளாகப் பயன்படும் இஞ்சித் துண்டுகளையும் மலர்களையும் சேர்த்துப் பிணைத்துத் தொடுத்த மாலைகள் நிறைந்த தசும்பினுக்குச் சூட்டப்பட்டது.[1]

## 3.1.2. வாழ்த்து மங்கலம்

மங்கல நிகழ்ச்சிகளில், வாழ்த்தும்போது மலர் சொரிதல் மரபு.[2] மங்கலப் பொருளென ஏந்தப்படும் சிறப்பு மலருக்கும் மாலைக்கும் உண்டு.[3] வதுவை நேரத்தில் மணமகளுக்கு அறுகின் கிழங்குடன் மலர் கலந்து தொடுத்த மாலை அணிவித்தல் பண்டைய வழக்கம்.[4]

## 3.1.3. விரிச்சி

இறைவனை வழிபட்டு நற்சொல்லை எதிர்பார்த்துக் கேட்டு நிற்கும் பழக்கம் நாட்டில் நெடுங்காலமாக உள்ளது. இதனைப் புலவர் விரிச்சி கேட்டல் என்பர். நெல்லும் மலரும் தூவித் தலைவன் வரவு குறித்து விரிச்சி கேட்டலை நப்பூதனார் முல்லைப் பாட்டில்

---

1. பதிற். 42:10,11
2. அகம். 86:15,16; சிலப். 1:62
3. சிலப். 1:54; 1:62
4. அகம். 136:13,14.

காட்டியுள்ளார்.[1] பெரும்புண்பட்ட வீரனின் நிலைபற்றி அவலத்தை எதிர்நோக்கி முதுபெண்டிர் விரிச்சி கேட்டக்கால் மலர் இடம்பெறுமையும் நோக்கற்குரித்து.[2]

### 3.1.4. உண்டி

மக்களும் மாக்களும் உண்ணுதற்குப் பயன்படும் மலர்கள் பற்பல உள்ளன. சுவையும் சத்தும் உடைமை பற்றியும் மருந்தென உதவும் தன்மைபற்றியும் மலர்களைச் சமைத்தும் இயற்கை நிலையிலும் உண்ணுதல் மரபே. என்னும், இலக்கியப் பாடலுள் அவை பற்றிய செய்திகளைப் பெரிதும் அறியக்கூடிய நிலை இல்லை என்பதை அறிஞர் அறிவர்.

வேளைக்கொடியின் இலையும் மலரும் மக்களுக்கும்,[3] மாக்களுக்கும்,[4] உணவாகியதைப் பாடல்கள் குறிக்கின்றன. பறம்பு முற்றுகையின்போது பறவைகள் கொணர்ந்த நெல்லுடன், சுனையில் பூத்த ஆம்பல் மலர்கள் மக்கள் பசிபோக்கும் மருந்தென

---

1. முல்லை. 8-11
2. புறம். 280:6
3. புறம். 215:2-4; 246:7,8
4. புறம். 23:20,21

உதவியதை நக்கீரர் குறிப்பிடுகிறார்.[1] மாடுகளுக்குப் புல்லுணவே போதும் என்றாலும், சிறப்புணவு என்னும் தன்மையில், சுனை மலர்களை மெல்லும் வாய்ப்பும் அமைவதுண்டு.[2] மகளிர் சூடிய மலர்கள் சிதறி உதிர்ந்து ஆடிய களத்தில் விழுந்தன. அவற்றை முதிய எருமைகள் மேய்ந்தன.[3]

மலைநிலத்தில் வேங்கை மலர்கள் யானைக்கும்,[4] மானுக்கும்,[5] நல்லுணவாக அமைதல் உண்டு. முருக்க மலரிதழ் கோதித் தாதினை நுகர்வது குயிலின் இயல்பு.[6] "கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி" களுக்கு உணவு முற்றும் தந்து உதவும் பொறுப்பு மலர்களுடையது. நாரைக்குக் கரும்பின் பூ உணவாயிற்று.[7] பாலை நிலத்தில் வேனில் வெம்மையால் வாடிய உயிர்களுக்கு இருப்பை மரம் இனிய விருந்து நல்குதல் வழக்கம். இனிமை வாய்ந்த இருப்பை மலர்கள் கரடி விரும்பும் நல்லுணவு.[8] மான் முதலிய விலங்கும்,[9] மக்களும் அவற்றை உண்ணுவது இயல்பே.

---

1. அகம். 78:18
2. நற். 290:1-3; 395:6-8; ஐங்.93:1,2; பதிற்.13:3,4 சிறுபாண். 41-45
3. பதிற். 13:5,6
4. நற். 202:3-6; அகம்.349:10,11
5. ஐங். 271:1,2
6. குறுந். 192:3,5,6; அகம்.229:15-19; சிறுபாண்.4,5
7. புறம். 384:2,3
8. அகம்.15:13,14; 81:1,2; 95:5-9; 149:3,4; 171:13-15; 247:5,6; 267:6-8; 275:11,12;
9. அகம். 107:14-22
10. அகம். 331:1-7.

நறவு செய்தற்குப் பூவின் அரும்புகள் பயன்படும்.[1]

### 3.1.5. உடை

பருத்தியின் பயன் அறியாத பண்டைக் காலத்தில் இலையும் மலரும் சேர்த்துத் தைத்து உடுத்திய தன்மையை வரலாறு தெரிவிக்கின்றது. வெப்ப நிலத்தில், சோலைகள் செறிந்த இடத்தில், கொடியும் மலரும் தளிரும் சேர்த்து, உடுக்கும் உடையாகப் பொருத்தித் தைத்து உடுத்தினர். 'தழையுடை' என்று அவ்வகைப் பூவாடையை இலக்கியம் குறிக்கின்றது.[2] தழையுடையணிதல் பழங்காலத்தில் மிகுந்திருந்தது. 'தழையுடை' என்பது இன்றியமையாத் தேவை-யாகாது, என்றாலும் விழாக்கோலம் கொள்ளும் இளமகளிர் அவற்றை அணிந்து மகிழ்ந்த நிலையை இலக்கியம் காட்டுகின்றது. உடுத்தல் முதலிய பழக்க வழக்கங்களில் தொன்மையைக் கடைப்பிடித்தல் பெண்டிர்க்குப் பெரிதும் உரிய இயல்பு என்பதை இதனால் அறியலாம்.

---

1. "நனைநறவு மகிழ்ந்து" - பதிற். 40:19
"பூவரும்புகளாற் செய்யப்பட்ட" - பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், பக். 95, (உ.வே.சா. பதிப்பு, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, சென்னை) 1957, ஐந்தாம் பதிப்பு.

பதிற். 51:1; அகம். 237:8; புறம். 360:4

2. "தழையுடை பருத்தி, பட்டு முதலிய நெசவுத்துணி வந்த பின்னரும் அணியப்பட்டது. ........ துணியாடை மீதும் தழையாடை அணிந்திருக்கலாம்." -
— திருமதி டாக்டர் தே. தியாகராசன், எம்.ஏ., பிஎச்.டி., 'தமிழர் ஆடை' - பக். 101, 102

தாமரைச் செல்வர், வ. சுப்பையா பிள்ளை, பவள விழா மலர், (தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம், சென்னை) 1973, முதற் பதிப்பு.

மனையறத்துக்குரிய கடமைப் பொறுப்பின்றிச் சோலையில் விளையாடும் இளமகளிர், 'தழை' எனப்படும் உடையைத் தாமே புனைந்து அமைப்பதும் உடுப்பதும்பற்றிப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.[1]

## 3.1.6. தழையுடை அமைத்தல்

எளிதில் வாடிச் சுருங்கிவிடாத குவளை, ஆம்பல், நெய்தல் முதலிய நீர்ப்பூக்கள் தழையுடை அமைத்தற்குப் பயன்பட்டன. சேர்த்துத் தொடுப்பதற்கேற்ற உறுதியுடைய கயிறுக வயலைக்கொடி உதவியது.[2] மென்மையும் நன்மையும் தொட்டால் கசங்காத தன்மையும் உடைய தளிரும் இலையும் ஆகிய தொகுதிகள் உடை புனைவதற்கு உதவின.

---

1. 'தொடலையாயம்' – குறுந்.294:2; அகம்.110:
   'தொடலைநுடங்க' – அகம். 28:9

   'ஐதகலல்குல் கவின்பெறப் புனைந்த
   பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி' – அகம்.390:6,7

   'பசுங்குழைத் தழை' – குறுந். 294:6,7
   'தழைதாழல்குல்' – குறுந். 345:4
   'மணிப்பூம் பைந்தழை தைஇ' – அகம். 20:9
   'அணித்தழை நுடங்க ஓடி' – புறம். 339:1

   'தழையும் கோதையும் இழையும் என்றிவை
   தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடும்
   மடமொழி யாயம்' – கலி.102:5,7

2. 'மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
   அரிமல ராம்பலொ டார்தழை தைஇ' – அகம்.176:13,14

   'பாடினை வரீஇயோ வயலை ... ...
   அல்குற் றழைக்கூட்டு அங்குழை யுதவி' – அகம்.383:6-8

அசோகு, ஞாழல், வேங்கை, நொச்சி என்பவற்றின் இலைக்கொத்து உடையமைக்கப் பயன்பட்டன என்று சங்க இலக்கியம் காட்டும்.[1] ஆம்பல், நெய்தல் என்னும் சுனைப் பூக்களின் திரண்ட வடிவம் ஆடையாகப் பொருந்தி அமைவதற்கேற்றபடி நெறித்துக் கொள்ளப்படும்.[2] இலைக்கொத்தும் மலரிதழ்த் தொகுதியும் இணைத்துத் தொடுத்த பின்பு, வேண்டும் அளவுக்குமேல் எஞ்சியவற்றைக் கொய்துவிடுதலால் 'கொய்தழை' என்றும் குறித்தல் இயல்பு.[3] தளிரும் இலையும் பூவும் சேரப் பிணைத்து அமைக்கப்படுவது தழையுடை.[4] தொடலை,[5] மடிவை[6] என்னும் சொற்களும் தழையுடையைக் குறிக்க வழங்கின.

---

1. அசோகு : 'செயலையம் பகைத்தழை'

   'திருந்திழை யல்குற்குப் பெருந்தழை யுதவிச்
   செயலை முழுமுத லொழிய' – குறுந். 214:4,5

   ஞாழல் : 'கானல் ஞாழல் கவின்பெறு தழை' – ஐங். 191:3

   நொச்சி : 'ஐதக லல்குல் தழையணிக் கூட்டும்
   கூழை நொச்சி' – அகம். 273:16,17;
   புறம். 271:1-4; 272:1,5

   வேங்கை : 'கருங்கால் வேங்கைச் செம்பூம்பிணையல்
   ஐதேந் தல்குல் யாமணிந்து வக்குவம்' – அகம் 390:6

2. குறுந். 342:4,5; அகம். 156:9; புறம். 116:1,2; 248:1,2; 280:12,13.

   'நெய்தல் நெறிக்கவும் வல்லன்' – கலி. 143:31

3. 'சினையிதழ் பறியாப்
   பைவிரி யல்குல் கொய்தழை தைஇ' – குறிஞ்சி. 101:102.

4. 'தளிர்சேர் தண்டழை தைஇ' – நற். 204:1; அகம்.
   அகம். 385:11-13

5. 'தாரும் தொடலையும் கைக்கொண்டல்கலும் ஆடினராதல்'
   – அகம். 138:11,12

6. 'அலர்ந்த ஆம்பலக மடிவையர்' – பதிற். 27:3

தொடலை, மடிவை என்பவை காரணப் பெயர்கள். தழை என்பது கருவியாகு பெயர். பிணையல் என்பது தொழிலாகு பெயர்.

முருக வழிபாட்டிற்கு அமைக்கப்பட்ட தழையுடையின் மாட்சியைத் திருமுருகாற்றுப்படை தெரிவிக்கின்றது.[1]

3.1.7. தழையுடுத்தல்

தழையுடை உடுப்பவர்க்கு மலர்களின் மென்மையும் தன்மையும் வண்ணமும் வனப்பும் மணமும் வந்தெய்தும். பார்ப்பவர், கண்களை வண்ணமும் வனப்பும் ஈர்க்கும். எனவே, பொதுமகளிர் விழாக்-கோலங்கொண்டு தெருவில் செல்லும்போது பெரும்பாலும் தழையுடன் திகழ்ந்த தன்மையைப் புலவர் குறித்துள்ளனர்.[2] பூவாடையைக் கணுக்கால் வரையில் தாழ உடுத்து மெல்ல இயங்குதல் அன்னவர் வழக்கமென்று மதுரைக்காஞ்சி காட்டுகின்றது.[3]

---

1. 'முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மரா அத்த வாலிணர் இடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை' - திரு.201-20

2. 'பிணையல் அந்தழைத் தைஇத் துணையிலள்
விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே' - நற். 170:3,4

'தழையணிந் தலமரும் அல்குல் தெருவில்
இளையோ ளிறந்த அனைத்தற்கு' - நற்.320:3,4

'அயவெள் ளாம்பல் அம்பகை நெறித்தழை
தித்திக் குறங்கின் ஆழ்மா றலைப்ப
வருமே சேயிழை' - குறுந். 293:5,7

3. 'மென்றளிர்க் கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற அடைச்சி
மணங்கமழ் மனைதொறும் பொய்தலயர' - மதுரை.586-589

ஏனை மகளிர் சோலை சார்ந்து விளையாடும் நேரத்ிலும் விழாவுக்கென்று ஒப்பனை செய்து ஆடும் காலத்திலும் தழையுடை உடுத்தினர் என்று கருத இடமுள்ளது.[1]

இத்தகைய சூழ்நிலைகள் பொருத்தமுற அமையாத நேரத்தில் ஒரு பெண் தழையுடுத்தல் என்பது எள்ளி நகைக்கத் தக்கது அல்லது ஐயுறத்தக்கது என்பதுவும் புலப்படுகின்றது.

" உடுக்கும் தழைதந் தனனே யாம்அஃது
உடுப்பின் யாய் அஞ்சுதுமே கொடுப்பின்
கேளுடைக் கேடஞ்சுதுமே ஆயிடை
வாடல கொல்லோ தாமே " 2

என்பது இளமகளிர் எண்ணத்தில் இடம்பெற்ற சிக்கலைக் காட்டும் பாட்டு. விழா நிகழ்ச்சியும் விளையாட்டு மகிழ்ச்சியும் இல்லாதபோது தழையணிந்தால், பெற்ற தாயும் அதனை உற்று நோக்கி ஐயுறுதல் சங்க காலத் தமிழக நடைமுறையில்பு என்பதை இதனின்று அறியலாம்.

## 3.1.8. உடலோம்பல்

வெப்பத்தினைத் தணிக்கும் தன்மையுடைய 'வெள்ளிலோத்திரம்'

---

1. " பாசடைக் கலித்த கணைக்கா னெய்தல்
விழவணி மகளிர் தழையணிக் கூட்டும் " - அகம்.20:11,12
' தழையணிப் பொலிந்த ... பழையர் மகளிர் ' -அகம்.201,6,7
331:5

2. நற். 359:4-7

என்னும் மலரினைப் பாலை வழியில் வேனிற்காலத்தில் செல்வோர் அணிவதனை ஓதலாந்தையார் பாடல் தெரிவிக்கின்றது.[1]

உடல்வெப்பம் தணிக்கும் வகையில் பள்ளிகொள்ளும் சேக்கை மீது ~~அணி~~ மலரிதழ்கள் தூவப்படும்.[2] பள்ளிக்கட்டிலைச் சூழ மேற்புறத்தே மலர்த்தொடையல்கள் அழகுறத் தொங்கவிடப்படுதலும் உண்டு.[3]

## 3.1.9. ஒப்பனை

ஆடவரும் மகளிரும் தம் கூந்தலுக்கும் மேனிக்கும் செய்யும் ஒப்பனைக்கு மலரும், தளிரும், பூந்தாதும், சண்பங்காயின் பொடியும் பயன்பட்டதைப் பண்டைப் பாடல்கள் காட்டுகின்றன.

" ஒன்றின முடித்தல் தன்னினம் முடித்தல் "[4]

என்னும் உத்தியைக் கடைப்பிடித்து மலரல்லாத பிறவும் இங்கே குறிக்கப்படுகின்றன.

---

1. " மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்
ஆற்றிடைச் செல்வோர் சென்னிக் கூட்டும் " -ஐங். 301:1,2

2. ' பல்பூஞ் சேக்கை ' - நற். 132:6, சிலப். 2:28, 4:28, 13:121

' தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழிய ' -சிலப். 4:64,65 வா

3. ' கோதையிற் பொலிந்த சேக்கை ' - மதுரை. 713

4. நன். பொதுப்பாயிரம். 14:19

### 3.1.9.1. தளிர்

மென்மையும் தண்மையும் வெண்மையும் வனப்பும் உடைய அசோகந் தளிர் காதில் செருகப்படுவதையும் தோள்வரையில் அவை படிந்து தடவுதலையும் குறிக்கின்ற புலவர்[1] புன்கின், தளிர் மேனி ஒப்பனைக்குப் பயன்பட்டது என்பதையும் பாடல்கள் காட்டுகின்றன.[2]

### 3.1.9.2. தாதும் தளிரும்

வேங்கை மலர்த் தாதும் விளவின் தளிரும் சூரர மகளிர்க்கு ஒப்பனைப் பொருளாயிற்று என்கிறார் நக்கீரர்.[3]

### 3.1.9.3. பூந்தாது

பொன்னிறப் பூந்தாது மார்பில் படியவிடும் ஒப்பனையைச்

---

1. 'சாய்குழைப் பிண்டித் தளிர்காதிற் றைஇனள்' -பரி. 11:95
   'கடிமலர்ப் பிண்டி தன்காதிற் செரீஇ' -பரி. 12:88
   'வண்காது நிறைந்த பிண்டி ஒண்டளிர்
   நுண்பூண் ஆகந் திளைப்ப' - திரு. 31;32
   'செயலைத் தண்டளிர் துயல்வரும் காதினன்' - திரு. 207
   'ஒண்பூம் பிண்டி ஒருகாது செரீஇ' - குறிஞ்சி. 119
   பனந்தோடும் ஆம்பலும்பூஞ்செவியொப்பனைக்கு உதவுவதைக் கொங்கு வேளிரும் குறித்தார்: பெருங்கதை: 17:22-27.

2. நற். 9:5,6; ஐங். 347:2,3

3. " ... ... ... விரிமலர்
   வேங்கை நுண்டாது அப்பிக் காண்வர
   வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா " - திரு. 35-37

சங்ககால உழவரிடம் காணமுடிகின்றது. [1]

3.1.9.4. காயில் அமைந்த சுண்ணம்

உழவர்குடிச் சிறுவர் மார்பில் கண்பு எனப்படும் கோரையில் விளைந்த காயின்கண் உள்ள பொடி அழகுபடப் படிந்து கிடந்த காட்சியைப் பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது. [2]

3.1.9.5. பூக்கள் - அணியாய் அமைதல்

குவளைத் தண்டுடன் கூடிய போதுகளைச் செவிகளில் அழகுபடச் செருகி மகிழ்ந்ததைப் பரிபாடல் காட்டுகின்றது. [3]

---

1. 'பைந்தாது படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி' - குறுந். 10:2-4

2. 'பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்
இருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர்' -பெரும்.220,221,2

'புல்லிய காயிற் றோன்றின தாதை அக்கதிரைமுறித்து
அடித்துக் கொண்ட மாரிவினையும்'

'தாது நீளக்கிடந்தது உரைத்தாற் போன்றது'

பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக்.233

3. 'குவளை குழைக்காதின் கோலச் செவியின்
இவள் செரீஇ' - பரி. 11:97,98

முகையுடன் கூடிய பசுந்தண்டு வளையென முன்கையில் அணியப்படுதலும் வழக்கம்.[1]

இளையோரும் மகளிரும் பலவகையிலும் தொடுத்தமைத்த மாலைகளை அரசரும் செல்வப் பெருமக்களும் மார்புக்கு அணியெனக் கொள்வது பண்டைய வழக்கம். ஆடவர் மார்பில் அணியப்படும் பெரியமாலை தார் என்று குறிக்கப்படும்.[2]

தாரும் கண்ணியும் அணியும் தகுதி குற்றேவல் மக்கட்கு இல்லை. உரிமையுடன் வாழும் தகுதியும் மாட்சியும் உடையவரே இவற்றைச் சூடுதல் மரபு.[3] தமிழகத்துத் திணை நில மக்களும்

---

1. 'ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்' - புறம். 63:12; 352:5

   'பவளவளை செறித்தாட் கண்டுஅணிந்தாள் பச்சைக் குவளைப் பசுந்தண்டு கொண்டு' - பரி. 11:101, 102

   'சாயும் நெய்தலும் ஓம்புமதி ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே' - நற். 60:9, 11

2. 'தார்மாலை மார்ப' - தண்டியலங்காரம், பக். 13, (சைவ சித்தாந்தக் கழக வெளியீடு, அப்பர் அச்சகம், சென்னை), 1969.

3. 'தாரும் முடியும் நேர்வன பிறவும் தெரியுகொள் செங்கோல் அரசர்க்குரிய' - தொல். 1571

   'கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே' (வாணிகர்க்கு) தொல். 1580

   'வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும் வாய்ந்தன ரென்ப அவர்பெறும் பொருளே'

   - (வேளாளர்) தொல். 1582.

அரசின் ஏவலுக்குட்பட்டுத் தொழில் செய்யும் வீரர், அமைச்சர் முதலியோரும் கண்ணி அணிதற்குரியர்.[1]

குறவன்,[2] பாணன்,[3] உழவன்,[4] ஆயன்,[5] முதலிய அனைவரிடமும் கண்ணி சூடும் பழக்கம் காணப்பட்டது; எனினும் தார் அணிவது செல்வத் தலைமக்கட்கே உரிய நிலையென அமைந்தது.

3.1.9.6. கூந்தல் ஒப்பனை

கூந்தலை உச்சியில் முடித்தல், பக்கத்தில் கொண்டை முடித்தல், பிடரியில் முடித்தல், பின்னி முடித்தல் என ஒப்பனை வகை பற்பல. இவ்வாறு முடித்த கூந்தலுக்கு மலர் சூட்டும் வகையும் பல.

---

1. 'வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
   தாரும் ஆரமும் தேரும் வாளும்
   மன்பெறு மரபின் ஏனோர்க் குரியர்' —தொல். 1083

2. பதிற். 30:9; அகம். 48:10

3. அகம். 301:11-15

4. பெரும். 215-219; உமணர்— அகம். 191:1-4; மறவர்: பெரும். 59-61; நெடு. 31, 32.

5. பெரும். 173, 174; நெடு. 5, 6

1. பெரிய தனிமலர்களைச் செருகுதல்,
2. கொத்துமலர், இலையுடன் கூடிய மலர் செருகுதல்,
3. தொடுத்த மலர்களை அணிதல்,
4. தொடுத்ததைக் கொண்டைமீது வளைத்துச் சூட்டுதல்,
5. கூந்தலின் உள்வைத்துப் புறத்தே தோன்று வகையில் பொதிந்து முடித்தல்.

### 3.1.9.7. செல்வத் தலைமகன் செய்த ஒப்பனை

ஐவகைப்பட்ட கூந்தல் அலங்காரம் மகளிர்க்கே உரியது எனினும், ஆடவரும் மயிர் வளர்த்துப் பேணி எண்ணெயைப் பூசுதலும் ஏனை ஒப்பனை செய்தலும் அக்கால வழக்கம்.

" அணிமிகு வரிமிஞி றார்ப்பத் தேங்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சிப் " 1

இத்தகு தலையலங்காரப் புனைவின் தன்மையைக் கொண்டே மக்கள் சமுதாய வாழ்க்கையில் பெறும் தலைமையும் ஏனை உயர்வும் உணரப்பட்டன, என்பது மிகையன்று. செவிலிக்கு அறத்தொடு நிற்கும் தோழியின் கூற்றில் பெரும்பாலும் தலைவன் அணிந்த மாலைச் சிறப்பும் அணிகல மாட்சியும் தலைமுடிப்புனைவும்

---

1. குறிஞ்சி. 107-118

இடம்பெறுதலை ஆங்காங்கே காணமுடிகின்றது.[1] மணமகளுக்கும் ஆடவன் தகுதியைத் தாய்க்கு அறியவுரைக்கும் வழிகளாக இவ்வொப்பனை நிலைகள் கொள்ளப்பட்டன என்பது உய்த்துணரற்பாலது. புனையப்பட்ட மலர்வகைகளின் நிலைமைக்கும், தொடுத்து அமைத்த திறமைக்கும், அணிந்து அடைந்த பெருமிதத் தோற்றத்துக்கும் ஏற்றவாறு தலைமகன் மேம்பாடு அறியப்பட்டது.

3.1.9.8. வேலன் சூடிய கண்ணி

முருக வழிபாடு செய்யும் வேலன் அணிந்த கண்ணியில் மலை நிலத்துக்கே உரிய பொருட்கள் இடம்பெற்றன.

" பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந்தொடுத்த கண்ணியன் "[2]

இந்தக் கண்ணியில் சாதிக்காய், தக்கோலக்காய் என்னும் நறுமணப் பொருள்கள் இடம்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

3.1.9.9. கோவலர் ஒப்பனை

காட்டில் வாழும் கோவலர் மலர்களின் தரமும் தகுதியும்

---

1. குறுந். 326:1; 361:2; அகம். 48:8-10

2. நற். 314:3,4; ஐங்.439:2; 476:2,3; பதிற்.21:20 கலி. 101:1-6,22; 103:1-4,52; 105:64; 108:10; 117:7; அகம்.264:3-6; பெரும்.173,174 நெடு. 5,6.

ஆராய்தலின்றிக் கைக்கெட்டிய வண்ணமலர் அனைத்தும் தொடுத்து முடிக்கும் இயல்பினர்.[1] ஆடம்பரமற்ற எளிமையையும் உள்ளத்-தூய்மையையும் அந்தகு ஒப்பனை புலப்படுத்தும். பலவகை மலரும் தளிரும் மிடைந்த படலைக் கண்ணியைக் கோவலர் பெரிதும் சூடினர்.

3.1.9.10. உழவர் முதலியோர் ஒப்பனை

உழவரும்,[2] உமணரும்,[3] மீனவரும்,[4] துடியனும்,[5] மற்றுள்ள மக்களும்[6] ஏற்புடைய கண்ணி அணிந்து திகழ்ந்ததைப் பாடல்கள் காட்டுகின்றன. பாணன், பொருநன் ஆகியோர் வேற்றூர்க்குச் செல்லும் வழியில் கிடைக்கும் பல்வேறு பூக்களையும் விரும்பிச் சூடினர்.[7] வேனிற் பாலையில் வேறு எந்த மலரும் இல்லாத நிலையில் எருக்கினைத் தொடுத்த கண்ணியைப் பாணும் ஆவிரை மலர்க் கோதையைப் பாடினியும் அணிந்த தன்மையைப் புலவர் காட்டியுள்ளார்.[8]

---

1. பதிற். 43:10; 76:11-13
2. அகம். 191:1-4
3. பட்டின. 65,66,88
4. 'உவலைக்கண்ணித் துடியன்' - புறம். 269:6
5. நற். 367:8-10; புறம். 249:8; 395:6; நெடு. 371:31-32.
6. புறம். 371:3,4; பெரும். 295,296; மலை. 427-431
7. அகம். 301:11-15

## 3.1.9.11. இளஞ்சிறுர் ஒப்பனை

" நா நீர் பயந்த தூஉணமை பிணையல் " [1]

செல்வச் சிறுமகன் தலைமுடியை அழகுறுத்தியது. திணைநில மக்களின் சிறுவர் சிறுமியரும் ஆங்காங்கே மலர்ந்தவற்றைத் தாம் அறிந்த வகையில் தொடுத்து அணியும் தன்மையை இலக்கியங்கள் காட்டுகின்றன.

மணமற்ற தும்பை மலர் கோர்த்தணிந்தாள் ஒரு சிறுமி. [2] கரும்பின் மலர் தொடுத்ததை அணிந்தாள் ஒருத்தி. [3] முண்டகம், அடும்பு என்பவையும், [4] வேங்கை, காந்தள், நெய்தல், ஆம்பல் ஆகியவையும், [5] சிறுமியர் விரும்பும் மலர்கள். ஆயர் மகனும் [6] உழவர் சிறுரும் சூடும் மலர் பற்றிக் கடியலூர் உருத்திரங் கண்ணனர் காட்டியுள்ளார். [7]

---

1. அகம். 5:23
2. ஐங். 127:2
3. ஐங். 91:4
4. நற். 245:2,3; 249:2; ஐங்.120:2; அகம்.26:1-3
5. நற். 357:8; செருந்திக் கோதை -அகம். 280:1,2; நெய்தற்றுார் -அகம்.370:10,11; ஞாழற்கண்ணி - அகம்.370:9,10
6. பெரும். 173-175
7. பெரும். 213-219.

### 3.1.9.12. சூரர மகளிர் ஒப்பனை

முருகனை வழிபடும் சூரர மகளிர் செய்யும் கூந்தல் ஒப்பனைத் தன்மையை நக்கீரர் தெரிவித்துள்ளார்.[1] செங்கால் வெட்சியும் குவளையிதழும் கூந்தலில் முடிக்கப்பட்டன. சண்பகமும் மருத மலர்க் கொத்தும் முடித்த கொண்டையில் செருகப்பட்டன. நீர்ப்பூக்களின் அரும்பினைக் கட்டிய பிணையலை வளையவைத்துத் தலை ஒப்பனை முடித்தபின் அசோகந்தளிரைக் காதில் செருகினர்.

### 3.1.9.13. பொது மகளிர் ஒப்பனை

'பொருட் பெண்டிர்'[2] எனப் பட்டவர் வாழ்வில் மலர்கள் பெரிதும் இடம்பெற்றன.[3] மழையினால் செழித்த புதரைப் போலப் பலவகை மலர்களையும் தெரு முழுவதும் கமழும்படி மிகுதியாகச் செறித்து அணிதலும், கணுக்காலைத் தொடும் அளவுக்கு மலர்த்தொடர்ச்சியைத் தாழத் தொங்கும்படி உடுத்து நடத்தலும் பிறர் நெஞ்சம் கவர்வதற்கு என்று மேற்கொண்ட வழிகள் என்பதை மாங்குடி மருதனார் காட்டியுள்ளார்.[4]

---

1. திரு. 21-32
2. திருக். 913
3. 'உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
   தழையணிப் பொலிந்த ஆயம்' - குறுந். 292:1,2
4. மதுரை. 550 - 589

### 3.1.9.14. கண்ணி எனப்படும் மலர்த்தொடையல்

கண்ணி என்பது ஆடவர் அணியும் பொருளாகவே பல இடத்தும் சொல்லப்பட்டது. எனினும், பரிபாடலில் பெண்டிர் அணிவது கண்ணி எனக் குறிக்கப்பட்டுள்ளது.[1] முருக வழிபாட்டின்போது ஆடல் நிகழ்த்திய மகளிர் வண்டுபடு கண்ணியை அணிந்தனர் என்றார் நக்கீரர்.[2] இவ்வாறு மகளிர் அணிவதைக் 'கண்ணி' என்று குறிப்பிட்ட மூவரும் மதுரைக்குரிய புலவர்கள் எனவே, பாண்டி நாட்டில் வாழ்ந்தோர் தொடுத்த மலர்க்கோவையைப் பொதுவாகக் கண்ணி என வழங்கினர் என்றே கருதுதல் தகும்.[3]

### 3.1.9.15. மனையுறை மகளிர் ஒப்பனை

பல்லிருங் கூந்தலில் சின்மலர் சூட்டுவது மனையுறை மகளிர் இயல்பு. மனைக்கிழத்தி சூடும் மலர்களுள் முல்லை தலைமை பெற்றது.[4]

---

1. 'அதிரலங்கண்ணி நீ' - பரி. 20:81 ( நல்லந்துவனார் )
   'தன்கண்ணி திருத்தினள்' - பரி. 12:91 ( நல்வழுதியார் )
2. திரு. 199:200
3. பாண்டிய நாட்டில் பூ விற்போர் முழம் என்று அளத்தலின்றிக் கண்ணி இத்தனை என்று எண்ணித் தரும் வழக்கும் இக்காலத்தும் உள்ளது. ஒரு கண்ணியென்பது எதிரெதிரில் இணைத்துக்கட்டிய இருமலர்களை உணர்த்தும். நாரால் இணைந்த மலர் இரண்டினைக் கண்ணி என்று குறிக்கும் இச்சொல்லே ஆகுபெயராக, எதுகையால் இணைந்த இரண்டடிப் பாட்டினை உணர்த்தும் நிலையைக் கலி வெண்பாட்டிலும் இசைப்பாட்டிலும் காணமுடிகின்றது.
4. நற். 366:5-7; ஐங்.408:1; அகம்.314:19-21

ஆதிரல்;

இருவாட்சி, தளவு, பாதிரி, பித்திகை, மௌவல் என்பவற்றையும், ஆம்பல், குவளை, செங்கழுநீர், நெய்தல் என்பவற்றின் இதழ்களையும் ஏற்றவாறு இணைத்துத் தொடுத்துச் சூடுதல் மரபு.[1]

துணைவியின் கூந்தல் ஒப்பனைக்குத் தலைவன் உதவும் தன்மையைச் சில பாடல்கள் காட்டுகின்றன.[2] கொங்குவேள் மாக்கதையில் உதயணன் பூந்தொடுத்தலில் வல்லவன் என்பதும் நினைத்தற்பாற்று.[3]

அன்புடைக் கணவன் சூடியதை மனைவி சூடுதல் தகவுடையது என்பதைச் சிலப்பதிகாரம் காட்டும்.

" வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழல்மேற்
கொண்டாள் தழீஇக் கொழுநன்பாற் காலைவாய் " [4]

புதுமண மகளின் கூந்தல் செறிந்த மலரொடு பொலிவதைக் குறித்துக் காட்டினார் நக்கீரர்.[5]

---

1. நற். 52:1-3; 131:3,9; 337:3-8; குறுந். 19:4,5 209:5-7; கலி. 32:17; அகம். 185:14,15; 246:5; 389:2-5; 393:23

2. அகம். 117:12-14; 221:7-9; 389:2-7; 391:6,7

3. பெருங்கதை: ஆ: 15:127-148

4. சிலப். 18:35,36

' (நெஞ்சுநெகிழ் அன்புக்கு அடையாளமாக ஒருவர் சூடியதை மற்றவர் அணிதலும் அணிவித்தலும் புறப்பாட்டிலும் காட்டப்பட்டது).

" கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தந்தலை
மணிமருள் மாலை சூட்டி அவன்தலை
ஒருகாழ் மாலை தான்மலைந்தனனே "-புறம். 291:6-8

5. ' துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகரம் நாறும் தண்ணறுங் கதுப்பிற்
புதுமண மகடூஉ ' - அகம். 141:12-14

மனைவி கூந்தலில், மலர்த்தொடையலைக் கணவனே அணியும் நிலையும் விரும்பத்தக்க ஒரு நிகழ்ச்சி.[1] இது புறத்தோற்றத்துக்கு அழகு ஊட்டும் ஒப்பனைச் சடங்கு மட்டும் அன்று; உள்ளத்தையும் தொட்டு நெகிழ வைக்கும், தனிப்பெருஞ் சிறப்புடைய நிகழ்ச்சியாகும்.

ஊடல்கொண்ட தலைவி, தன் கூந்தலைக் கணவன் தொடுவதையும்,[2] பூச் சூட்டுவதையும்,[3] அனுமதிக்காமல் வெகுளும் தன்மையும் காணமுடிகின்றது.

3.1.9.16. கன்னியர் ஒப்பனை

கன்னியர் கூந்தலை ஐம்பால் என்று சிறப்பித்தல் நெடுங்கால வழக்கம். ஐவகை நிலையையுடைய கூந்தல் ஒப்பனையைத் தகுதிக் கேற்பச் செய்தமையால் கூந்தலைக் குறிக்கும் அன்மொழித் தொகையாக ஐம்பால் என்னும் தொகைச்சொல் அமைந்தது.[4] குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்பன ஐவகை ஒப்பனை குறித்த பெயர்கள் என்றார் நச்சினார்க்கினியர்.[5]

---

1. 'நன்மனை வதுவை அயர இவள்
பின்னுமலர்க் கூந்தல் மலரணிந்தோயே '—ஐங்.294:4,5
'விலைஞர் ஒழித்த தலைவேய் கான்மலர்
தேம்பாய் முலையொடு ஞாங்கர்ப் போக்கித் '

2. 'ஒருஉ நீ, எங்கூந்தல் கொள்ளல் ' – கலி. 87:1
'யாரிவன் எங் கூந்தல் கொள்வான் ' – கலி.89:1

3. 'போதின்,
பொம்மலோதியும் புனையல் ' – குறுந். 191:5,6

4. 'சிறுபாண். 60; குறிஞ்சி. 139; மலை. 30

5. சீவக. 2437 உரை.

முருகனைப் பாடியாடும் சூரரமகளிர் செய்த ஒப்பனையை நக்கீரர் குறிப்பிட்ட திறம் பயிலுந்தோறும் நயம்பயப்பது.[1] ஆயர் மகளிர் மலர்களைக் கொண்டு செய்யும் ஒப்பனையைக் கலித்தொகை காட்டுகின்றது.[2]

'பல்வேறு உருவின் வனப்பமை கோதை 'எய்க் கூந்தலில், கவின்பெறக் கட்டிக் குறிஞ்சிப் பாட்டின் கன்னியர் இருந்தனர்.[3]

விளையாட்டுப் பாவைக்கும் பூக்களால் ஒப்பனை செய்வது இளமகளிர் வழக்கம்.[4]

களவுநிலையில் பழகும் தலைவன் காதலிக்கு என்று கொணர்ந்து கொடுப்பவற்றுள் தலைசிறந்து விளங்குவன மலர்கள்.[5] பூத்தரு புணர்ச்சி என்பதுவும் இங்கே நினைத்தற்பாற்று.[6] காதலி கூந்தலில் தலைமகனே மலர்களைச் சூட்டுதலும் இயல்பே.[7]

---

1. திரு. 198-200
2. கலி. 102:1-6
3. குறிஞ்சி. 103,104
4. அகம். 105:11; புறம். 11:3,4; 243:2;
   'யானுமென் பாவையும் பன்புளிச் சூடுகம்' - பெருங்கதை: 11:
5. நற். 204:1-4; குறுந். 1:4; 173:1,2; 346:4;
   கலி. 76:11; 108:42,43; 111:12,13
6. குறுந். 366:4-6; ஐங். 366; அகம். 48
7. "ஒலிபல் கூந்தல் அணிபெறப் புனைஇக்
   காண்டற்காதல் கைம்மிகக் கடஇயான்" - நற். 313:4,5
   "குவளை
   அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி
   பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி" - அகம். 180:5-7

## 3.1.10. பூக்கள் வழிக் காலம் அறியப்படுதல்

பண்டைய வாழ்வில் நாட்காட்டியும் கடிகாரமும் இடம்பெற வில்லை. தாவரங்களும் அவற்றின் தளிர் முகை மலர்களும் பருவ-காலத்தைப் புலப்படுத்தின. ஆகவே, அக்கால மக்களின் செயற்பாடும், மனநிலையும் இயற்கையை ஒட்டிச், சிறப்பாக மலர்களின் வளர்ச்சி நெகிழ்ச்சியைச் சார்ந்து அமைந்தன என்பது கருத்தில் கொள்ளற்குரியது.

ஞாயிறு தோன்றுவண்ணம் முகில் சூழ்ந்த பனிநாளில் அந்தி மாலை வந்ததென்பதைப் பித்திகை கமழ்ந்ததால் அறிந்தனர், என்கிறார் நக்கீரர். [1]

துணைவனோடு கூடிவாழும்போது மலர்சூடி மகிழ்வதும், [2] பிரிந்தபோது அணியாமையும் சமுதாய மரபென நிலைபெற்ற காரணத்தால், இளவேனிற்கால எழில் மலர்களும், [3] கார்காலப் பூக்களும், [4] பிரிந்த கணவனை எதிர்நோக்கும் மனைவியின் ஏக்கத்தை வளர்த்தன.

---

1. 'மடவரன் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து
அவ்விதழ் அவிழ்பதம் கமழப் பொழுதறிந்து' - நெடு. 39-41

2. ' புணர்ந்தோர் பூவணியணிய ' - புறம். 194:3

3. ' நற். 214:4-6
' இருங்குயில், நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவருவேனே ' - குறுந். 192:3,5,6
ஐங். 342 - 250; 357:1,2; 367:1-3

4. குறுந். 94:1,2; 148; 282:1; ஐங். 412,420,422
பனிக்கால மலர்கள். குறுந். 380; ஐங். 456:1-4; 464:1
நெடு. 13,14.

பருவகாலம் மாறியும் கடமை முடியாவிடின் தலைவன் உள்ளத்தில் கவலை ஏற்படும்.[1] கால மாறுதலை நோக்காமல் கடமையில் ஆழ்ந்த தலைமகனுக்கு அதை நினைவூட்டத் தூதர் செல்வதும் வழக்கம்.[2] இயற்கையின் மலர்ச்சியையும் இல்வாழ்க்கைக்குரிய பொருளின் வளர்ச்சியையும் இணைந்தவாறு உணர்த்தும் பாட்டும் உள.[3] வினைமுற்றிய தலைமகன் மீளும் நிலை காட்டும் பாடல்கள் அனைத்திலும் இத்தன்மை விளங்கக் காணலாம். முல்லைப்பாட்டும் கார் நாற்பதும் முல்லைத்திணைக்குரிய ஏனைப்பாடலுள் பெரும்பான்மையும் இவ்வகை சார்ந்தவை என்பதை அறிஞர் அறிவர்.

## 3.1.11. பூக்கள் - அரசர், மறவர், இனங்காட்டுதல்

பண்டைய அரச குலத்துக்குரிய அடையாள மலர்களை அவர் படைஞரும் அணிந்தனர்.[4]

> "உறுபகை
> " வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
> போந்தை வேம்பே ஆர் எனவரூஉம்
> மாபெருந் தானையர் மலைந்த பூவும் "[5]

---

1. ஐங். 446,447,448; அகம். 174

2. ஐங். 476; அகம்.14;12-17; பரி. 20;
குறிப்பு; பருவ வரவின்கண் தலைமகளது ஆற்றாமையைக் கண்டு தூதுவிடச் சென்ற பாணன் தலைமகற்குக் கார்ப்பருவமும் வையை விழவணியும் கூறியது.

3. நற். 242;321; ஐங்.492,494,493; அகம்.124,234 244, 344.

4. பதிற். 51:30-31; 58:2

5. தொல். 1006:2-5

என்பதனின்றும் இவ்வழக்கத்தை அறியலாம்.

தொன்றுதொட்டு மூவேந்தர் குலமரபு காட்டுவன போந்தை வேம்பு ஆர் எனப்படுவன. போந்தை என்பதில் அணியப்படுவது அதன் குருத்தாகிய பனந்தோடு.[1] 'ஒன்றின முடித்தல்' [illegible] என்னும் உத்தியால் 'மலைந்த பூ' என ஒருங்கு வைக்கப்பட்டது. மற்றை இரண்டிலும் மலரும் இலையும் ஒருங்கே சேரத்தொடுத்து அணிதல் மரபு.[2]

பண்டை நாளில் வஞ்சியாது நேர்நின்று போர் உடற்றுதலே மரபு. வெவ்வேறு கண்ணியை உடையவர் பகைத்துப் போர் செய்தலே உலகியல்பு. இதற்குப் புறனடை நிலைமையொன்று ஏற்பட்டது. இருசார் வீரரும் ஆத்திமாலையே சூடுதற்குரியர் என்றால், மாறுபட்டுத் தாக்குவது எப்படி? எதிரி என்பதைத் தெரிவித்தற்குத் தலைமாலையாகிய கண்ணியின் வேற்றுமைத் தோற்றம் உதவும். வேற்றுமையில்லாமல் ஒன்றுபட்ட மாலையணிந்து சென்றால் தமர், பகைவர் என்பதை அறிந்து தாக்குதல் இயலாததாகிவிடும்.

---

1. 'பனந்தோடு உளங்கவரும் பாடலே பாடல்' - சிலப். 29:130

   'இரும்பனம்புடையல்' - புறம். 99:5; (அதியமான் சேரர் மரபினர் என்பதை அறிவுறுத்தும்).

2. 'இரும்பனை வெண்டோடு மலைந்தோன் அல்லன்
   கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
   நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே
   நின்னொடு பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே'

போருக்குரிய முன்னேற்பாடுகளை விரைந்து செய்த மன்னவர் இதுபற்றி எண்ணிப் பார்த்திலர். ஆயினும், போர்க்களத்தில் இரு படையும் இவ்வாறு சென்று சந்தித்தல் நகைக்கத் தக்கது என்பதை உணர்ந்த கோவூர்கிழார் அரசர் இருவரிடமும் தனித்தனியே சென்று நிலைமையை விளக்கினார்.[1]

சேர மரபினருள் ஒருவன் 'களங்காய்க் கண்ணி' அணிந்தமை பொது நீங்கிய சிறப்பிற்குரிய நிகழ்ச்சி..[2]

அன்றியும், புறப்பாடலுள் இடம்பெற்ற சில தொடர்களை நோக்கும்போது, வேந்தரல்லாத வேறுசில மரபினர்க்கும் அடையாளக் கண்ணி உண்டோ என்பதோர் ஐயமும் ஏற்படுகிறது.

" குல்லைக் கண்ணி வடுகர் பெருமகன் "[3]

" காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர் "[4]

" காந்தள் கண்ணிச் செழுங்குடிச் செல்வர் "[5]

---

1. பதிற். 38:4

2. " தான் முடிசூடுகின்ற காலத்து ஒரு காரணத்தால் முடித்தற்குத் தக்க கண்ணியும் முடியும் உதவாமையின் களங்காய்க் கண்ணியும் நாரான்முடியும் செய்து கொள்ளப்பட்டன என்றவாறு "
   – பழைய உரை, பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும், பக். 88 (உ.வே.சா. பதிப்பு, சென்னை)

3. குறுந். 11:5

4. பதிற். 30:9

5. பதிற். 81:22

" கோடற் கண்ணிக் குறவர் பெருமகன் " [1]

" கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி " [2]

" வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன் " [3]

" பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர் " [4]

3.1.12. கடமைக்குரிய கண்ணிகள்

ஒளிந்தும் பதுங்கியும் போர் நிகழ்த்தாமல் வெளிப்படையாய்ப் புலப்படத் தாக்குதல் பழங்கால நெறிமுறை. எனவே, போர்த் தொழில் மேற்கொண்ட மறவர் தம் செயலுக்கு ஏற்பக் கண்ணியும் மாலையும் அணிந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. [5]

" கண்ணி கண்ணிய வயவர் பெருமகன் " [6]

---

1. புறம். 157:7
2. புறம். 158:9
3. புறம். 131:2
4. மலைபடு. 459
5. ' செம்பூங்கரந்தை புனைந்த கண்ணி
வரிவண்டார்ப்பச் சூட்டி ' - அகம். 269:11,12
' சிறியிலை உழிஞைத் தெரியல் சூடி ' - பதிற். 63:8
' ஞாறிவர் துறுகற் போலப் போர்வேட்டு
வேறுபல் பூளையோ டுழிஞை சூடி ' - பட்டின. 234,235
' பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வாள் நெடுந்தகை மணிமுடிக் கணிந்து ' - சிலப். 26:50,51.
6. பதிற். 58:8

என்பதற்குத் ' தாங்கள் சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ப வினை செய்யக் கருதுதல் '[1] என்னும் பழையவுரைப் பகுதி நோக்கற்குரியது.

முன்னொரு காலத்தில் இயற்கைப் பூவும் இலையும் சூடினரேனும் காலப்போக்கில் போர்வீரர் உலோகத்தாலாகிய செயற்கைப் பூக்களையே போர்த்தொழிலுக்குச் சூடினர் என்பது அறியத்தக்கதாகும்.[2]

மதிற்போர் நிகழ்த்தும் நகர நாகரிகம் வளர்ந்த காலத்தில் ஒரே நாளில் பலநூறு வீரர்க்கு வேண்டிய மலரும் இலையும் விரைவில் கிடைத்தல் அரிது. மேலும், தமிழக எல்லை கடந்தும் வேந்தர் படை நடத்திப் போர் நிகழ்த்தினர். அப்போது, செயற்கைப் பூக்களைப் பயன்படுத்தலே நடைமுறைக்கு ஒத்தது. இத்தகைய செயற்கைப் பூக்களைப் பெற்றுக் கொள்ளுமாறு வீரர்க்குப் பறையறைந்து தெரிவித்தலும் களப்போர் நிகழ்ச்சிக்கு முற்பட்ட ஏற்பாடுகளில் ஒன்று என்பது தெரிகிறது.[3]

---

1. பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும், பக். 152, (உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை) 1957

2. ' பொலங்கொடி யுழிஞையன் ' - பதிற். 56:5
   ' பொலம்பைந்தார் ' - புறம். 96:11,12
   ' போந்தைக்கண்ணிப் பொலம்பூந் தெரியல் ' - சிலப். 28:9

3. ' பூக்கோள் ஏய தண்ணுமை ' - அகம். 174:4
   ' பூக்கோள் இன்றென் றறையும் ' - புறம். 289:8,9
   ' பூக்கோள் என ஏய் ' - புறம். 348:9

### 3.1.13. வெற்றிச் சின்னங்களாதல்

வெற்றியைக் குறித்துச் சூடிய வாகையும் உலோகப்பூவே என்று பாடல்கள் காட்டுகின்றன.[1] இசையும் கூத்தும் வளர்த்த குலத்தவரைச் சிறப்பித்தற்குப் பொற்றாமரையினை வெள்ளி நாரால் தொடுத்த கண்ணி வழங்கினர் என்பதைச் சங்க இலக்கியம் தெரிவிக்கின்றது.[2]

### 3.2. பூக்களைப் பயன்படுத்தும் முறை

சில பெரிய மலர்கள் தனிப்பூவாக அணியப் பயன்படும். சிறு மலர்களையும் பெருமலரின் இதழ்களையும் தளிர், இலை, வெட்டிவேர் என்பவற்றையும் இணைத்துத் தொடுத்துக் கட்டிச் சூடுதற்கும் சூட்டுதற்கும் பயன்படுத்துதல் சங்க காலத்து நடைமுறையில் உள்ள வழக்கம்.[3] இறைவழிபாட்டிற்கு மலரும் மலரிதழும் தூவப்படும்.[4]

---

1. 'வருக தாமென வாகைப் பொலந்தோடு ... ... ... கொடுத்து' - சிலப். 27:43,44
2. பதிற். 40:24; 48:1,2; புறம். 11:16,17; 29:1-5; 69:20-22; 126:2,3; 141:1,2; 153:8,9; 319:14,15; 361:10,11; 364:1-3; பொருந. 161, 162; பெரும். 480,481; மதுரை. 103; மலை. 569
3. சிலப். 8:45-47;
4. திரு. 229; முல்லை. 8-11; நெடு. 44; குறிஞ்சி. 5

வாழைநார் பூக்களைத் தொடுத்துக் கட்டுதற்குப் பெரிதும் பயன்படும்.[1] ஆர்நார்,[2] நறை நார்,[3] பஞ்சாய்க் கோரைநார்,[4] மரல் நார்,[5] என்பவற்றைக் கொண்டும் பூக்களைத் தொடுத்தனர். தொடுக்கப்படும் தன்மைக்கேற்றவாறு மாலைக்கு வெவ்வேறு பெயர் வழங்கினர்.[6] ஊசியால் கோத்துப் பயன்படுத்தும் வழக்கமும் உண்டு.[7] கோத்துச் செய்யப்பட்டதைத்தான் கோதை என்றனரோ என்பது ஆராய்தற்குரியது. கோதையினை ஆடவரும் மகளிரும் தலையில் சூடியும் மார்பில் அணிந்தும் மகிழ்ந்தனர்.[8]

---

1. " நெறிசெய்த நெய்தல் நெடுநார்ப் பிணித்தியாத்து " – கலி. 131:
2. " அம்புகொண்டறுத்த ஆர்நார் உரிவையிற்
   செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி " – அகம். 269:10,11
3. அகம். 282:9,10; புறம். 168:15
4. " பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டிப்
   புணர்நார்ப் பெய்த புனைவின் கண்ணி " – பெரும். 217:218
5. புறம். 264:2; மலை. 427-431
6. தார், கோதை, பிணையல், தொடையல், புடையல், படலை, ஒலியல், தாமம்.
7. " ஒண்செங்கழுநீர், ஊசிபோகிய சூழ்செய் செச்சையன் "
   – அகம். 48:8,9
8. புறம். 48:1,2

வரிசையாகத் தொடுக்கப்பட்டவை மாலை எனப்பட்டது; மற்றும் அவ்வரிசை ஒரே இன மலர்களைத் தொடுப்பதாக அமைந்திருக்கலாம். தொடுப்பதும் மாலை எனப்பட்டது, எனலாம். விரும்பத்தகும் அழகும் மணமும் கொண்டு பார்ப்பவர் மனத்தில் மால் செய்வது என்ற பொருளிலும் மாலை என்று வழங்கப்-பட்டிருக்கலாம்.

ஒத்த அமைப்பு உடையவாகக் கட்டப்பட்ட மாலை இரண்டினை இணைத்த நிலையினைப் பிணையல் என்றனர். [1] தெரிந்து ஒரு குறிப்பிட்ட பூவை எடுத்துத் தொடுக்கப்படும் பிணைப்புத் தெரியல் எனப்பட்டது எனலாம். [2] பச்சிலைகளுடன் சேர்த்துத் தொடுப்பதனைப் படலைமாலை என்று சொல்வது வழக்கம். [3] சேரர்க்குரிய பனந்தோட்டு மாலை 'இரும்பனம் புடையல்' எனப்பட்டது. [4]

கண்ணி என்பது பெரும்பாலும் ஆடவர் தலைமாலையினை

---

1. 'துணைமலர்ப் பிணையல்' - குறுந். 229:6
'குருஉக்கண் பிணையற்கோதை மகளிர்' - மலை. 349
'பலநிறம் பொருந்தின இடத்தையுடையதாகிய பிணைத்தலையுடைய பாலை'
- பத்துப்பாட்டு, மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக்.641

2. 'ஆர்பூனை தெரியல்' - புறம். 82:5
'ஆரவாய் வேம்பின் அங்குழைத் தெரியல்' - பொருந.144

3. 'படலை என்பது இலைத்தொடை; மலர்களும் இலையும் விரவித் தொடுத்த மாலை' -சிலப். வேங்கடசாமி நாட்டார் உரை, பக். 97
'தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க் காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப் பைந்தளிர்ப் படலை' - சிலப். 4:3,9-41

4. பதிற். 42:1; புறம். 99:5

உணர்த்துவது.[1] பனந்தோட்டினை நறுக்கிய கூர்நுனைத் துண்டுகளைச் சேர்த்து அமைத்துக் கண்ணி தொடுத்தல் சேர நாட்டினர் வழக்கம் என்று தெரிகிறது.

" போந்தொடு தொடுத்த
கடவுள்வாகைத் துய்வீ ஏய்ப்பப்
பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை "[2]

என்பதற்குக் ' கிழித்துக் குறுக நறுக்கி வாகையோடு இடை வைத்துத் தொடுத்த பனங்குருத்து '[3] என்று பழையவுரை குறிப்பதனின்று, பனங்குருத்தினை நறுக்கிய குறுந்துண்டுகள் பூத்த முல்லையெனப் பொலிவுடன் தோன்றும்படி ஏனைப்பூக்களுடன் இடைவைத்துக் கட்டப் பெற்றதனை அறியலாம். சேரர் மரபுக்குரிய அடையாளக் கண்ணி இவ்வாறு அமைக்கப்பட்டது என்று கொள்ளத்தகும்.[4]

---

1. ' மைந்தர் கண்ணி ' - பட்டின. 109
2. பதிற். 66:14-16
3. பதிற்றுப்பத்து, மூலமும் பழையவுரையும், பக். 173
4. ' குவியற் கண்ணி ' ( பதிற். 21:24) என்ற தொடருக்குப் பழையவுரை வெட்சி முதல் வாகையீறுய போர்க் கண்ணிகளெல்லாம் குவிதலையுடைய கண்ணியென்க ' என்று அமைந்துள்ளது (பக். 39) இவ்வுரை பாட்டுடைத் தலைவனுக்கு மாட்சி தருவதாகவோ நடைமுறை இயற்கைக்குப் பொருந்துவதென்றே தோன்றவில்லை. குவி அல் கண்ணி குவியற்கண்ணி. அல் எதிர்மறைப் பொருளது. பனந்தோடு வாடிச் சுருங்குதலும் குவிதலும் இல்லாதது. எனவே, போந்தைக் கண்ணியைக் ' குவியற் கண்ணி ' என்று புலவர் குறித்தனர் என்று கொள்ளலும் தகும். ' மிதியற் செருப்பு ( பதிற். 21:23 ) என்னும் தொடருக்கு மிதியடி அல்லாத் செருப்புமாலை என்று பொருள் கொள்ளப்பட்டதும் ஒப்புநோக்கற்குரியது.

அன்றியும், பனந்தோட்டினை அடிப்படையென வைத்து அதன்மீது ஏனைப் பூவும் தளிரும் பெய்து நாரால் கட்டுதலும் பழங்கால வழக்கமெனத் தெரிகிறது.[1] தற்கால மாலைகளில் வாழைநார்ப் பட்டை அடிப்படையாக அமைதல் நினைத்தற்குரியது. மாலை வகைகளையும் அவற்றின் வேறு பெயர்களையும் நிகண்டு பின்வருமாறு காட்டுகின்றது.

" சுக்கை தொடையல் தொங்கல் கத்திகை
அலங்கல் கண்ணி தெரியல் தாரே
அணியல் தாமம் ஒலியல் சூட்டு
கோதை மஞ்சரி மாலையின் கூற்றே " [2]

" சூட்டே இலம்பகம் நுதலணி மாலை " [3]

" கோத்த மலரே மத்தக மாலை " [4]

" பிணைய லென்பது பின்னிய மாலை " [5]

---

1. " வெண்போட் டசைத்த ஒண்பூங் குவளையர் " — பதிற். 58:2
" வெள்ளிய பனந்தோட்டிலே தொடுத்துக் கட்டிய ஒள்ளிய பொலிவுற்ற குவளைப்பூ ... " — பதிற்றுப்பத்து, மூலமும் பழைய உரையும், உ.வே.சா. குறிப்புரை, பக். 152

" நாறிணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர் " — பதிற். 67:13
" பனங்குருத்தின்கண் வைத்துத் தொடுத்த கண்ணி " — உ.வே.சா. குறிப்புரை, பக். 177
" வெண்போழ் தைஇய அலங்கலந் தொடலை
மறுகுடன் கமழும் மாலை " — நற். 169:8,9
" போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை " — கலி. 55:3
" வேங்கை ஒள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்து " — புறம் 265:2

2. பிங்கல நிகண்டு, 1326
3. " " 1327
4. " " 1328
5. " " 1329

3.3. காலம் சார்ந்து மலரணிதல்

வெப்பம் சிறந்த வேனிற் காலத்தில் நீர்ப்பூக்களையும் மல்லிகை முதலியவற்றையும் விரும்பித் தலையில் முடிப்பது வழக்கம். ஆனால், குளிர் செறியும் பனிநாளில் மங்கலத்தின் பொருட்டுக் கூந்தலில் சிறிதே மலர் அணிவது வழக்கம் என்று நக்கீரர் குறித்தார்.[1]

3.4. முல்லையும் கன்னியும்

மணமாகுமுன்னே, காதலன் தலையில் சூடப்பட்டது, காதலி கூந்தலில் தங்குவது என்பது, தண்டித்தற்குரிய தவறில்லை என்றாலும், கண்டித்தற்குரியது; பார்த்தவர் மனத்தில் பரபரப்பை உண்டாக்குவது என்பதை முல்லைக்கலிப் பாடல்கள் காட்டுகின்றன.

களவுக்காதலன் சூடிய முல்லையை அவன் தழுவிப்பிடிக்க முற்பட்ட ஏறு, கொம்பினால் எடுத்துக்கொண்டு ஆட்டியபோது, காதலி கூந்தலிடை அது வீழ்ந்தது.[2] அதைத்தொடர்ந்து, அந்த நிகழ்ச்சியைத் தெய்வச் செயலாகக் கொண்டு, அவனுக்கே அவளை மணமுடிக்க உடம்பட்டதைத் தெரிவிக்கிறது ஒரு பாட்டு.[3]

---

1. " கூந்தல் மகளிர் கோதை புனையார்
பல்லிருங் கூந்தற் சின்மலர் பெய்ம்மார் " - நெடு. 53, 54

2. கலி. 107: 30, 31

3. கலி. 107

மற்றொரு தலைவியின் கூந்தலைத் தாய் அவிழ்த்து, நெய்பூசி ஒப்பனை செய்ய முற்பட்டபோது, பிறர்க்குத் தெரியாமல் மறைத்துக் கூந்தலில் புதைத்து முடித்த முல்லைக்கண்ணி வெளிப்பட்டது. அதைக் கண்ட தாய்,

" வினவலுஞ் செய்யாள் சினவலும் செய்யாள்
நெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு " 1

நீங்கினாள்.

மகள் தலையில் கண்ட பூ முல்லை என்றறிந்ததும், தாய் நெஞ்சம் துணுக்குற்றதை இப்பாடலில் நல்லுருத்திரனார் காட்டியுள்ளார். முல்லையைத் தொடுத்த கண்ணி என்பதனால், ஆடவனிடமிருந்தே தன் மகளிடம் வந்தது என்பதை அவள் வினவாமலே உய்த்துணர்ந்து கொண்டாள். இதனின்று, மணமாகாக் கன்னியர் தனி முல்லைக் கண்ணியைத் தலையில் சூட்டும் வழக்கம் இல்லை என்பதை அறியலாம்.

கன்னிப் பெண்ணொருத்தி கூந்தலை விரல்களால் விரித்து உளர்த்தும்போது முல்லை மணம் வெளிப்பட்டது. அதனை அறிந்து தாயும் தந்தையும் ஏனைப் பெருமக்களும் வெகுண்டனர் என்பதை ஒரு பாடல் காட்டுகின்றது.

" நறுநுதால் என்கொல் ஐங்கூந்தல் உளரச்
சிறுமுல்லை நாறியதற்குக் குறுமுறுகி

---

1. கலி. 115:10,11

ஒல்லாது உடன்றுஎமர் செய்தார் அவன்கொண்ட
கொல்லேறு போலும் கதம் " [1]

இதிலிருந்தும், கன்னிப்பெண் தனிமுல்லை தொடுத்துச் சூடுவது ஒரு காலத்தில் நாட்டு வழக்கமில்லை என்பது புலப்படும்.

சிறந்த ஆடவர்மேனிக்கு முல்லைமணம் உண்டென்பதோர் கொள்கை நிலவுகின்றது.

" தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின்
மணந்தனன்மன் நெடுந்தோளே
இன்றும்முல்லை முகைநாறும்மே " [2]

என்பது, தலைவனைத் தழுவிய தனால் தலைவி மேனியும் முல்லை மணம் பொருந்தியது என்று தெரிகின்றது. ஆகவே, ஆடவரின் தொடர்பு பெறாத பெண்டிர், பூத்த முல்லையைச் சூடுதலும் அதன் நறுமணம் பொருந்துதலும் தகாது என முன்னோர் விலக்கினர் என்பது பெறப்படுகிறது.

" ஆயமொடாடி
முல்லை குருந்தொடு முச்சி வேய்ந்து " [3]

---

1. கலி. 103: 53-56
2. குறுந். 193: 4-6; ( அவனது மேனியின் இயற்கை மணமாகிய முல்லைப் பூவின் மணம் என்தோள்கள் கமழாநிற்கும் '- பொ. வே. சோ. உரை. குறுந்தொகை, பக். 180, ( சைவ சித்தாந்தக் கழகம், சென்னை ); கோவை இளஞ்சேரன், முல்லை மணக்கிறது, பக். 3-5 ( கலைக்குடில் வெளியீட்டகம், நாகப்பட்டினம் ) 1978, முதற்பதிப்பு.
3. கலி. 112: 24, 25

என வருவதனின்று முல்லையைப் பிற பூக்களுடன் சேர்த்துத் தொடுத்து அணிவது கன்னியர் இயல்பு என்பது தெரியவரும். பிற மலர்ச் சார்பு உள்ளபோது கூந்தலில் தனிமணம் தங்காது; பொதுமணமே நிலைபெறும்.

" காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை "[1]

என்று தன்னிடம் உள்ள பூக்களைக் காட்டி, மாலையில் மனைக்கு ஏகும் இளம்பெண் ஒருத்தி சொன்னாள். ஆயினும், கொய்தவள் தனக்கென்றே கொய்தாள் என்று சொல்வதற்கில்லை.

சிலப்பதிகாரத்தில் குரவையாட முற்பட்ட ஆயமகள் ஒருத்தியின் நிலை,

" மல்லல் மழவிடை ஊர்ந்தார்க்கு உரியள்இம்
முல்லையம் பூங்குழல்தான் "[2]

என்பதும் நினைவு கூரல்பாற்று.

இந்தத் தொடரைக்கொண்டு கன்னிப்பெண் முல்லையைச் சூட்டினாள் என்று சொல்லிவிட முடியாது. முல்லை சூட்டுதற்குரிய

---

1. கலி. 117:11
2. சிலப். 17; சுட்டு - குறள் வெண்பா 3 ( யாகனேரி, த.இ.தமிழ்ச் சங்க வெளியீடு,) 1959, ஆறும் பதிப்பு.

சிறப்பினையுடையவள் அவள் என்று எதிர்காலம் நோக்கிய அன்மொழித் தொகையாகப் பொருள் கொள்ளல் ஏற்புடைத்து. " ஊர்ந்தார்க்கு உரியள் " என்பதிலும் உறுதி பற்றிய கால வழுவமைதி உள்ளமை நோக்குதற்குரியது.

இந்த நூற்றாண்டிலும், திருநெல்வேலியைச் சார்ந்த வேளாண்கன்னியர், ஏனைக் கன்னியர் முல்லை சூடியதைக்காணின் நகையாடுவர் என்பது செவிவழிச் செய்தி.

அன்றியும், மணமுள்ள மலர்களுடன் எத்தனையோ காட்டுப் பூக்கள் தொடுக்கப்பட்டு விற்பனைக்கு வருகின்றன. எனினும், தனி முல்லை தொடுத்துக் கடைவீதியில் விற்பதில்லை என்பதும் நினைவிற் கொள்ளற்பாற்று. ' இல்வளர் முல்லை '[1] என்று பல இடத்தும் இளங்கோவடிகள் பாராட்டிய முல்லைக்கொடியைத் தத்தம் மனையருகே வளர்த்துப் பூக்கொய்து அணியும் நிலைமையே இன்றும் உள்ளது.

### 3.5. கற்பு முல்லை

பழங்கால ஆடவர்கள் யாவரேயாயினும், வயது தொழில் குலம் முதலிய வேறுபாடின்றி முல்லை சூடினர்.[2] ஆயினும், பெண்கள் -

---

1. சிலப். 4:27, 5:191, 13:119

2. " யாருடை இடைமகன் சென்னிச்
   சூடிய எல்லாம் சிறுபசு முகையே "- குறுந். 221:4,3
   " முல்லைத்தார் மறமன்னர் "- யாப்பருங்கலக் காரிகை மேற்கோள் பக். 115, (மே.வீ.வே.பதிப்பு, பாரிநிலையம், சென்னை,) 1968, முதற்பதிப்பு.

மனைவி யென்னும் நிலைபெற்றபோது - மனையறப்பொறுப்பு ஏற்ற வழி - முல்லை சூடுவது முறைமை என்ற சமுதாய நெறிக்கு ஏற்ப, 'முல்லை சான்ற கற்பு '[1] என்று சான்றோர் பல இடத்தும் குறித்தார்.

'முல்லைச் சூடுதற்கமைந்த கற்பு ' (மனையறம்) - என்னும் நச்சினார்க்கினியர் உரைப்பொருள்[2] ஈங்கே உச்சி மேற் கொள்ளத்தக்கது. இவ்வகை மரபு நிலைபெற்றமையால்தான் கன்னி மகள் கூந்தலில் முல்லையைக் கண்ட தாய் 'நெருப்புக்கை தொட்டவர் '[3] நிலையை உற்றாள்.

தமிழர் வாழ்க்கை என்பது, பன்னூறு ஆண்டுகளாக வளர்ந்து பண்பட்ட ஒன்று. இப்படிப் பண்பட்டு நெறிப்பட அமைந்த வாழ்வில் ஒரு சிறு பொருளுக்கும், நிகழ்ச்சிக்கும் எத்தனையோ சிறப்பும் மதிப்பும் உள்ளன. முல்லை மலர்கள் காடெல்லாம் பூத்துத் திகழ்வன. அதைத் தொடுப்பதும் அணிவதும் எவரும் செயற்குரிய எளிய செயல். ஆடு மேய்ப்பவன் முதல் அரசன் வரையுள்ள ஆடவர் அனைவரும் அதைத் தலையில் அணியலாம். என்றாலும், ஒரு கன்னிப்பெண் தலையில் முல்லை காணப்பட்டால் - அதன் மணம் கமழ்ந்தால் அது குற்றமென்று

---

1. நற். 142:20; அகம்.274:13; சிறுபாண். 30
2. பத்துப்பாட்டு, மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக்.152
3. கலி. 115:11

பெற்றோரும் வெகுளும் நிலைமை இருந்தது என்பது வியக்கத்தக்க பண்பாட்டு வளர்ச்சியை விளக்கிக் காட்டுவதோர் உரைகல் எனலாம்.

## 3.6. கன்னியரும் மலர்களும்

'தமிழ்க்காதல்' என்னும் நூல் எழுதிய டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் பழந்தமிழ்க் கன்னியர் பொதுவாக மலர்சூடுதல் வழக்கமில்லை என்று குறிப்பிட்டுள்ளார்.[1] இலக்கியப் பாடல்களை நோக்கும்போது முல்லைப்பூ மட்டும் சூடுவதில்லை எனத் தெரிகிறது. களவுக்காலக் காதலன் மலர்களைக் கொய்து வந்து கொடுத்தல்,[2] தொடுத்தற்கு உதவுதல், வேங்கை மலர் சூட விரும்பும் இளமகளிர் 'புலி புலி' எனக் குரல் எழுப்புவது[3] முதலிய பல செய்திகளையும் நடைமுறைக்குப் பொருந்தாத கற்பனை யென்று கொண்டாலன்றி அவர் கருத்து ஆக்கம் பெறாது.

## 3.7. பூ விற்பனை

மலர்களைக் கொய்தலும் தகுந்தவாறு தொடுத்து மக்களிடம்

---

1. தமிழ்க்காதல், பக். 157 - 165 ( செல்வி பதிப்பகம், காரைக்குடி ) 1962, முதற்பதிப்பு.

2. நற். 60:9-11; 143:2,3; 204:3; 313:1-4; 349:2 357:8; பதிற். 27:2; கலி. 76:1-4; 113:3; 117:10; 122:1; அகம். 49:16; 180:2; 188:7,10; 198:8; 188:27-29; 300:11-13; 308:5,6; புறம். 24:11; 61:1,2.

3. கலி. 143:31; 144:30-33.

விற்பதும் தமிழகத்தில் ஒரு தொழில் என நெடுங்காலமாக அமைந்து விட்டது. பேரூர்களின் அங்காடியில் மலரும் மாலையும் விற்கப் பட்டன.[1] வீடு தோறும் சென்று பெண்டிர் மலர் விற்பதும் உண்டு.[2]

3.8. செயற்கைப் பூக்கள், மாலைகள்

காலப்போக்கில் மக்கள் வாழ்வில் இயற்கைப் பூக்களின் இடத்தில் செயற்கை மலர்கள் இடம்பெறலாயின. வீடுகளையும் வீதிகளையும் விழாவின் பொருட்டுப் புனைவதற்குப் பொய்ப்பூக்கள் பெரிதும் உதவின.[3] சிடேச்சை என்பபடும் நெட்டியால் பொய்ம்மலரும் மாலையும் புனைந்து வண்ணமும் வாசமும் ஊட்டி விற்றனர்.[4]

நுண் மரக்கட்டையை அறுத்துச் செதுக்கிய சிறுதுண்டுகளைக் கொண்டு அமைத்த மாலை குரங்கினுக்கு அணிகலனாயிற்று என்றார் நத்தத்தனார்.[5] வாடாமலரெனப் பொன்னாலும் வெள்ளியாலும் பிறவற்றாலும் செய்து மேனியில் அணியும் பழக்கம் தமிழரிடை வளர்ந்து பெருகியது.[6] நூலறிவு வாய்ந்த தூதன் 'நூலரிமாலை' சூடிச் சென்றான்.[7]

---

1. அகம். 48:7-9; 52:1-8
2. மதுரை. 396-398; 423,513
3. நற். 97:6-8; 118:10,11; அகம். 84:11-13; புறம். 293:6; மதுரை. 423.
4. பெருங்கதை. இலாவாண காண்டம். 2:139-148
5. 'செப்புநுண்ணி' - சிறுபாண். 54, 51-53
6. பரி. 11:65; கலி. 55:1,2; அகம். 253:4; புறம்.90:1; புறம். 353:3
7. புறம். 284:3.

## 3.9. பூச்சூடாமை

பூக்களை அணியாத நிலைமை என்பது அமங்கலத்தையும் அவலத்தையும் உணர்த்தும் தன்மையது. எனவே, பழந்தமிழர் ஏதாயினும் மலர் சூடும் வழக்கம் உடையவர்[1] என்றாலும், சிறப்புக்குரிய பெருமக்கள் இறந்த துயரம் பெருகிய நிலையில் மங்கலமுடைய பூச்சூடுதல் சமுதாயத்தில் தவிர்க்கப்பட்டது.[2] எனவே, அவலமும், மலர் சூடாமையும் ஒருங்கு வருவன என்பது தெரியவரும்.[3]

" மகளிர், பூவில் வறுந்தலை முடிப்பவும் "[4]

என்று போர்க்கால அவலம் காட்டப்பட்டது.

கணவனை இழந்த மகளிர் அணிகலன் களைவதும் தலையை மழிப்பதும் வழக்கம்.[5] அணிகலனும் மலரும் அடங்கியது எனக் கொள்ளுதல் அமையும்.

---

1. அகம். 301:11-15
2. புறம். 242
3. குறுந். 19:1-3
   " பாணர் சென்னியும் வண்டுசென் றாதா "-புறம். 244:1
4. புறம். 44:6,7
5. புறம். 280:11-14

கணவன் வேற்றூர் சென்ற காலத்திலும் மனையற மகளிர் மலரைத் தவிர்த்தனர்.[1] கணவன் மனைக்கு மீளும் வரையில் மலர் சூடாமை என்பது மற்றவர் வற்புறுத்தலால் அமைந்த கட்டுப்பாடன்று. துணைவரைப் பிரிந்து வாழும் காலத்தில், கண்ணுக்கினிய வகையில் மேனியைப் புனைதல் வேண்டா என்னும் துறவு நெஞ்சமும், தலைவன் நிலையை எண்ணிக் கலங்கும் ஆற்றுமைப் பண்புமே அடிப்படையாம். கோப்பெருந்தேவியென மேம்பட வாழும் பெண்மணியும், தலைக்கும் மேனிக்கும் எவ்வகை ஒப்பனையும் இன்றிப் பிரிவுக் காலத்தில் வாடிய தன்மையை நெடுநல்வாடை காட்டுகின்றது.[2] பேகனைப் பிரிந்த பெருமனைக் கிழத்தியும், கூந்தலும் மேனியும் புனையாமல் வருந்தினள் என்று புறநானூறு தெரிவிக்கின்றது.[3] மற்றை மகளிருடன் கணவன் காலங்கழிக்கும் போதும் மனைவி கூந்தலில் மலரில்லை என்பதைக் கலித்தொகை காட்டுகின்றது.[4] வினைமுற்றி மீளும் தலைமகனை எதிர்கொள்ளும்போது விருப்புடன் ஒப்பனை செய்யும் தன்மையைக் காணமுடிகின்றது.[5]

---

1. அகம். 144:3-5;
2. நெடு. 136-147
3. புறம். 146:10,11; 147:8
4. " எம் காதின் கனங்குழை வாங்கிப் பெயர்தொறும் போதில் வறுங்கூந்தல் கொள்வதை " - கலி. 80:22,23
5. நற். 42:9-11; ஐங். 463:1-3; ஐங். 496:4,5; அகம். 104:16,17; 269:2; சிலப். 27:215,216.

## 3.10. தற்காலம்

இன்றைய வாழ்வில், பூச்சூட்டிய கோலம் மங்கலமும் வனப்பும் பொருந்தியது. எனினும், பூவின்மையைத் துயரம் என்றோ, கலக்கம் என்றோ சொல்வதற்கில்லை. விழாச் சடங்குகள் தவிர மற்ற நேரத்தில் ஆடவர் பூ அணிதல் இன்று மறக்கப்பட்ட ஒன்று. தலையில் பூச் சூடுதல் பெண்டிர்க்கே உரிய வழக்கமாயிற்று. எனினும், இற்றை வாழ்க்கைப் போராட்டத்தில் - பல்துறை அலுவலகங்களில் சென்று பெண்டிரும் பொருள் ஈட்டும் கடமையை ஏற்று நடத்தும் சூழ்நிலையில் - மலர்சூடும் மங்கலம் என்பது படிப்படியே மறக்கப்பட்டும் புறக்கணிக்கப்பட்டும் வருகின்றது.

## 3.11. இப்பகுதியினின்றும் அறியும் சில உண்மைகள்

இதுவரையில் காட்டியவற்றால், பழந்தமிழ் மக்கள் பூக்களைப் புனைந்து அணிந்த தன்மையும், கண்ணியும் மாலையும் தழையும் பயன்பட்ட முறையும், குலமரபு உணர்த்தும் அடையாளப் பூக்களும், செயற்கைப் பூக்களும் வாழ்வில் இடம்பெற்றமையும் அறியப்படும். பொதுவாகப் பார்க்குமிடத்து, உண்ணுதற்குக் காய் தந்து உதவுகின்றவற்றின் மலர்கள் சூடப்படவில்லை எனவும், அவ்வாறில்லாத மலர்கள் சூடுதற்குப் பெரிதும் பயன்பட்டன எனவும், அகமகிழ்ச்சி, முகமலர்ச்சி, கடமை நிகழ்ச்சி ஆகியவற்றைக் குறித்துக் காட்டும் தன்மை மலர்களுக்கு வாழ்வில் ஏற்பட்டது எனவும் தெரிந்து கொள்ள முடிகின்றது.

***

## 4. மலர்களும் இலக்கிய மரபுகளும்

4.0. மலர்களை ஒட்டி ஒருசில இலக்கிய மரபுகள் தோற்றுவிக்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவற்றின் பெயர்கள் திணைப் பாகுபாடுகளுக்கும், நிலப்பாகுபாடுகளுக்கும் பண்ணிசை வகைகளுக்கும் அமைந்துள்ளன என்பது தெரிகிறது. தெய்வங்களுக்கும் மலர்களுக்கும் நெருங்கிய தொடர்புகள் ஒரு மரபாகக் கூறப்பட்டு வருகின்றன. சொல்லாட்சி நிலைகளுள் பூ, மலர், அலர் என்பன பெயராகவும் பண்பாகவும் வினையாகவும் வழங்கிவரும் தன்மையும் சிறப்புடைய மரபு என்று குறிப்பிடத்தகும்.

4.1. மரபு நிலை

தொன்றுதொட்டுப் பல நூற்றாண்டுக்காலம் வளர்ந்து சிறந்த நிலைபெற்று வருவது மரபு எனப்படும். மொழியும் இலக்கியமும் பிற கல்வி கலைத்துறைகளும் மரபுவழி வரும் செல்வங்களேயாம். இலக்கிய நெறி உணர்ந்து இலக்கண வரம்பினைப் பெரியோர் அமைக்கின்றனர். அந்தக் கொள்கைகளும் மரபுநிலைக்கு உட்பட்டனவே ஆகும்.

4.2. திணைகள்

தமிழின் இலக்கியப் பாடல்களைப் பல நூற்றாண்டுக்கு முன்பு ஆராய்ந்தவர்கள் கண்டுணர்ந்த நெறிமுறைகள், திணை இலக்கணம் என அமைக்கப்பட்டன. திணை இருவகைத்து: அவை அகத்திணையும் புறத்திணையும். தொல்காப்பிய நெறிப்படி அகத்திணை ஏழு; புறத்திணை ஏழு. இவை பதினான்கும் அறிஞர் அகக்கண்முன் இணைந்த காட்சி வழங்கின. எனவே, வெட்சி, குறிஞ்சியது புறன் எனவும்,[1] வஞ்சி முல்லையது புறன் எனவும்,[2] உழிஞை மருதத்துப் புறன் எனவும்.[3] தும்பை நெய்தலது புறன் எனவும்,[4] வாகை பாலையது

---

1. தொல். 1002:3
2. தொல். 1007
3. தொல். 1010
4. தொல். 1015

புறன் எனவும்,[1] பாடாண் பகுதி கைக்கிளைப் புறன் எனவும்,[2] காஞ்சித்திணை பெருந்திணைப் புறன் எனவும்,[3] தொல்காப்பியனார் பொருத்திக் காட்டியுள்ளார்.

## 4.3. பெயர்க்காரணம்

இவற்றுள் பாடாண், கைக்கிளை, பெருந்திணை என்னும் மூன்றனைத் தவிர ஏனையவற்றின் பெயர்கள் மலர்களை ஒட்டி அமைந்தவை என்று குறிப்பிடுதல் முன்னோர் மரபாகக் காணப்படுகிறது.[4]

---

1. தொல். 1019
2. தொல். 1026
3. தொல். 1023

   – தொல்காப்பிய மூலம் ( சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை) 1967, மூன்றும் பதிப்பு.

4. " முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ, காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம்பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின், ... ... காடுறை உலகிற்கு முல்லைப்பூச் சிறந்தது ஆகலானும், ... ... தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும், ... ... பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும், இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும். "

   " பாலை என்பதற்கு நிலம் இன்றேனும் வேனிற்காலம் பற்றி வருதலின், அக்காலத்துத் தளிரும் சினையும் வளருதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலான், அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறிப்பிட்டார். கைக்கிளை, பெருந்திணை என்பவற்றிற்கு நிலமும் காலமும் பகுத்தோதாமையின் இவ்வாறன்றிப் பிறிதோர் காரணத்தினால் குறியிட்டார் "

   – தொல். பொருள். அகத். இளம். உரை, பக். 10 ( சைவ சித்தாந்தக் கழகம், சென்னை ) 1956, இரண்டாம் பதிப்பு.

### 4.3.1. ஐந்திணை மலர்கள்

பூக்களுக்கும் நிலங்களுக்கும் ஏற்றவாறு தொடர்புபடுத்திக் காட்டிய பண்டை உரையாசிரியர் சொற்கள் கருத்தில் கொள்ளற்கு உரியவை.

### 4.3.1.1. குறிஞ்சி

குறிஞ்சி என்பது பன்னீராண்டுகளுக்கு ஒருமுறை மலர்வது என்பர். எனவே, காலத்தைக் கணக்கிடுவதற்குக் குறிஞ்சியின் வளர்ச்சியும் மலர்ச்சியும் உதவும் நிலைமை குறிப்பிடத்தக்கது.

" கருங்கோற் குறிஞ்சி மதனில வான்பூ " [1] எனவும்,

" நீண்மலைக் கலித்த கருங்கோற் குறிஞ்சி
நாண்மலர் புரையும் நன்மாமேனி " [2] எனவும்,

" கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு " [3]

" கருங்கோற் குறிஞ்சியடுக்கம் பாட " [4]

" கார்மலர்க் குறிஞ்சி சூடி " [5]

---

1. நற். 268:4,5
2. நற். 301:1,2
3. குறுந். 3:3
4. புறம். 374:8
5. மதுரை. 613

குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையில், 'குறிஞ்சி'[1] எனவும் வரும் தொடர்களால் குறிஞ்சியது மாட்சி புலனாகின்றது.

அன்றியும், ஐவகைத் திணைக்கும் உரிய கருப்பொருள்களில், கலைத்துறை வளர்ச்சியைக் காட்டும் பறையும் யாழும் பண்ணும் இடம்பெறுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. குறிஞ்சித் திணைக்குரிய யாழும் பண்ணும் குறிஞ்சி என்னும் மலரின் பெயராகவே அமைந்திருப்பதும் குறிஞ்சி மலரின் சிறப்பிற்குச் சான்று ஆகும்.

குறிஞ்சிப் பண் பொருந்த மலைநிலத்துமக்கள் பாடியதையும் இசைத்ததையும் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.[3]

4.3.1.2. முல்லை

கருவிளை, காயா, குருந்து, கொன்றை, தளவு (செம்முல்லை) பிடவு ஆகிய அனைத்துமே காட்டுநிலத்து அழகினுக்கு அழகு செய்வன.

---

1. குறிஞ்சி. 63
2. 'தொண்டகம் குறிஞ்சியாழ் குறிஞ்சி'
   - நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், நூற்பா, 20:8 (சைவ சித்தாந்தக் கழகம், சென்னை) 1973, ஐந்தாம்பதிப்பு
3. நற். 255:2; அகம். 102:4-9; திரு. 239; பொருந. 218; பெரும். 182; மலை. 359.

மாயோன் என்னும் தெய்வத்தொடு மேம்பட்டது ஆறாயிட.

மாயோனின் மேனிவண்ணம் காட்டுவன காயாவும் கருவிளையும்,

தளவும் முல்லையும் மனையற மகளிர் விரும்பிச் சூடுதற்குரியன.

" கார்நறுங் கொன்றை " என்பது சிவபிரானுக்கு உகந்த மாலை.

எனினும், முல்லை என்பதையே திணைப்பெயராகக் கொண்ட சிறப்பு

அறிந்து இன்புறத்தக்கது.

கருப்பொருள்களைக் குறிப்பிடும்போது, " ஏற்றுப்பறை

முல்லையாழ் சாதாரி " [1] என்று நாற்கவிராச நம்பி

தெரிவித்தமையும் இவண் நினைத்தற்குரியது.

" பாணர் முல்லை பாட " [2]

என்பதனின்று மாலை நேரத்தில் இசைக்கப்பட்ட முல்லைப்பண்ணின்

நிலை உணரலாகும். மாயோனைப் பரவும் முல்லைப் பண்ணினை

முல்லைத் தீம்பாணி [3] என்று இளங்கோவடிகள் சொல்லியுள்ளமையும்

ஒப்புநோக்குதற்குரியது.

---

1. நாற்கவிராச நம்பி, அகப்பொருள்விளக்கம், நூற்பா.20:8

2. ஐங். 408:1

3. சிலப். ஆய்ச்சியர் குரவை, வரி. 2827 ( இரட்டைக் காப்பியங்கள், செல்வி பதிப்பகம், காரைக்குடி ) 1960, இரண்டாம் பதிப்பு.

## 4.3.1.3. பாலை

பாலை என்பது வெண்மலர்களையுடைய மரம். குறிஞ்சிப்பாட்டின் மலர் வரிசையிலும் [1] நற்றிணைப்பாட்டு ஒன்றிலும், [2] பாலை மலர்பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. ஏனைய பாலைத்திணைப் பாடல்களில் வேம்பு, யாமரம், ஞெமை என்பனவும் இலவம், கவிர், கோங்கம், பாதிரி, மராம் என்பனவும் அதிரற்கொடியும் பாட்டுள் பெரிதும் பயில்கின்றன.

மற்றும், கருப்பொருள்களைக் குறிப்பிடுமிடத்து, நாற்கவிராச நம்பி 'பாலை யாழ்' என்பதைக் காட்டியுள்ளார். [3] பாலை என்பது இசைத்துறையில் பெருஞ்சிறப்புப் பெற்ற பெயர் என்று அறிய முடிகின்றது. [4] பரிபாடலில் முதல் பன்னிரு பாடலுக்குரிய இசையின் பெயர் 'பண்ணுப்பாலையாழ்' என்றே கொடுக்கப்பட்டுள்ளது. [5]

---

1. குறிஞ்சி. 77
2. நற். 107:4
3. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், நூற்பா.21:9
4. ஏழ்பெரும் பாலையென்பது இசைமரபில் இன்றியமையாச் சிறப்பு நிலை பெறுவதைச் சிலப்பதிகார அரங்கேற்று காதைக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையினாலும், விபுலானந்தரின் யாழ் நூலைக்கொண்டும் அறியப்படும்.
5. பரிபாடல், பாடல்களின் அடிக்குறிப்பு.

பாலை என்னும் பண் கேட்பவர் நெஞ்சத்தை உருக்கும் தன்மையது என்பதையும் அதைச் செவியுற்ற பாலை மறவரும் தம் படைக்கருவியை நழுவவிட்டு நெஞ்சுருகி நின்றனர் என்பதையும் முடத்தாமக் கண்ணியார் பாட்டினின்று அறிய முடிகின்றது.

" ஆறலைகள்வர் படைவிட, அருளின்
மாறு தலைப்பெயர்க்கும் மருவின் பாலை " [1]

என்ற பொருநராற்றுப் படைத் தொடர் இங்கே குறிப்பிடத்தக்கது.

மேலும்,

" பாலைவல்லோன் பண்ணுப் பெயர்த்தாங்கு " [2]

என்று கபிலர் கூற்றிலும்,

" நைவளம் பழுநிய நயந்தெரி பாலை " [3]

என்னும் நத்தத்தனார் சொற்களிலும், மற்றும் பல புலவர்களின் பாடல்களிலும் [4] பாலைப் பண்ணின் மாட்சி விளங்கக் காணலாம்.

---

1. பொருந. 21,22
2. பதிற். 65:14
3. சிறுபாண். 36
4. பதிற். 46:5; 57:8; 66:2; அகம். 355:4; பெரும். 179,180; குறிஞ்சி. 146

" யாழ்பட நின்ற பாலைப்பண் " - சிலப். அரங். வரி. 307

தமிழ் முன்னோரின் செவிகளையும் சிந்தையையும் நிறைத்த பாலைப் பண்ணிற்கு மலரின் பெயரே அமைந்துள்ளமை அறிஞர்க்கு இறும்பூது தருவதாகும்.

4.3.1.4. மருதம்

மருதத்திணை பற்றிய பாடல்களில் ஆம்பல், கரும்பு, காஞ்சி, தாமரை, மாமரம், வேழம் என்பவை பெரிதும் இடம்பெறுவதைக் காணமுடிகின்றது. மருத மரத்தினையும் மலரினையும் பற்றிய செய்திகள் மிகவும் குறைவே என்பது குறிப்பிடத்தக்கது.

" வாங்குசினை மருதத்துத் தூங்குதுணர் உதிரும் " [1] எனவு

" கருந்தகட்டு, உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டி "[2] எனவும்,

" தேங்கமழ் மருதிணர் கடுப்ப " [3] எனவும்,

வரும் தொடர்களும்,

குறிஞ்சிப்பாட்டின் மலர்வரிசையில் மருதம் என்ற சொல்லும் [4]

---

1. நற். 350:3
2. திரு. 24,25
3. திரு. 34
4. குறிஞ்சி. 73

தவிர, மருதம் என்னும் மலரினைப்பற்றிச் சொல்லும் வேறு குறிப்பு யாதும் சங்க இலக்கியத்துள் காணப்படவில்லை.

அகத்திணை இலக்கணத்தில்,

" மருதயாழ், மருதம்,[1] என யாழும் பண்ணும் குறிக்கப் பெற்றுள்ளமை இவண் காட்டுதற்குரியது. மருதம் என்னும் பண் வைகறையில் இசைத்தற்குரியது என்று சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.[2] மருதத்திணையின் உரிப்பொருளாகிய ஊடலுக்குச் சிறப்புரிமைக் காலமும் வைகறையே என்பதைப் புலவர் சுட்டியுள்ளனர்.[3] இவ்வாறு தமிழ் முன்னோர் அமைத்த திணையும் யாழும் பண்ணும் அவை வழங்கிய நிலமும் மருதம் என்னும் மலர்ப்பெயரால் குறிக்கப்பட்டமையினின்று மலர்களின் செல்வாக்கை உணரமுடிகின்றது.

## 4.3.1.5. நெய்தல்

கடற்கரை நிலத்துக்கு அழகுதரும் மரங்கள் புன்னையும் ஞாழலும் கண்டலும் தில்லையும். அடும்பு, செருந்தி, தாழை, முண்டகம் என்பவையும் அந்நிலத்துக்கு அழகு செய்வன. நெய்தல்

---

1. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், நூற்பா.23:12
2. புறம். 149:2-4; மலை. 470, 534
3. கலி. 66; 70:20; சிலப். இந்திர.வரி.641-651 ( இரட்டைக் காப்பியங்கள் )

" யாமிரப்பநீடுகமன்றோ இரா " - திருக். 1129

என்னும் சுனைப்பூ நன்னீர் தேங்குதற்குரிய வாய்ப்புகள் ஏனை நிலங்களிலும் வளர்ந்து மலர்வதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

நெய்தலுக்குரிய ஏனைக் கருப்பொருள்களைக் குறிக்குமிடத்து,[1] அகத்திணை இலக்கணம் நெய்தல் என்னும் சொல்லுடைய பண், பறை, யாழ் ஆகிய யாதொன்றையும் குறிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

நெய்தற்பறை என்று சொல்லப்பட்ட ஒன்று இரங்கலுக்கு உரிய நிகழ்ச்சியைக் குறித்த சாப்பறையாகும்.

" ஓரில் நெய்தல் கறங்க "[2] எனவும்,

" நெய்தல் கேளன்மார் நெடுங்கடையானே "[3] எனவும்,

வரும் புறப்பாட்டின் தொடர்கள் அவல உணர்ச்சி குறித்த நெய்தற் பறையின் நிலைமை தெரிவிக்கின்றன.

மங்கலம் சார்ந்த முழவு, யாழ், பண் என்பவற்றுடன் நெய்தல் என்னும் பெயரைத் தொடர்புபடுத்தாமை கருத்திற் கொள்ளற்குரியது.

---

1. " நளிமீன்கோட்பறை நாவாய்ப் பம்பை விளரியாழ் செவ்வழி " - நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், - நூற்பா. 24:10,11.

2. புறம். 194:1

3. புறம். 389:17

மற்றும், நெய்தல் என்னும் திணைக்குச் சிறப்புரிமை பெற்ற சிறு பொழுதாகிய அந்திமாலை நேரத்தில் செவ்வழி என்னும் பண்ணினை இசைத்தனர் என்று பழம்பாடல்கள் குறிக்கின்றன.[1]

* நெய்தல் என்னும் திணைக்குரிய உரிப்பொருள் இரங்கல்;
* நெய்தல் என்னும் பறையும் இரங்கலை உணர்த்துவது;

நெய்தலுக்குரிய கருப்பொருளாகிய விளரியாழ், செவ்வழிப்பண் என்பவையும் இரங்கல் உணர்ச்சியைப் புலப்படுத்துவன என்பதைப் பழம்புலவர் காட்டியுள்ளனர்.[2]

இத்தகு நிலைமைகளை நோக்குமிடத்து, நெய்தல் என்னும் பூவின்பெயர் ஆகுபெயராகத் திணையினையும் நிலத்திணையும் பறையினையும் உணர்த்தும்நிலை வளர்ந்து அமைந்தது என்பதுவும் இலக்கியத்துறையிலும் ஏனைய துறையிலும் இரங்கல் உணர்ச்சியே நெய்தலின் உட்பொருள் என்பதுவும் புலப்படுகின்றன.

## 4.4. பாடாண் பாட்டில் திணை நிலங்கள் பெறும் இடம்

பாடாண்திணை வழிநின்று பாட்டுடைத் தலைவனைச் சிறப்பிக்கும்

---

1. புறம். 144:2; புறம். 146:3; 147:2; 149:2-4
2. "நளையர்விளரி நெடிதரும் தீம்பாலை" - சிலப். கானல்வரி: 103 (இரட்டைக் காப்பியங்கள், செல்வி பதிப்பகம், காரைக்குடி)

நெடும்பாடல்கள் ஐந்திணைநெறி அளாவிச் செல்லும் பண்பினைப் பத்துப்பாட்டில் காணமுடிகின்றது.

### 4.4.1. சிறுபாணாற்றுப்படை காட்டும் நானிலத்தன்மை

" பாலை நின்ற பாலை நெடுவழி " [1] எனவும்,
" முல்லை சான்ற முல்லையம் புறவு "[2] எனவும்,
" மருதம் சான்ற மருதத் தண்பணை "[3] எனவும்,
" பாடல் சான்ற நெய்தல் நெடுவழி" [4] எனவும்,

நல்லியக்கோடனைப் பாராட்டி நத்தத்தனார் இயற்றிய ஆற்றுப்படையில் அமைந்த திணைநிலப் பெயர்களும் அவற்றுக்கு நச்சினார்க்கினியர் உரை வரைந்த மாட்சியும் [5] அறிந்து இன்புறுதற்கு உரியன.

### 4.4.2. மதுரைக் காஞ்சியில் ஐந்திணை அமைப்பு

" .... மருதஞ்சான்ற தண்பணை ஒருசார் " [6] எனவும்,

---

1. சிறுபாண். 11
2. " 169
3. " 186
4. " 151
5. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக். 150-168 (உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை)1956 ஐந்தாம் பதிப்பு.
6. மதுரை. 275

" ... முல்லை சான்ற புறவணிந் தொருசார் " [1] எனவும்,
" குறிஞ்சி சான்ற வெற்பணிந் தொருசார் " [2] எனவும்,
" ... பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார் " [3] எனவும்
" ... நெய்தல்சான்ற வளம்பல பயின்றுங்கு " [4] எனவும்,

மாங்குடி மருதனார் ஐந்திணை நீர்மையை அறிவுறுத்திக் காட்டியுள்ளார்.

### 4.4.3. பொருநராற்றுப்படையில் பல திணைப் பண்பு

" குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்
நறும்பூங் கண்ணி குறவர் சூடக்
கானவர் மருதம்பாட அகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவல " [5]

என்று முடத்தாமக் கண்ணியார் நாட்டு மக்களின் ஒருமைப்பாட்டினைத் திணைகளின் வழிநின்று செப்பிய தன்மை சிறப்புடையதாகும்.

---

1. மதுரை. 285
2. " 300
3. " 314
4. " 325
5. பொருந.218-221

### 4.4.4. மலர் இன்றி அமையாத மரபு

மேற்காட்டிய பாடல்களின் இயல்பினை நோக்குமிடத்துத் தமிழ்ச் செய்யுள் உலகில் மலர்ப் பெயர்களின் ஆற்றல் ஆழ்ந்தும் அகன்றும் பரவியுள்ள தன்மை மறப்பதற்கு அரியது என்பது புலனாகும்.

### 4.5. புறத்திணைகள்

புறத்திணை நிகழ்ச்சிகள் மக்கள் நடைமுறை வாழ்க்கையொடு பொருந்தி அமைவன. எனவே, போர்த்தொழிலுக்கு அறிகுறியாக ஆடவர் புனைந்த பூவின் பெயரால் அச்செயலைப் பாடும் திணையும் குறிக்கப்பட்டது. இயற்கையில் வளரும் செடிகொடிகளைக் கொய்து சூடித் தம் செய்கையை அறிவுறுத்தும் நிலைமை வரலாற்றுக்கு முற்பட்ட முதுபழங்காலத்தது. பேச்சுமொழியில் கருத்து வளம் சிறக்க வளராத பண்டைய வாழ்வில் இத்தகைய அறிகுறிகள் இன்றியமையாதவை.

திணைக்கு இலக்கணம் வரையறுக்கும் அளவு இலக்கிய வளர்ச்சி ஏற்பட்ட காலத்தில் மக்கள் வாழ்க்கையும் மொழியின் தன்மையும் மிகமேம்பட்டிருத்தல் வேண்டும். எனவே, ஏடும் இலக்கியமும் வளர்வுற்ற காலத்தில், கண்ணி புனைந்து கடமையாற்றுதல் என்பது முற்கால நிலைமையை நினைவுறுத்தும் ஒரு சடங்கு என்னும் நிலையைப் பெற்றதாகல் வேண்டும். தும்பை வாகை என்பவற்றை உலோகங்களால்

செய்வித்த செயற்கை மலர்களாகப் பயன்படுத்திய தன்மையும் இதையே தெரிவிக்கின்றது.[1]

4.5.1. வெட்சி

வெட்சி என்பது மலைநாட்டைச் சேர்ந்து வளர்வது.[2] குன்றுகளிடையே வாழ்வோர், காடுறுநிலத்தின் ஆனிரைகளைக் கொள்ளத் தலைப்படும்போது அதைக் கண்ணியெனத் தொடுத்துச் சூடுதல் மரபு.

நிரை மீட்கும் படைஞர் கரந்தைக் கொடியைக் கண்ணியெனக் கொள்ளுதல் இயல்பு.[3] நிரைகவர்தலின்றேல் நிரைமீட்டலும் இல்லை. எனவே, இவற்றை வெட்சி என்னும் பெயருடைய ஒரு திணையின் கிளை நிகழ்ச்சியெனக் கொள்வது தொல்காப்பிய நெறி.[4] நிரை மீட்கும் முயற்சியில் உயிர்நீத்தவர்க்கு நடுகல் அமைத்துச் சிறப்புச் செய்யும்போதும் கரந்தை சூட்டும் மரபு உண்டு.[5]

---

1. நறும். 22:20; 50:4; 97:12,16; சிலப். 27:43
2. " பூவும் அந்நிலத்ததாகலானும் " (தொல். பொருள். புறத். 1 நச். உரை. (சைவ. சித்தாந்தக் கழகம், சென்னை).
3. " தாரார் கரந்தை தலைமலைந்து தாம்கோடல் நேரார்கைக் கொண்ட நிரை "- ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பா மாலை, பக். 32.
4. தொல். 1006 (அனைக்குரி மரபினது கரந்தை )
5. அகம். 269:5,7-12; புறம். 261:13-15

4.5.2. வஞ்சி

வஞ்சி என்னும் பெயருடைய கொடியும் உள்ளது;[1] மரமும் உள்ளது.[2] போர்ப்பூவெனச் சூடப்பட்டது யாது என்பது ஆராய்தற்குரியது.

பகை நாட்டை நோக்கிப் படைகள் செல்லுதலும் மாற்றுரைத் தாக்குவதும் வஞ்சித்திணைக்குரிய நிகழ்ச்சிகள் ஆகும்.[2] வடநாட்டுக்குப் படையொடும் சென்ற செங்குட்டுவன் வஞ்சி மலைந்ததை இளங்கோவடிகள் பாடியுள்ளார்.[3] எல்லைகடந்து வந்தவரை எதிர்த்துத் தாக்குவதைக் காஞ்சி எனப் பகுத்துக் குறித்தல் தொல்காப்பியர்க்குப் பிற்பட்ட வழக்கம்.[4]

4.5.3. உழிஞை

மாற்றார் மதிலை வளைத்துப் போர் நிகழ்த்துதல் உழிஞைத்

---

1. 'நெடுங்கொடிப் பூவா வஞ்சி' புறம். 32:1,2
2. 'வஞ்சிக்கோட்டுறங்கு நாரை', புறம். 384:2
3. தொல். 1008
4. சிலப். 23:135; 25:149; 26:50,51,56

"வாடாவஞ்சி தலைமலைந்து" - ஐயனாரிதனார், புறப்பொருள்
5. வெண்பாமாலை, பக். 47
" மலைந்தான் வஞ்சி வல்பூவினை " " "பக்.48 பாடல் - 36
" அங்குழைய வஞ்சி " " " பக்.49

5. "வேஞ்சின மாற்றான் விடுதர வேந்தன் காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று" - புறப். பக். 73
" காஞ்சி மலைய " - புறப். பக். 74

திணைக்குரிய நிகழ்ச்சி. மதிலகத்தோர் தம்மைக் காக்கவும் பகையைத் தாக்கவும் செய்யும் முயற்சிகளையும் இத்திணைக் கூறுகக் கொள்வது தொல்காப்பிய நெறி.[1]

நொச்சி என்னும் மரம், வேலியாக வளர்க்கப்படும் தன்மைத்து.[2] வீட்டின் எல்லையாக மனையருகே நொச்சி மரம் வளர்க்கப்பட்டன.[3]

" அகத்தோன் வீழ்ந்த நொச்சியானும் "[4]

என்னும் தொல்காப்பியத் தொடர், ஊரின் மதிலைக் காக்கும் முயற்சிக்காக நொச்சிமாலை சூட விரும்பியதைக் குறிக்கும். தம் ஊரினைக் காக்கும் வீரர் நொச்சித் தெரியல் சூடியதனைப் புறநானூறும் காட்டுகின்றது.[5]

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன்மீது வந்த எழுவரை வென்றமை குறிக்கும்போது அவன் சூடிய உழிஞை

---

1. தொல். 1011-1014
2. " நொச்சிவேலித் தித்தன் உறந்தை " அகம். 122:21
3. அகம். 21:1, 23:10-12
4. தொல். 1014:5
5. புறம். 271:272

பாடப்பட்டது.[1] கரிகால் வளவன் போர்விருப்பத்துடன் பகைவர்மீது தானே சென்றமை பற்றிச் சொல்லும்போதும்,

" தூறிவர் துறுகல் போலப் போர்வேட்டு
வேறுபல் பூளையோ டுழிஞை சூடி "[2]

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறித்தார். இதனின்று, மதிலைத் தாக்கும் கருத்தை மனத்தில் எண்ணியதும் அதற்கேற்பக் கண்ணி சூடுதல் இயல்பு என்பது தெரியவரும்.

4.5.4. தும்பை

ஆற்றல் மிகுதியைக் காட்டும் நோக்கத்துடன் இருபடை எதிர்த்து நிகழ்த்துவது தும்பைப் போர்.[3] கடற்கரை மணல்வெளி நிகர்த்த பெருவெளிப் பரப்பில் நிகழ்வது தும்பைப் போர். இருசாராரும் சூடுவது தும்பை மாலையே. இருவகையினரும் ஒருவகைக் கண்ணி சூடினால் தம்மவர் யார், மாற்றார் யாரெனத் தெரிவதற்கில்லை. அத்தகு தடுமாற்றம் இல்லாதபடி தத்தம் அரசர்க்குரிய அடையாள மாலையும் போர்ப் பூவும் இணையத்

---

1. புறம். 76:4-6; 77:2,3
2. பட்டின. 234,235
3. தொல். 1016

தொடுத்தனிதல் வழக்கம் என்று தொல்காப்பியமும் சிலப்பதிகாரமும் தெரிவிக்கின்றன.[1]

4.5.5. வாகை

வாகை என்பது வெற்றியை எய்தினர் சூடும் மலர். பகையைத் தாக்கும் முயற்சியல்லாத ஆக்க வேலைகளில் பெறும் உயர்ச்சியும் தொல்காப்பியத்தில் வாகை எனப்படும்.[2]

" தூய்வீ வாகை "[3]

என்று சொல்லப்பட்ட வாகை மலரின் அமைப்பே கூட்டுறவின் உயர்வினை விளக்கிக் காட்டவல்லது. பலர்கூடி ஒன்றுபட்டு முயன்றாலன்றி எத்துறையிலும் வெற்றி மேம்பாடு அடைதல் அரிது என்பதை உணர்த்தும் வகையில் வாகை மலரின் வடிவ அமைப்பு உள்ளது. நூலிழை போன்ற தூய் வடிவங்கள் பல சேர்ந்து ஒரு காம்பில் இணைந்த நிலையே வாகை மலரின் சிற்றுறுப்பு. பட்டுக் குஞ்சம் போன்ற இவை சுற்றிச் சூழ அமைந்து, வட்டக்குடை போலும் வடிவ வனப்புடையதே வாகையின் முழு மலர். தனிச் சிற்றுறுப்புக்களை இணைத்துப்

---

1. " உறுபகை,
   வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
   போந்தை வேம்பே ஆரென வரூஉம்
   மாபெருந்தானையர் மலைந்த பூவும் " - தொல். 1006:2-5
   சிலப். 26:70,71; 26:2,9,220; 27:45,46,
   112,113.

2. தொல். 1020

3. பதிற். 43:23

பொருந்தியவாறு நடுவில் விளங்குவது தெய்வத் திருமேனிக் குடைக் காம்பு போலத் திரண்டு நீண்டதொரு காம்பு. இவை தவிர, இதழென்றும் மடலென்றும் சொல்லத் தக்க உறுப்பு ஏதும் வாகையில் இல்லை. நூலிழை நிகர்த்த தனி ஒரு துய்யினை நோக்கும்போது பூவினுக்குரிய அழகும் மதிப்பும் அமைவதில்லை. ஆயினும், அனைத்தும் கூடி ஒரு மையத்தில் ஒன்றுபடும்போது வனப்பும் சிறப்பும் விளங்கக் காணலாம். எத்துறை வெற்றிக்கும் ஒற்றுமை இன்றியமையாதது என்பதை விளக்கும் வண்ணம் அமைந்த மலர் ஒன்றினை, வெற்றி விழா நிகழ்ச்சியின் அறிகுறியாகச் சூடி மகிழ்வது என்பது சாலப் பொருந்துவதே.

4.5.6. காஞ்சி

போர் நிகழ்ச்சியும் வெற்றி மகிழ்ச்சியும் குறித்த திணைகளுக்கும் மலர்களுக்கும் உள்ள தொடர்பு, மேற்காட்டியவாறு அமைந்துள்ளது. ஆயினும், காஞ்சித்திணையின் பெயரை அத்துணை எளிதாக மலரோடு பொருத்திப் பார்க்க முடிவதில்லை. ஏனெனில், தொல்காப்பியரது காஞ்சித்திணை நிலையாமை பற்றியது.[1] "காஞ்சி சான்ற வயவர்"[2] என்னும் கபிலர் பாடலிலும், நிலையாமைக் கருத்தையே காஞ்சி என்னும் சொல் காட்டுகின்றது. ஆனால், நிலையாமைக்கு

---

1. தொல். 1024
2. பதிற். 65:4

அடையாளமாகக் கண்ணி சூடினர் என்பது யாண்டும் சொல்லப் படவில்லை.

புண்பட்ட வீரன் உயிர் ஊசலாடும் நிலையில், இரவில் கண்விழித்துக் கடமையாற்றினர் சிலர். மார்பில் புண்கொண்டவன் உடலையும் உயிரையும் தீங்கு நீக்கி ஓம்பும் முயற்சியில் ஈடுபட்ட மகளிர் காஞ்சிப் பண் பொருந்தப் பாடினர், 1 என்று புறப்பாடல் குறிப்பிடுகின்றது. இதனின்று அழிவும் அவலமும் காட்டுவது காஞ்சிப் பண் என்பது தெரியவரும். எனவே, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை ஆகியவற்றால் துன்புறும் மனித உள்ளத்தின் துயரத்தைப் புலப்படுத்தும் இயற்றமிழ்ப் பாடலுக்கும், இசைத்தமிழ்ப் பண்ணுக்கும் காஞ்சி என்னும் பெயரினை அமைத்தற்கு மலரின் பெயரே அடிப்படை - யாகிய தன்மை அறிஞர்க்கு இறும்பூது தருவதாகும்.

## 4.6.0. கதைப்பொருள் மரபு

அறிஞர் ஆக்கிய புராணச் செய்திகள் வழி வழித் தொடர்ந்து வழங்குவன. அவற்றில் தெய்வங்களுக்கும் மலர்களுக்கும் காட்டப்பட்ட

---

1. " ஐயவிசிதறி ஆம்பலூதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி " - புறம். 281:4,5

தொடர்பு இங்கே தெரிவிக்கப்படும்.

4.6.1. திருமாலின் உந்தியில் தோன்றிய தாமரையே நான்முகனின் பிறப்பிடம்.[1] எனவே, அவனைப்பூவன் எனவும் மலரோன் எனவும் குறித்தனர்.[2]

4.6.2. இளஞ்சேய் முருகன் இமயச்சுனையில் பதுமப் பாயலில் வளர்ந்தான். அவன் சேவடி தாமரையொப்பது.[3]

4.6.3. முருகனுக்குரிய அடையாளக் கண்ணி காந்தள்;[4] கார்காலத்தில் மலரும் கடம்பு அவனுக்குரிய தார்.[5]

4.6.4. சிவபெருமானுக்குக் கண்ணியும் தாரும் கார்நறுங் கொன்றை.[6]

---

1. பரி. 3:12,13; 3:91-94; திரு. 164,165
2. பரி. 1:49; 8:3; 9:4; பரி. பின்னிணைப்பு. 7:17
3. பரி. 5: 12,48,49,70; 8:12-15; திரு.253,255, குறுந். கடவுள் வாழ்த்து,1; பரி. 21:3
4. திரு. 43,44
5. பரி. 5:81; 21:10,11,50; புறம். 23:3,4; தி திரு. 10,11;
6. பதிற். கடவுள் வாழ்த்து, 1,2; கலி. 142:27,28; புறம். 1:1,2; பதிற். 31:7-9.

4.6.5. மாயோன் விரும்பும் மாலை துளவம்;[1] மாயவன் அடியும் கையும் கண்ணும் தாமரை;[2] மேனியெழில் காயாம்பூ வண்ணம்.[3]

4.6.6. ஐவகை மரங்கள் பூத்த அழகினை ஐந்து தெய்வங்களுக்கு ஒப்பாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ காட்டியுள்ளார்.[4]

4.6.7. குளத்தில் வளர்ந்த குவளைகள், பகையை ஓட்டும் வேலாக முருகன் அருளால் வந்து உதவின என்பதை நத்தத்தனார் பாட்டுக்கு நச்சினார்க்கினியர் எழுதியஉரை காட்டுகின்றது.[5]

4.6.8. தேவர்கள் சூடும் மலர்கள் வாடுவதில்லை என்பது நெடுங்காலமாக நிலவும் ஒரு நம்பிக்கை.[6] தேவர் நாட்டில் கற்பகச் சோலை உண்டென்றும் நம்பினர்.[7]

---

1. பரி. 4:58; 8:1,2; 13:29;59,60; 15:15,54

2. பரி. 1:6; 2:53; 4:60;61; 13:80,81; 15:49; 21:3;

3. பரி. 1:67; 3:73

4. " ஒருகுழை ஒருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போல் நனையூழ்த்த செருந்தியும்
மீனேற்றுக் கொடியோன்போல் மிஞிறார்க்கும் காஞ்சியும்
ஏனோன்போல் நிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்
ஆனேற்றுக் கொடியோன்போல் எதிரிய இலவமுமாங்குத்
தீதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல " - கலி. 26:1-6

5. சிறுபாண். 172,173; பத்துப்பாட்டு - மூலமும், நச்சினார்க்கினி[யர்]
உரையும்; பக். 166

6. அகம். 361:10; புறம். 62:16,17; மதுரை. 457,458

7. புறம். 38:11,12

4.6.8. வானுலகிலிருந்து நான்முகக் கடவுள் அனுப்பிய கங்கை வெள்ளத்தின் பேராற்றல் தணியும்படி அதை மலரைப் போல இறைவன் சடைமீது தாங்கிக் கொண்டதனைப் பரிபாடல் தெரிவிக்கின்றது.

" எரிமலர்த் தாமரை இறை வீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தனிவுறத்தாங்கிய தனிநிலைச் சலதாரி " 1

4.7.0. சொல்லாட்சி மரபு

பூ, மலர், அலர், முகிழ் ஆகிய சொற்களின் வழியே காலப் போக்கில், உருவக வகையால் இலக்கிய நயம் கொண்ட சொல் வழக்காற்றினைப் புலவர் உருவாக்கினர் என்பதைச் சங்கப் பாடல்களின்று அறிய முடிகின்றது.

4.7.1. பூத்தல்

பூ என்பது பெயர்ச் சொல்லாகவும் வினைப்பகுதியாகவும் விளங்கும் தன்மை பேச்சு வழக்கிலும் ஏட்டு வழக்கிலும் உள்ளது.

கண்ணிமைகளை விரியத் திறந்து நோக்கும் நிலையை உணர்த்துதற்குப் பூத்தல் என்னும் வினைச்சொல் பயன்படுகின்றது.

---

1. பரி. 9:4-6

" பெடையன்னோர் கண்பூத்து நோக்கும் வாய் " [1]

மிகுந்து பொலிவும் மலர்ச்சியைக் காட்டுதற்குப் பல பாடலில் பயிலக் காணலாம்.

" பூத்த சுற்றமொடு பொலிந்து " [2]

என்பது அறிவின் விளக்கம் சான்ற அறிஞர் சூழ அரசன் வீற்றிருக்கும் நிலையைக் காட்டுகின்றது.

பூழிக்கிடையே கிளர்ந்து தோன்றிய காளானின் விளக்கம்,

" பூழி பூத்த புழற் காளாம்பி " [3]

என்பப்பட்டது.

அழகும் பொலிவும் மிகவும் சிறந்த தன்மையைப் பூத்தலென்னும் வினையைக் கொண்டு புலவர் அழகுற உணர்த்தியதைப் பின்வரும் தொடர்களில் காணலாம்.

---

1. கலி. 102:15
2. பதிற். 90:18; மதுரை. 770
3. சிறுபாண். 134

" ஒளிபூத்த நுதலார் " 1

" தண்டளிர்த் தகைபூத்த தாதெழில் நலம் " 2

" நீங்குங்கால் நிறஞ்சாய்ந்து புணருங்கால் புகழ்பூத்து
(........ நலம்" 3

" ஐவளம் பூத்த அணிதிகழ் குன்றின்மேல்
மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்
கைவளம் பூத்த வடுவொடு காணாய்நீ
மெய்வளம் பூத்த முயக்கம்யாம் கைப்படுத்தேம்
மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி
நைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம்
பூத்தன பாணுநின் பாட்டு " 4

என்பதில் மிகுதிப் பொருண்மையும் ( 15-18, 21) பொருந்திய பொலிவும் (19, 20) உணர்த்தற்குப் பூத்த என்னும் பெயரெச்சம் பொருந்தி நின்று அழகு செய்கின்றது.

" பூநலம், பூத்தன்று வையை வரவு " 5

என்பதில் பொலிவு மிகுதி காட்டப்பட்டது.

---

1. கலி. 66:19
2. கலி. 77:8
3. கலி. 78:11
4. பரி. 18:15-21
5. பரி. 16:18,19

" பூத்தன்று பெரும நீ காத்த நாடே " [1]

என்று நாட்டின் வளமைப் பொலிவு சொல்லப்பட்டுள்ளது.

" காடுகவின் பூத்த " [2]

என்று கார்காலக் காட்டின் பொலிவு தெரிவிக்கப்பட்டுள்ளது.

" நிலம்பூத்த மரமிசை நிமிர்பூஆலும் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ் செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலும் உள்ளார்கொல் " [3]

என்னும் அடிகளில் பொலிவும் விளக்கமும் பொருந்திய பெயரெச்ச வினையெச்ச வடிவங்களைக் காணமுடிகின்றது.

" பூத்த புகையும் அவியும் " [4]

என்பதில் சிறப்புப் பொருண்மை விளங்குகின்றது.

" மீனாரம் பூத்த வியன்கங்கை " [5]

---

1. பதிற். 13:28
2. நற். 302:3
3. கலி. 27:13-16
4. பரி. 16:53
5. பரி. 16:36

என்பதில் ஒளிவிளக்கத்தின் மிகுதி குறிக்கப்பட்டுள்ளது.

" தகைபூத்த வையை " [1]

என்னும் தொடர், புதுவெள்ளப் பெருக்கின் பொலிவும் நிறைவும் காட்டுவது.

" வெந்தாறு பொன்னின் அந்திபூப்ப " [2]

என்பதில் செவ்வானத்தின் அழகு விளக்கம் தெரிவிக்கப்பட்டுள்ளது. நிலத்திற்குப் பொலிவு தரும் விளைவு மாட்சி,

" மண்பயம் பூப்ப " [3]

என்று சொல்லப்பட்டது.

" பூத்த என் கடும்பே " [4]

என்பதில் பிள்ளைகளின் எண்ணிக்கை மிகுதி காட்டப்பட்டுள்ளது. விண்மீன்களின் விளக்கம், ' பூத்த ' என்ற சொல்லால் குறிக்கப்படும் அழகினைப் பல பாடலில் காணலாம்.

---

1. கலி. 67:3
2. அகம். 71:6
3. அகம். 175:17
4. புறம். 380:6

" மீன்பூத் தவிர் வரும் அந்திவான் விசும்பு " [1]

" வானம்மீன்பல பூப்பின் " [2]

" விசும்பின், மீன்பூத்தன்ன உருவப் பன்னிரை " [3]

" விசும்பின், மீன்பூத்தன்ன உருவ ஞாயில் " [4]

" மீன்பூத் தன்ன தோன்றலர் " [5]

என்று தேவர் கூட்டத்தின் ஒளி விளக்கத்தை நக்கீரர் காட்டியுள்ளார்.

" மீன் பூத்தன்ன விளங்குமணிப் பாண்டில் " [6]

என்று ஒளி மணிகளின் விளக்கப் பொலிவினைப் பெருங்குன்றூர் கிழார் உணர்த்தியுள்ளார்.

" புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே " [7]

என்னுமிடத்து வெற்றி மேம்பாட்டின் பொலிவு குறிக்கப்பட்டுள்ளது.

---

1. கலி. 103:13
2. புறம். 129:7
3. புறம். 399:30,31
4. புறம். 21:3,4;
5. திரு. 169
6. பதிற். 90:35
7. புறம். 21:13

" நயந்து நோக்கும்வாய் பொன்பூப்ப " [1]

" நயந்தோரி தேளம் நன்பொன் பூப்ப " [2]

என்னும் அடிகளில் நாட்டின் வளமை விளக்கம் உணர்த்தப்பட்டுள்ளது.

4.7.2. பெயரடை வடிவத்தில் ' பூ '

பூக்கள் அழகும் விளக்கமும் பொலிவும் உடைய பொருட்கள். எனவே, இப்பண்புகளை உணர்த்தும் ஆற்றல் பூ என்னும் பெயரடைக்கு அமைகின்றது.

பொலிவு பெற்ற புள்ளிகளையுடைய யானையின் நெற்றி ' பூ நுதல் ' எனப்பட்டது. [3] ' பூம்பொறி ' [4] என்று யானை நெற்றியின் புகர் சொல்லப்பட்டுள்ளது. [5]

புலித்தோலின் புள்ளியழகு ' பூம்பொறி உழுவை ' என்று குறிக்கப்பட்டுள்ளது. [6] நாகப்பாம்பின் படத்திலுள்ள புள்ளியழகும்

---

1. புறம். 38:6
2. பெரும். 424
3. நற். 36:2; 233:4; கலி. 138:14; அகம்.268:2; புறம். 12:2; 165:6.
4. நற். 317:2; கலி. 46:6; புறம். 13:2; 387:7;
5. நற். 104:1;

'பூம்பொறி' என்பப்பட்டது.[1] பொலிவுடைய தோள் 'பூந்தோள்' எனப்பட்டது.[2] ஆடவர் அணியும் கழலின் அழகினைப் 'பூம்பொறிக் கழல்' என்று புகழ்ந்துள்ளார்.[3] குதிரைக்கு அணியப்படுவன 'பூம்பொறிப் பல்படை' எனப்பட்டன.[4]

தொடி, குழை என்பற்றின் கைவினை நுட்பம் 'பூந்தொடி'[5] எனவும், 'பூங்குழை'[6] எனவும் சொல்லப்பட்டுள்ளன.

" மென்பூஞ்சேக்கை "[7]

" புனைபூஞ்சேக்கை "[8]

என்று கட்டிலின் பொலிவும்,

" பூந்தலைச் சிறுகோல் "[9]

என்று பிரப்பங்கோலின் அழகும்,

---

1. நற். 95:2
2. நற். 265:4
3. அகம். 81:9
4. அகம். 400:11
5. குறுந். 256:5; மதுரை. 446; குறிஞ்சி. 224
6. பதிற். 86:11; பொருந. 30; நெடு. 38; பூங்குழை: கலி. 65:6
7. அகம். 93:13; புறம். 50:7
8. அகம். 167:3
9. நற். 110:3

"பூம்புற நல்லடை" [1]

என்று முளைத்த தானியத்தின் பொலிவும் தெரிவிக்கப்பட்டுள்ளன.

"பூவாட் கோவலர்" [2]

என்னும் தொடரில் வாளுக்கு உயர்வு தரும் கூர்மைச் சிறப்பினை பூ என்பது உணர்த்துகின்றது. அன்றியும், கோவலரது வாள் குருதி சிந்தா இயல்பினது என்னும் மென்மைச் சிறப்பினைப் 'பூ' என்னும் அடைமொழி உணர்த்துவது என்று கொள்ளவும் பொருந்தும்.

"பூங்கரும்பு" [3]
"புரிபுனை பூங்கயிற்றின் பைபய வாங்கி" [4]
"பூங்கண் வணர்ந்தொலி ஐம்பால்" [5]
"புணரி பொருத பூமணல் அடைகரை" [6]
"பூங்கண் இருங்குயில்" [7]

---

1. பெரும். 278
2. புறம். 224:15
3. புறம். 24:13
4. கலி. 80:7
5. கலி. 140:22,23
6. நற். 11:6; "அலைகடற்கரையில் பரந்துகிடக்கும் மணற்றுகள் வெண்மை நிறமும் மென்மைப் பண்பும் உடைமைபற்றிப் 'பூமணல்' எனப்பட்டது' என்றார் ஔவை சு. துரைசாமி அவர்கள், நற்றிணை, பக். 57, (அருணா பதிப்பகம், சென்னை).
7. நற். 243:4

என்னும் அடிகளிலும் பூ என்பது பண்பு குறித்த அடைமொழியாய் அமைந்து முறையே கரும்பு, கயிறு, கூந்தல், மணல் என்னும் பொருட்களின் உயர்வினைச் சிறப்பிக்கின்றன.

துணிக்குப் பூக்களின் வடிவமும் வண்ணமும் அமையும் படி செய்வித்த கைத்தொழில் நுட்பத்தைப் பல பாடல்களில் காணமுடிகின்றது.

" பூகாப்புகர் கொண்ட பூண்பூங் கலிங்கம் " [1]

" பூந்துகில் " [2]

" சில்பூங் கலிங்கத்தள் " [3]

" பூங்கரை நீலம் " [4]

" ஒண்பூங் கலிங்கம் " [5]

" நீலக்கச்சைப் பூ வார் ஆடை " [6]

" பாம்புரித்தன்ன வான்பூங் கலிங்கம் " [7]

" பூவிரி கச்சைப் புகழோன் " [8]

" பூக்கனிந்து,
அரவுரியன்ன அறுவை " [9]

---

1. நற். 90:4
2. பதிற். 54:5; கலி. 85:5; அகம். 387:7; நெடு.145
3. கலி. 56:11
4. கலி. 111:3; 115:14
5. புறம். 383:11; மதுரை. 483
6. புறம். 274:1
7. புறம். 397
8. சிறுபாண். 239
9. பொருந. 82,83

பூவும் போதும் கொடிகளும் மரத்திலும் சுவரிலும் ஏனைப் பொருட்களிலும் வண்ணமும் வடிவமும் விளங்கும்படி கைவினை நுட்பத்தால் அமைக்கப்பட்ட தன்மையையும் அறிய முடிகின்றது.

" போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்து " [1]
" உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ " [2]
" பூங்கேழ்த் தட்டம் " [3]
" முல்லைப் பல்போது உறழ்ப்பூ நிரைத்து " [4]

என்று அரச மாளிகையில் அமைந்த தொழில் நுட்பங்களை நக்கீரனார் தெரிவித்துள்ளார்.

" பூநுத லீத்த " [5]

என்னும் தொடரில், பூ நுதல் என்பது அன்மொழித் தொகையாகப் பொலிந்த நுதல் கொண்ட தலைவியை உணர்த்துகின்றது.

---

1. நெடு. 83
2. நெடு. 112, 113
3. நெடு. 126
4. நெடு. 130
5. கலி. 138:14

பொலிவும் விளக்கமும் சிறப்பும் பெண்மைக்கு ஏற்படுத்தும் உடல்நிலை வளர்ச்சியையும் ' பூப்பு ' என்றே தமிழ் முன்னோர் குறித்துள்ளனர்.[1] வண்ணங்கலந்த நீரைத் தெளித்து விளையாடும் புனலாட்டு மகளிர் தம்முள் ஒரு தோழியைப் பற்றி ( நகைக்குறிப்பொடு ) ' பூத்தனள் ' என்று சொல்லி அவளை அணுக வந்த தலைவனை விலக்கலாயினர் என்று பரிபாடல் தெரிவிக்ின்றது.[2]

4.7.3. இதழ்

பூவின் இதழ் போன்று அமைப்பும் வனப்பும் உடைய சிறப்பினால் வாயிதழும், இமையும் இதழ் என்று குறிக்கப்படுதலைக் காணமுடிகின்றது.

" இதழ் சோர்பு பனி மல்க "[3]
" நீரிதழ் புலராக் கண் "[4]
" ... நகை சேர்ந்த இதழினை " ( வாயிதழ் )[5]
" இமைப்பின் இதழ் மறைபாங்கே கெடுதி "[6]

---

1. தொல். 1133:1
2. பரி. 16:24,30
3. கலி. 3:3
4. கலி. 70:16
5. கலி. 72:12
6. கலி. 87:6

" இறந்த கலியான் இதழ் மறைந்த கண்ணள் " [1]

" மயங்கிதழ் மழைக்கண் " [2]

" நிரையிதழ் பொருந்தாக்கண் " [3]

4.7.4. முகிழ்

முகிழ் என்னும் சொல் பெயராகவும் வினையாகவும் பாடல்களில் அழகுற அமைதலைக் காணமுடிகின்றது.

" முருந்தேர் வெண்பல் முகிழ்நகை சிறந்தே " [4]

" முகிழ்முலை " [5]

" முகிழ் நிலா " [6]

" முகிழ்த்து வரல் இளமுலை " [7]

கூப்பிய கையின் தோற்றம் முகிழினை நினைவுறுத்துவது என்பதை,

---

1. கலி. 92:48
2. நற். 5:9
3. குறுந். 353:4
4. நற். 179:10
5. அகம். 289:10
6. அகம். 54:17
7. அகம். 242:16

" முதுவோர்க்கு முகிழ்த்த கையினை " [1]

என்று நத்தத்தனார் காட்டியுள்ளார்.

## 4.7.5. அவிழ்தல்

முகை அவிழ்ந்து மணம் கமழ்வது இயற்கை. நெஞ்சத்து நெகிழ்ச்சியினால் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையை உருவக அழகு தவழ,

" நெஞ்சு வாயவிழ்ந்தனர் காதலர் " [2]

என்றார் சங்கப் புலவர்.

## 4.7.6. மலர்தல்

மலர்தல் என்பது முகை நெகிழ்தலை யுணர்த்தும் தொழிற்பெயர். மலர் என்னும் வினையடியாக அமைந்த எச்சவினை முற்றுவினை வடிவங்களும் தொகைச் சொற்களும் தமிழில் பல உள.

---

1. சிறுபாண். 231
2. அகம். 129:17
3. ~~பதிற். 52:12~~

" இரைஇய மலர்பூ அறியா " [1]

என்புழிக் கைகள் விரிந்து பிறர் தருவதை ஏற்குந்நிலை மலர்பு எனப்பட்டது.

" மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே " [2]

என்னுமிடத்துப் பகைவரைப் பணியாத தறுகண்மை மார்பின் தோற்றத்தைக் கொண்டு தெரிவிக்கப்பட்டுள்ளது. [3]

அகன்று பரந்த மார்பின் தோற்றம் ' மலர் மார்பு ' [4] என்று குறிக்கப்படும் வினைத்தொகை அமைப்பும், ' மலர்ந்த மார்பு ' [5] என்னும் பெயரெச்சத் தொடரமைப்பும் பயிலக் காணலாம். பெருந்தகை மார்பின் அழகினைக் காட்டும் சிறந்த தொடர்களில்,

" மலர்ந்தேந்தகலம் " [6] என்பது ஒன்று.

---

1. பதிற். 52:12
2. பதிற். 63:5; ' ஒப்பு நோக்குக '.
   ' இளையோர்க்கு மலர்ந்த மார்பினை ' - சிறுபாண். 232
3. மலர்ப்பு - பலர் காணும் மன்றத்தில் திறந்த மார்புடன் - மேலாடை நீக்கிய நிலையில் - அமைதல் அடிமை ஆயினர்க்குரியது. (பார்க்க: பாரதியார் கவிதைகள், பாஞ்சாலி சபதம், பாடல். 290, 291).
4. பதிற். 20:20; கலி. 73:13; 142:17; புறம். 7:5
5. நற். 294:9; ஐங். 51:4; பதிற். 61:8; அகம். 28:14 அகம். 192:15; 314:22; புறம். 157:6.
6. குறிஞ்சி. 121.

இடமகன்ற வையகம் ' மலர்தலை யுலகம் '[1] எனவும், ' மலர்ந்த ஞாலம் '[2] எனவும் குறிக்கப்பட்டுள்ளது.

" மலர் ஞாலம் "[3]

" மலர்ந்த வள்ளியங்கானம் "[4]

" மலர்தலை விளைவயல் "[5]

" மலர்ந்த பொய்கை "[6]

" மலர்தலை மன்றம் "[7]

என்னும் தொடர்களில் இடம் அகன்ற தன்மை உணர்த்தப்பட்டுள்ளது.

இருமருங்கும் பரந்தபட்ட கொம்புடைய எருமை ' மலர்தலைக் காரான் ' எனப்பட்டது.[8]

---

1. அகம். 374:2; புறம். 24:34; 132:9; 186:2; 213:3; பெரும். 32; 410; மதுரை. 199,237.
2. அகம். 4:5
3. கலி. 34:1;
4. ஐங். 250:3
5. பதிற். 73:4
6. நற். 115:1; ஐங். 6:4
7. பட்டின். 69
8. நற். 391:4

அகலத்திறந்த வாயிலை ' மலரத்திறந்த வாயில் ' என்கிறார் கபிலர்.[1]

இல்லையென்று சைகை செய்யும் கையின் விரல்கள் விரிந்து மலர்ந்த நிலையினை,

" இலமென மலர்ந்த கையர் " [2]

என்கிறார், பெருங்கௌசிகனார்.

உணவினைக் கொள்ளும் கலமாகிய ' மண்டை உணவு ஏற்கும்படி வைத்துள்ள தன்மையை மலர்த்தல் என்று புலவர் குறித்துள்ளனர். கவிழ்த்தலின் எதிர்ச் சொல்லாக இவ்வழக்காறு புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

" கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார் " [3]
" மண்டை .... நோக்கின மலர்ந்தே " [4]
" மண்டை மலர்ப்போர் யார் " [5]

---

1. குறிஞ்சி. 203
2. மலை. 552
3. புறம். 103:3
4. புறம். 155:8
5. புறம். 179:2,3

அகன்று பரந்து பொலிந்து தோன்றும் தன்மையையும் மலர்தலென்று சொல்லுதல் உண்டு.

" நிலமலர் வையத்து " [1]

4.7.7. அலர்தல்

செழுமை வாய்ந்த உறுப்பு வளர்ச்சியினை அலர்ந்த என்றும் மலர்ந்த என்றும் குறிப்பிடுதல் இயல்பு.

" மலர்ந்த முலையள் " [2]

" அலர் முலை " [3]

" அலர்முலையாகம் " [4]

" அலர்ந்த முலையள் " [5]

உயிர் வாழ்க்கைக்கு ஏற்றவாறு பரந்து பண்பட்டு அமைந்த வையகம்,

" அலர்ந்த விரிநீர் உடுக்கை " [6] எனப்பட்டது.

---

1. புறம். 225:4
2. புறம். 352:14
3. கலி. 60:15; 77:4; அகம். 233:2; பெரும். 230;
4. கலி. 114:6,19; அகம். 69:20; 75:12; 97:14; அகம். 206:9; நெடு. 136.
5. கலி. 81:7
6. கலி. 114:18,19

" விரிந்த விடியல் "

இருட்டு நெகிழ்ந்து ஒளி மெல்லப் பரவும் வைகறைப் பொழுதினை

" நள்ளிருள் அலரி விரிந்த விடியல் " [1]

என்று உருவக அழகு தோன்றச் சொன்னார் பெருங்கௌசிகனார்.

### 4.7.8. அம்பலும் அலரும்

அரும்பு சிறிதே முகிழ்த்த தன்மையது. அரும்பு + அல்: அரும்பல் என்பது மருவி அம்பல் ஆயிற்று. இது, களவுத் தொடர்பு பற்றிய பேச்சு மகளிர் வாயிலில் ஓரளவு முகிழ்த்ததனை உணர்த்தும் உவமையாகு பெயராக நிலைபெற்று வழங்கியது. [2]

---

1. மலை. 196
2. நற். 36:6, 73:11, 143:7, 149:3, 223:9, 249:10, 272:9, 285:10, குறுந். 139:5, 175:7, ஐங். 9:6, 279:5, கலி. 39:47, 60:28, அகம். 70:6, 100:15, 115:3, 203:3, 218:19, 249:2, 273:13, 282:13, 347:7.

அலர் என்பது நன்கு விரிந்த நிலை. களவொழுக்கம் பற்றிப் பலரும் அறியப் பரந்துபடும் பேச்சு, உவமையாகு பெயராக, அலர் என்று சொல்லப்பட்டது.[1] அலர் என்பது வினைப்பகுதி நிலையில் அமைந்து,

" அலர்வது "[2]

" அலர்க "[3]

---

1. நற். 4:5; 14:6; 36:6; 116:12; 143:7; 149:10 197:7; 223:5; 227:1; 249:10; 263:3, 272:8, 378:6; குறு. 258:2; 302:6; 311:1; 320:8;
குறு. 372:8; 393:2; ஐங். 72:3; 75:2; 77:2; 132:3; குறு. 164:4; 236:1; 279:5; 369:3; 372:3; கலி. 19:4; 27:13; 78:17; 105:65;
124:5,9,13; கலி. 132:23; 143:48; அகம். 36:12; 45:8; 70:6; 90:4; 96:18; 98:25; 110:1, 116:12; 190:4; 201:10; 203:3; 209:2;
211:17; 216:6; 218:18; 220:1; 253:3; 278:16; 281:13; 282:11,12; 296:14; 303:7; 320:7; 323:1; 347:7; 368:19;
383:2; 400:2.

2. நற். 72:9; 339:2

3. நற். 15:10.

" அலர்ந்தன்று " [1]

" அலரின் அலர்கென " [2]

என்னும் வினைவடிவங்கள் வளர இடந்தந்தது.

4.7.9. முடிப்புரை

இதுகாறும் காட்டியவற்றால், மக்கள் வாழ்க்கையிலும், வாழ்க்கையை உரைக்கும் இலக்கியத்திலும், மலர்களைச் சார்ந்து ஏற்பட்ட திணைமரபும் கதை மரபும், சொற்பொருள் மரபும் ஒருவாறு அறியப்படும்.

***

---

1. குறுந். 194:4; அகம். 325:4
2. கலி. 60:28

5. மலர்கள் உவமைகளாதல்

5.0. அகப்பாட்டில் கருப்பொருளாக விளங்கி இலக்கியச் செய்திகளாக அமைதலோடு ஏனைய செய்திகளுக்கு முருகியல் உணர்வும் தெளிவும் ஏற்படுத்த மலர்கள் மிகுதியாக எடுத்தாளப்பட்டுள்ளன. இவற்றோடு ஏனைய பொருள்களை உவமைப்படுத்திக் கவியின்பத்தை உண்டாக்கியுள்ளனர் புலவர் பெருமக்கள். சங்க இலக்கியத்தில் மலர்கள் உவமையாதல் மிகுதி என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

5.1.0. உவமையணி

" ஒப்புமை தோன்றச் செப்புவதுவமை " [1]

---

1. தண்டி. 31:3.

என்று தண்டியாசிரியர் உவமையணியின் தன்மையை விளக்குகின்றார். தம்முடைய மனக்கண் காணும் காட்சியைச் சொற்களால் பாட்டில் வடித்துக் காட்டும் ஆற்றல் உடையவர்கள் புலவர் பெருமக்கள். கட்புல நுட்பமும் கருத்தாழமும் உடையவரே உவமைக் காட்சியினைப் படைத்துத் தருதல் இயலும். பண்டைத் தமிழ்ப் புலவர்களின் அக விழிகள் ஆழ்ந்து அகன்றும் பரந்து உயர்ந்தும் நுணுகி நோக்கும் தன்மை உடையவை. ஆகவே, சங்க இலக்கிய உவமைகளில் அருகில் வைத்துப் பார்க்கும் அழகுக் காட்சி சில; நெருங்கி நின்றறியும் முகர்வுப்புல மாட்சி சில; பண்பும் பயனும் சீர்தூக்கிப் பார்க்கும் அறிவுக்காட்சி சில; வானில் பறக்கும் பறவை வையகத்தை நோக்கிப் பார்த்தால் தெரிவது அனைய காட்சி சில; சோலையின் செறிவினுள் நிழலுக்கும் ஒளிக்கும் இடையே தெரியும் தடுமாறு தோற்றம் சில. மலர்களின் தோற்றத்தை ஒத்து அமைந்த மற்றைய காட்சிகளின் நிலையை அகர வரிசை முறையில் தருவது பொருத்தமுடையது.

### 5.1.1. ஆம்பல்

மாந்தர் வாயிதழ் அங்காந்து குவிந்த தன்மைக்கு நெகிழும் ஆம்பல் மலர் உவமையென்று காட்டப்பட்டுள்ளது.[1] ஆம்பல்

---

1. பரி. 8:116; 10:77; 19:75.

முகையின் தோற்றம் கொக்கின் அலகு ஒப்பது.[1] மலர் உவமையென்று காட்டப்பட்டுள்ளது. ஆம்பல் மலரின் தண்மையும் நறுமணமும் போல்வது மாதரார்மேனி என்று தெரிவித்துள்ளார் சங்கப்புலவர்.[2] தலைவியின் வாய்மணம் ஆம்பல் மணம் ஒப்பது என்கிறார் சிறைக்குடி ஆந்தையார்.[3]

5.1.2. இலவம்

இலவமரத்தின் சிவந்த மலரிதழ் நாவினுக்கும் இதழுக்கும் உவமையென்று காட்டப்பட்டுள்ளது.[4]

5.1.3. கடம்பு

கடம்பு மலர்ந்த தோற்றம் மலர்களால் தொடுத்த கோதையைப் போலக் காணப்படும் என்கிறார் நத்தத்தனார்.[5]

---

1. நற். 100:2,3; 280:1,2; குறுந். 117:1
2. நற். 230:3,4; குறுந். 84:5
3. குறுந். 300:2
4. " இலமலரன்ன அஞ்செந்நா " - அகம். 142:1
   " இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய் " - பொருந.27
5. " துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை " - சிறுபாண்.69
   " கோதைபோலப் பூத்தலின் கோதை யென்றார் "- பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக். 156, (உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை),1956, ஐந்தாம் பதிப்பு.

5.1.4. கணவிரி

ஆறலைகள்வரால் உயிர் இழந்தோர் குருதியுடன் குடல் வெளிவந்த நிலையில் சாய்ந்த தோற்றம், செவ்வலரி (கணவிரி) மாலையிட்டாற்போல்வது.[1]

ஏறுதழுவும் நிகழ்ச்சியில் குடல்சரியச் சாய்ந்து விழுந்தவனது குடலைப் பருந்து பறித்துக் கவ்விச் செல்லும்போது அதன் வாயினின்று நழுவி மரக்கிளையிடை விழுந்து செவ்வலரி மாலையைப் போன்று தொங்கியது என்கிறார் நல்லுருத்திரனார்.[2]

5.1.5. கமுகு

சிறிய புள்ளியாக அரும்பிய கமுகின் சினைகள் அடுக்கி அமைந்த தோற்றம் யாழ்ப் பத்தரில் அமைந்த சிறுதுளை வரிசைக்கு உவமையென்று காட்டப்பட்டுள்ளது.[3]

---

1. அகம். 31:9,10
2. கலி. 106:26-29
3. பெரும். 7,8

5.1.6. கரும்பு

கரும்பின் மலர்களும் வேழத்தின் மலர்களும் தோற்றத்தால் ஒத்தவை என்கிறார் ஓரம்போகியார்.[1] கரும்புகளின் பூத்தொகுதி விரிந்து காற்றில் அசையும் தன்மை மாளிகையின் மேல் அசையும் துகிற்கொடி நிகர்க்கும் என்கிறார் உருத்திரங்கண்ணனார்.[2]

5.1.7. கவிர்

கவிர் எனப்படும் செம்முருக்க இதழை நிகர்ப்பது மகளிர் வாயிதழ் என்று சங்கப்பாடல் குறிக்கின்றது.[3] நாரையின் தூவி வெண்ணிறக் கவிரிதழை ஒத்தது என்று சொல்லப்பட்டுள்ளது.[4]

5.1.8. காஞ்சி

காஞ்சி மரத்தின் பூங்கொத்து தொடுத்த கோதையின்

---

1. ஐங். 12:1; 18:1,2
2. பட்டின: 162,168
3. அகம். 3:15
4. குறுந். 103:2,3

அழகினையுடையது என்பதைப் புலவர் காட்டியுள்ளனர்.[1] காஞ்சி மலர்கள் ஒருவாற்றான் பயற்றின் பூங்கொத்தைப் போலத் தோற்றும் என்பதும் குறுந்தொகையுள் காட்டப்பட்டது.[2]

5.1.9. காந்தள்

செங்காந்தளின் விரிந்த மலர் பிரிந்த விரல்களைப் போல்வது.[3] பிரியாமல் சேர்ந்த விரல்கள் காந்தள் முகை ஒப்பன.[4] மலருடன்கூடிய காந்தளின் துடுப்பு முன்கை போல்வது.[5] காதலன் கண்களைப் பின்னின்று மூடி மறைக்கும் காதலியின் கைகள் காந்தளின் குலை போல்வன.[6] குவிய கைகள் முகையுடன் செறிந்த துடுப்பினை நிகர்க்கும்.[7] காந்தளைப் போல மகளிர்

---

1. "கோதை இணர குறுங்கால் காஞ்சி " - அகம். 296:1
"நறும்பூங்கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்கால் காஞ்சி " - சிறுபாண். 178,179.
2. " பயறுபோல் இணர பைந்தாது படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பு மென்சினைக் காஞ்சி "-குறுந்.10:2-
3. குறுந். 167:1; பரி.19:76; 20:98; பொருந.33; முல்லை.95.
4. நற். 379:9,13; புறம். 144:8,9.
5. கலி. 59:3,4
6. ஐங். 293:1,2
7. கலி. 40:11,12; பட்டின. 152,153.

மேனி கமழ்ந்தது என்றும் புலவர் சொல்லியுள்ளார்.[1]

### 5.1.10. குவளை

குவளைமலர் மகளிர் கண்ணுக்கு உவமையாக முப்பது இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

" குவளையங்கண் "[2] எனவும்,

" குவளையுண்கண் "[3] எனவும்,

சுருங்க உரைத்துள்ளனர். பிறவகையான் விரிவுற உரைத்த இடங்களும் உள.[4] கருங்குவளையை நீலம் என்றும் சொல்லுதல் உண்டு. நீலம் கண்ணுக்கு உவமையாகப் பதிறு இடங்களில் காட்டப்பட்டுள்ளது.[5]

---

1. குறுந். 259:2,3; ஐங்.254:2,3; 259:5; பதிற்.21:32-
அகம். 4:10-12; 198:5, 208:27,28; 338:7,
152:14-18.

2. குறுந். 13:5

3. நற். 77:3; 205:6; 271:8; குறுந். 167:3; 339:6;
ஐங். 72:3; அகம். 129:16; 138:2, 183:1; 285:1
310:5; புறம். 348:6.

4. நற். 6:3; 37:4,5; 160:4; 317:9,10; 391:8-10
குறுந். 13:5; 291:5-8, ஐங்.277:5, 299:2,4;
500:1-3; அகம்.11:10,11; 27:12-14; 62:4,5;
179:12; 228:4, 358:5; 381:19-21.

5. நற்.161:2;273:8; 357:8; 379:6-9; ஐங்.234:10,
கலி.7:11,12; 14:2; 48:15,57:9; 64:20,21;
83:11-13; 96:5; கலி. 143:50,51; அகம்.149:17-
357:14-16; புறம். 111:3.

நெய்தல் என்னும் பெயருடன் கரிய சுனைமலரைக் கண்ணுக்கு உவமையாகக் காட்டிய இடங்கள் இருபத்திரண்டு.[1]

குவளைபோலக் கமழ்கிறது கூந்தல் என்றும் காட்டியுள்ளனர்.[2]

## 5.1.11. குறிஞ்சி

குறிஞ்சியின் புதுமலரைப்போல்வது பெண்ணின் மேனிப் பொலிவு என்று குறிக்கப்பட்டுள்ளது.[3]

## 5.1.12. கூதளம்

கூதள மலர்களைத் தொடுத்துச் செய்யப்பட்ட பெரிய மாலை வானில் எழுந்து செல்வதை நிகர்ப்ப, வெண்குருகுக் கூட்டம் வளைந்து வானில் பறந்தது என்று சங்கப் புலவர் சொல்லியுள்ளார்.[4]

---

1. நற். 8:8; 27:10,11; 295:7-9; 283:2; குறுந்.9:4-6; ஐங். 135:2; 151:2; 181:1; 188:3,4; பதிற்.51:17; பரி. 7:62; கலி. 39:44; 142:23; அகம்.10:5; 83:12-14; 130:12-14; 150:8; 170:4; 230:2; 290:14,16; புறம். 144:4;

2. நற். 262:7; 103:8-10; குறுந். 300:1; 270:6-8; ஐங். 325:2,3.

3. நற். 301:1,2.

4. " விசும்பு விசைத்தெழுந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ " - அகம். 273:1,

5.1.13. கொன்றை

பொன்னாற் செய்த அணிகலம் பலவற்றை உடைய மகளிர் மேனியில் படிந்த மெல்லிய மேலாடையில் தோற்றம் பூத்த கொன்றையின் மீது மஞ்சு தவழ்வதை நிகர்ப்பது என்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.[1]

5.1.14. கோங்கம்

கோங்கின் முகையை ஒப்பது மகளிர் கொங்கை என்பதைப் பாடல்கள் பல குறிப்பிடுகின்றன.[2]

5.1.15. கோடல்

நெகிழ்ந்து விரியும் கோடல் மலர்போலக் கையில் அணியப்பட்ட சங்குவளை கழன்று வருவதைப் புலவர் குறிப்பிட்டுள்ளனர்.[3]

5.1.16. செங்கழுநீர்

சிவந்த கண்களைப் பற்றிச் சொல்லுமிடத்துச் செங்கழுநீர் மலரிதழ் ஒப்பது என்பர்.[4]

---

1. பெரும். 327-329
2. குறுந். 254:2,3; கலி. 56:23,24; 117:2-4; அகம். 240:11; புறம். 336:9,10; திரு. 34,35.
3. கலி. 7:15,16; 48:11; 121:13,14.
4. அகம். 269:23-25.

### 5.1.17. தாமரை

தாமரையிதழை மாவிடர் கண்ணுக்கு உவமை காட்டுவது சங்க இலக்கியத்தில் அருகிய வழக்கு.[1]

இளஞ்சேய் முகம் மலர்கின்ற தாமரைப் பெரும்போது நிகர்ப்பது என்கிறார் மாங்குடி மருதனார்.[2]

செந்தாமரையின் இதழ் குழந்தையின் உள்ளங்கை நிகர்ப்பது.[3] மாதரார் அங்கை ஒப்பது.[4] பெண்ணின் பாதம் போல்வது.[5] தாமரைப் பெருமுகை கொங்கைக்கு உவமை காட்டப்பட்டுள்ளது.[6]

பனி நாட்களில் பெண்மேனிக்குரிய சிறுவெம்மை கூம்பிய தாமரையின் உள்ளகம் பொதிந்த வெம்மையை ஒப்பது என்கிறார் படுமரத்து மோசி கொற்றனார்.[7]

---

1. பரி. 8:113; கலி. 39:2.
2. மதுரை. 461-464
3. அகம். 16:1-3;
4. பரி. 8:115
5. பரி. 8:114; கலி. 13:11
6. பரி. 8:115; கலி. 22:15,16.
7. குறுந். 376:3-6.

தாமரைப் புறவிதழை ஒப்பது முயற்செவி என்கிறார் உருத்திரங்கண்ணனார். 1 பெரிய நகரங்களின் அமைப்பினைத் தாமரைப் பூவினுக்கு ஒப்பாகக் காட்டியுள்ளனர் புலவர். தெருக்கள் இதழ்வரிசை போல்வன. நடுப்பொகுட்டு ஒப்பது அரசமாளிகை; விருந்தோம்பும் பண்புடைய மக்கள் பூந்தாது போல்வர். தும்பிகளைப் போல அங்கு வருவார் இன்புற்றுச் செல்வார் என்னும் ஒப்புமைக் காட்சியைப் பரிபாடலிலும் பெரும்பாணாற்றுப்படையிலும் காணமுடிகின்றது. 2

குடிப்பிறப்பினால் மேம்பட்ட வேந்தர் மரபினரைச் சொல்லு-மிடத்து, தாமரை மலர்களின் வரிசையை ஒப்பர் என்று புறநானூறு காட்டுகின்றது. 3

## 5.1.18. நறவு

நறவம்பூ இதழினை ஒத்தவை விரல்கள் என்று சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. 4

---

1. பெரும். 114,115
2. பரி.திரட்டு. 1:1-6; பெரும்.402-405
3. " சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
   நூற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன
   வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
   வீற்றிருந்தோர் " - புறம். 27:1-4
4. " நறுஅ அவிழ்ந்தன்ன என் மெல்விரற்போது " - கலி.54:9
   " நறவிதழ் கண்டன்ன செவ்விரற்கு " - கலி. 84:22

## 5.1.19. நெருஞ்சி

நெருஞ்சிப்பூ ஞாயிற்றை நோக்கி மலரும் தன்மையுடையது என்னும் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு அகப்பாட்டாலும் புறப்பாட்டாலும் அழகிய உவமைகளைப் புலவர் அமைத்துள்ளனர்.

நெருஞ்சிப்பூ வானத்துச் சுடரையே நோக்குவதுபோல மனைவி உள்ளம் கணவனையே எதிர்நோக்கியுள்ளது. [1]

ஞாயிற்றினை நோக்கி நெருஞ்சி மலர் நெகிழ்ந்து சாய்வது போலத் தன்னை அடிப்படையாகக் கொண்டு தலைவனின் செயல்கள் அமையும்படி செய்வதாகப் பரத்தை வஞ்சினம் மொழிந்தாள். [2]

பாடிச்செல்லும் பரிசிலரது கவிழ்ந்த மண்டை, கொண்கானங்கிழான் மார்பு நோக்கி மலர்ந்து அமையும் தன்மையை ஞாயிற்றைப் பார்த்து நெருஞ்சி மலர் நிமிர்ந்ததனை நிகர்த்தது என்று புறநானூறு காட்டுகின்றது. [3]

---

1. குறுந். 315:3,4
2. அகம். 336:17-19
3. புறம். 155:4-8

நெருஞ்சியின் அழகிய மலர்கள் காட்சிக்கு இனியவை. அந்த மலர்களின் வழிவந்த காய்களோ முட்களைக் கொண்டவை. முதலில் இனிமையும் பின்பு துன்பமும் தரும் நெருஞ்சியின் தன்மையைக் காட்டித் தன் வாழ்க்கைத் தன்மையை ஒரு தலைவி விளக்குகின்றாள்.[1]

5.1.20. நொச்சி

நொச்சியின் பெரிய கரிய அரும்பு நண்டின் கண்ணினை ஒப்பது.[2]

5.1.21. பகன்றை

பனியால் நிறைந்த பகன்றை மலர் போன்று பால் பெய்த வள்ளம் காட்சி தந்தது.[3]

5.1.22. பனை

பனையினது நுகும்பு ( விரியாத பாளை ) சினைமுதிரப்

---

1. "நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு
இனிய செய்த நம் காதலர்
இன்னா செய்தல் நோமென் நெஞ்சே " - குறுந். 202:2-5.

2. நற். 267:1,2

3. அகம். 219:4,5

பெற்ற வராலமீனை நிகர்க்கும். [1]

5.1.23. பாதிரி

மகளிர் மேனிமிசை அமைந்த மென்மயிர்த் தோற்றம் பாதிரி மலரிலுள்ள தூய் போல்வது. [2] யாழ்ப்பத்தரின் தோலில் பூசிய வண்ணம், பாதிரி மலரின் உட்புற வண்ணம் உடையது. [3]

5.1.24. பிடவு

தொடுத்த கண்ணியைப் போல மலர்வது பிடவு என்று சங்கப் பாடல் தெரிவிக்கின்றது. [4]

5.1.25. பித்திகை

சிவந்த கண்ணின் கடைமுனையின் சிவப்புக்குப் பித்திகத்தின்

---

1. புறம். 249:5
2. குறுந். 147:1,2
3. பெரும். 7,8
4. " சிறுகரும்பிடவின்,
கண்ணியின் மலரும் வெண்டலைக் குறும்புதல் " - அகம். 34:1,

முகைப்புறத்து வண்ணம் உவமையாகின்றது. [1] பொதிந்து வைத்த பித்திகை மலர்ந்து கமழ்வதை நிகர்ப்பத் தலைவியின் மேனியும் கமழ்கின்றது என்று சங்கப் புலவர் செப்பியுள்ளார். [2]

5.1.26. பீரம் ( பீர்க்கு )

மாரிக்காலத்தில் மலரும் பீர்க்க மலர் ஒப்பது மகளிர் மேனியில் காணப்படும் பசலை. [3]

5.1.27. புன்னை

புன்னையரும்பு மரலின் மொக்குள் போல்வது. [4]

5.1.28. பூளை

கோடைக்காற்றில் அலையும் பூளைப்பூக்கள் கரும்பின் பூக்களை

---

1. குறுந். 222:5,6; அகம். 42:1-3; 285:19,20
2. குறுந். 168:1-4
3. "இன்னள் ஆயினள் நன்னுதல் ...
   மாரிப்பீரத்து அலர்சில கொண்டே " - குறுந்.98:1-5
4. " அருமரல் மொக்குளின் அரும்பு...." நற்.278:1,2

நிகர்க்கும்.[1]

5.1.29. மராம்

மராம் என்னும் மரத்தின் வெண்மலர்கள் காற்றில் சிதறி உதிர்வனவற்றை யானைகள் மழைத்துளி சிதறுவதாகக் கருதி ஓடி உழந்தன என்பதோர் பாலை ஓவியம்.[2]

5.1.30. மருதம்

வண்ணம் ஊட்டிய சந்தனக் கலவை மருத மலர்க் கொத்தினை ஒப்பது என்கிறார் நக்கீரர்.[3]

5.1.31. முல்லை

முல்லையின் முகைகறிலை மாதர் எயிற்றுக்கு உவமையென்று சொல்லப்பெறுதல் பெரும்பான்மை.[4] பூப்பெயர் சொல்லாமல்

---

1. அகம். 217:4,5
2. அகம். 199:1-4
3. திரு. 29,30
4. குறுந். 126:3-5; 162:3-5; கலி. 32:16; 103:6; 108:15,16; 118:19,20.

முகையெனில், முல்லை முகை யென்றே கொள்ளுதல் இயல்பு.[1]

பூத்த முல்லையைப் போலக் கமழ்வது மாதரார் மேனி.[2] ஆடவர் மேனிக்குரிய முல்லை மணம் கணவனைத் தழுவிய மனைவி மேனியிலும் கமழும் தன்மையை ஒரு பாடல் குறிக்கின்றது.[3]

5.1.32. மௌவல்

மௌவல் முகை பல்லுக்கு உவமையென்று சொல்லப்படுவதையும் காணமுடிகின்றது.[4]

5.1.33. வாகை

வாகை மலரினைப் போன்ற வடிவ அமைப்புடையது, மயிலின் கொண்டை.[5]

---

1. நற். 370:10; கலி. 31:20; 58:4; 119:7;
2. குறுந். 323:4,5; ஐங். 491:1,2; அகம்.244:4,5;
3. " மணந்தனன்மன் நெடுந்தோளே
   இன்றும் முல்லைமுகை நாறும்மே " - குறுந்.193:5,6
4. கலி. 14:3; 22:9,10; 27:4; அகம். 21:1,2
5. " வாகை யொண்பூப் புரையும் முச்சிய தோகை "-குறுந்.347:2
   பரி. 14:7,8.

5.1.34. வாழை

வாழைப்பூவின் வெண்மையான சிற்றுருப்பு வெளிப்பட்டுச் சிதறியவைபோல வளை உடைக்கப்பட்டுச் சிதறின என்கிறார் பெருஞ்சித்திரனார். [1] பின்புறம் வாரி மடித்த கூந்தலின் தோற்றம் வாழைப்பூவினை ஒத்ததென்கிறார் நத்தத்தனார். [2]

5.1.25. வேங்கை

ஒரு பாறைக்கு அப்பால் நின்ற வேங்கை மரத்தில் மகளிர் ஊஞ்சல் ஆடியமையால் உதிர்ந்தனபோக எஞ்சிய ஒரு தனிப்பூங்கொத்து உயர்ந்து விளங்கிக் காற்றில் அசைந்து தோன்றுவது மயிலின் தலையுச்சிக் கொண்டை நிகர்ப்பது என்பது குறிஞ்சித் திணைப்பாட்டில் அமைக்கப்பட்ட ஓர் ஓவியக் காட்சியாகும். [3]

வேங்கை மரத்தின்மீது விளங்கிய மயில்கள் பொன்னால் செய்த அணிகலம் அணிந்த பெண்டிரை ஒத்துக் காணப்பட்டதைக் கபிலர் காட்டியுள்ளார். [4] பொன்னிழை அணிந்த மகளிர் வேங்கை

---

1. புறம். 237:11
2. " வாழைப்பூவின்ன ஓதி " - சிறுபாண்: 21,22
3. அகம். 368:4-7
4. ஐங். 294:1,2.

மலர்ந்ததை நிகர்த்துப் பொலிந்து தோன்றினர் என்கிறார் காப்பியாற்றுக் காப்பியனார்.[1]

5.1.36. வேம்பு

வேம்பின் அரும்பினை ஒத்து நண்டின்கண் காட்சியளிக்கும்.[2]

இன்ன பூ என்னும் குறிப்பின்றிக் கண்ணிற்குப் பூவினை உவமை காட்டிய தொடர்கள் முப்பத்துமூன்று உள்ளன. இவை சுனைப்பூவினைச் சொல்லுவன என்பதை உய்த்துணர்தல் வேண்டும்.[3]

---

1. பதிற். 40:22,23
2. ஐங். 30:1; அகம். 176:7
3. மகளிர் பூங்கண்: நற். 90:7; 293:5; குறுந். 142:2; ஐங். 375:6; 469:5; கலி. 48:22; 75:31; 140:22; அகம். 329:1;

   புதல்வர் பூங்கண்: நற். 221:11; கலி. 79:20; அகம். 60:12; புறம். 41:14.

   பூங்கண்: அகம். 136:4
   பூ ஏய்கண்: நற். 122:11
   பூப்புரையுண்கண்: ஐங். 376:4;
   பூவெழிலுண்கண்: கலி. 39:50; 84:37; 35:27; 130:16.

   பூப்போலுண்கண்: நற். 20:6; 325:7; குறுந். 101:4; ஐங். 16:4; 101:4; புறம். 96:4; முல்லை. 23.

   பிற தொடர்கள்: குறுந். 72:1,5; 226:1; கலி. 29:15; 131:4; 142:11,12; அகம். 334:15,16.

சுனை மலருள் இன்னது என்று தெரிவிக்கப் படாமல் நாற்பத்தைந்து இடத்தில் 'மலர்' என்னும் சொல் உள்ளது.[1] ஆயிதழ், ஈரிதழ், நிரையிதழ், பல்லிதழ் என்பவை இருபத்தொரு பாடலில் கண்ணிற்கு உவமையாக வருகின்றன.[2]

## 5.2. மலர்ப்பெயர் சுட்டாமல் அமைந்த உவமைக் காட்சிகள்

இன்ன மலர் என்று பெயர் சுட்டாமல், கற்பவர் உய்த்துணரும் வகையில் சங்க இலக்கியத்துள் பல உவமைகள் அமைந்துள்ளன.

---

1. 'மலர்' உவமைத் தொடர்கள்: நற். 33:12; 66:11; 85:1; 252:14; 301:2,3; 308:2; 326:10, 370:11; 398:10; குறுந். 377.ஐங். 18:3; 19:4; 48: 208:5; 242:3,4; 243:4; 315:1; 423:4; 427:1; 477:1; 479:5; பதிற். 21:34,35; பரி. 7:52 8:53; 9:9; 9:60. கலி. 25:13; 27:17; 45:11; 58:2; 100:10; 103:60; அகம். 11:12; 52:14; 69:1,2; 101:1; 146:10,11; 176:16; 307;4; 320:6; 363:18; புறம். 137:8; 396; குறிஞ்சி.247:24

2. 'ஆயிதழ் உண்கண்': கலி. 112:24: 'ஆயிதழ் மழைக்கண்' அகம். 306:12; 373:13; 'ஈரிதழுண்கண்': ஐங்.480:4; நிரையிதழுண்கண்: அகம். 65:19; பல்லிதழ் உண்கண்:-நற்.155:1 241:11; குறுந். 5:5; ஐங்.170:4; 190:4; 334:5; 351:4; 471:2; கலி. 112:9; அகம். 161:14; 'பல்லிதழ் மழைக்கண்: குறுந். 259:4; அகம். 51:9; 229:1 244:9; 'மயங்கிதழ் மழைக்கண்: நற். 5:9; ஐங்.220:5.

5.2.1.

கண்ணின் தோற்றத்துக்கு உவமையென்று சுனைப்பூக்களின் இதழினைச் சொல்லுதல் மரபு.[1] நீர்ப்பூக்கள் மலர்ந்தும் மலராதபோது நிலையில் கண்களை நிகர்த்தவை என்பதும் பாட்டில் பயின்ற இயல்பாகும்.[2]

5.2.2.

சுனையில் பூத்த பூதுமலர் மணத்தினை நிகர்ப்பது மகளிர் மேனிமணம் என்பதைப் பல புலவரும் சுட்டியுள்ளனர்.[3]

5.2.3.

கொல்லிமலைச் சாரலின் பன்மலர் மணமும் இசைந்ததுபோல் கூந்தல் கமழ்வதையும்,[4] கானத்து மலர்களின் மணத்தைச் சேர்த்துத் தழுவிவரும் காற்றின் மணம்போலக் கூந்தல் கமழுகின்றது

---

1. கலி. 37:1; 55:12; 119:5; அகம். 59:1,2; திரு. 75

2. நற். 166:3,4; கலி. 49:10; 77:12; 122:2; அகம். 354:13.

3. நற். 298:10,11; ஐங். 176:2; அகம். 69:19,20; அகம். 78:23,24; 238:16-18, 291:22,23.

4. நற். 6:9,10.

என்றும்,[1] மாலை நேரத்தில் மலரும் பல்வகைப் பூ மணமும் ஒருங்குடைய காற்றினைப்போல் கமழ்வது நுதல் எனவும்,[2] சோலை மணம் போலக் கமழ்வது கூந்தல் எனவும்,[3] புலவர் பாடியுள்ளனர்.

5.2.4.

பழுத்து முதிர்ந்த பலாப்பழத்தின் நறுமணம் பூவினைப் போலக் கமழுவதைப் புலவர் இருவர் சுட்டியுள்ளனர்.[4]

5.3.

மலரின் நுண்ணிய உறுப்பாகிய பூந்தாது சில உவமைக் காட்சிகளுக்கு நிலைக்களமாகியது என்பது அறிந்து இன்புறத்தக்கது.

5.3.1.

மகளிர் மாமை மேனியில் ஒளியுடன் திகழும் சுணங்கு, தளிர்மீது சிந்திய பூந்தாது நிகர்ப்பது.[5]

---

1. குறுந். 199:3,4
2. குறுந். 273:1-3
3. அகம். 204:13
4. "பூநாறு பலவுக்கனி" - குறுந். 90:4; 373:6
5. கலி. 29:7,8; 77:8; அகம். 41:13-16.

5.3.2.

கொன்றைத் தாதினை நிறையக் குவித்ததைப்போல மலை நாட்டார் சமைத்த தினைச்சோறு தோன்றியது.[1]

5.4.

பொதுவாகப் பூவின் எழிலும், பூத்த கொடியின் வனப்பும் மகளிர் தோற்றத்துக்கு உவமையென்று சொல்லப்படுவதைக் காண-முடிகின்றது.

இளமங்கையின் எழில்நலம் பூவினை ஒத்தது.[2] ஒசிந்து அசையும் மகளிர் தோற்றம் பூங்கொடி போல்வது.[3]

5.5.

பூக்களையும் தளிர்களையும் சேரத்தொடுத்த மாலைகளை நிகர்த்த காட்சிகள் சிலவற்றைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

---

1. நற். அகம். 393:15,16
2. நற். 18:4; ஐங். 62:1,3.
3. பரி. 12:89; 17:15,16; 20:94,98; 21:59,63; கலி. 32:10,12; 62:4,5; 132:18; அகம்.54:22.

5.5.1. ' மலரா மாலைப்பந்து '

ஊனுடன் சேர்த்துச் சமைக்கப்பட்ட சோற்றுத் திரளின் தோற்றம், பச்சிலைகளுடன் தொடுக்கப்பட்ட மாலையின் வெண்மலர் மலராத முகை நிலையில், அதை உருட்டித் திரட்டி வைத்த பந்துபோல் காட்சியளித்ததைப் புறநானூறு காட்டுகின்றது. 1

5.5.2. ' மயிலைக்கண்ணி '

மயிலை என்னும் கருநீல மலர்களைத் தொடுத்த கண்ணி கானக் காக்கையின் சிறகினை ஒத்துக் காணப்பட்டதை ஒரு பாடல் காட்டுகின்றது. 2

5.5.3. மாலைபோல் வெள்ளம்

கோங்க மலர்கள் உதிர்ந்த ஆற்றில் விழுந்ததனால் வையைப் புதுவெள்ளம் தொடுத்த மாலையைப் போன்ற தோற்றத்துடன்,

---

1. " புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை " - புறம். 33:12-14

2. புறம். 342:1, 2

மெல்லப் பாய்ந்தது என்றார் மாங்குடி மருதனார். [1]

5.5.4. 'துணை மலர்ப் பிணையல்'

தனித்தனி மலர்களை இணைத்துப் பிணைத்து மாலையாக்கினால் மக்களுக்குப் பயன்படும். வளர்ந்த தனி ஆணும் பெண்ணும், தனித்த மலர்க்கோவை என்றால், இருவர் இணையும் இல்லற வாழ்வு என்பது, ஒத்த மலர் தொடுத்த கோவையிரண்டைச் செறித்துப் பிணைத்ததை நிகர்த்து அழகும் பயனும் தருவது என்று மோதாசனார் கூறுவது சுவை மிக்கது.

5.6. வாடிய பூக்கள்

பூக்களின் அழகு பெண்ணின் பொலிவினை நிகர்க்கும் என்று உவமை செப்பியதற்கு ஏற்ப, மலர்களின் வாட்டத்தினைக்கொண்டு, மகளிர் மேனியின் மெலிவினையும் உள்ளத்தின் ஏக்கத்தினையும் சுட்டிக் காட்டும் மரபும் சங்கப் புலவர்களிடம் காணப்படுகின்றது.

5.6.1.

தேர்ச் சக்கரத்தால் நெய்தல் முகையும் மலரும் நசுங்கும்

---

1. மதுரை. 337-339;
"துணைமலர்ப் பிணைய லன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டியோயே" - குறுந். 229:6,7

துன்பியற் காட்சியாலும்,[1] வயிறுர உண்ட வெண்குருகு மிதித்தமையால் நசுங்கிய நெய்தலின் தோற்றத்தாலும்,[2] தலைவியின் உள்ளமும் உடலும் புண்பட்ட தன்மை காட்டப்படுகின்றது.

5.6.2.

சூடப்பட்டதனால் வாடிய நிலைமையும் துயரத் தோற்றத்துக்கு உவமையாத லைக் காணமுடிகின்றது.[3]

5.6.3.

தொடுத்து வைத்தும் பயன்படாத கோதைபோலக் காத்திருந்தும் ஏமாறும் துயரம் உள்ளது என்பர்.[4]

5.6.4.

நீரைப் பிரிந்த சுனைமலர் வாட்டமும்,[5] வண்டுபடிந்து

---

1. குறுந். 336: 4-6
2. நற். 183: 9-11
3. கலி. 23: 12, 13; 78: 21
4. நற். 11: 1, 2; கலி. 68: 15
5. கலி. 5: 14, 15

ஏற்பட்ட நெகிழ்ச்சியும் [1] காற்றினால் மோதப்பட்ட மலரின் சிதைவும் [2] நேரங்கடந்ததனால் பொலிவிழந்த நிலைமையும், [3] ஆற்றுமைத் துயரத்தை அறிவுறுத்த வந்தமை நினைந்து இன்புறத்தக்க நயம் வாய்ந்தவை.

5.6.5.

உழவர் களையெனக் களைந்தாலும் மீண்டும் வளர்ந்து மலரும் நெய்தலைப் போலவே கணவன் பொருட்படுத்தாமல் புறக்கணித்தாலும் அவனை அகமும் முகமும் மலர்ந்து வரவேற்பாள் தலைவி என்பதை அழகுபட உணர்த்துவது ஓர் உவமை. [4]

5.6.6. வாட்டமும் மலர்ச்சியும்

பிரிந்தவரை நினைந்து வாடிய நெஞ்சம் குவிந்த கயப்பூப் போல்வது; கூடி மகிழ்வார் அழகு புதிதாக மலர்ந்த பூ நிகர்ப்பது. [5]

---

1. குறுந். 30:4,5
2. கலி. 86:19
3. அகம். 363:4
4. "கடிந்த செறுவில் பூக்கும் நின்னூர் நெய்தல் அனையேம் பெரும" - குறுந். 309:5,6
5. கலி. 118:9-12.

சுடர் கண்டு மலரும் சுனைப் பூப்போலத் துணையைக்கூடி மகிழ்தலும், சுடர் சென்றால் கூம்புவதுபோல், காதலன் நீங்கிய போது வாடுவதும் பெண்ணின் இயல்பு. [1]

## 5.7. வண்டும் மலரும்

வண்டும் மலரும் ஒன்றையொன்று சார்ந்து வாழும் இயல்புடையன. இவற்றின் உறவினையும் பிரிவினையும் உவமையாக்கிப் புலவர் தெரிவிக்கும் அரிய வாழ்வியல் உண்மைகள் அறிந்து தெளிதற்கு உரியன.

### 5.7.1.

புதிய மங்கையரை நாடும் ஆடவன் நிலைமை
" புதுவ மலர் தேரும் வண்டே போல் "

என்று குறிக்கப்பட்டுள்ளது. [2]

### 5.7.2.

தன்னைத் தலைமகன் விரும்பினான் என்று தோழி தலைவிக்குப்

---

~~1. கலி. 118:9-12~~

1. கலி. 78:15,16

2. கலி. 98:2

பூவைந்துரைத்த கூற்றில்,

" தாதுண் வேட்கையின் போது தெரிந்தூதா
வண்டோரன்ன அவன் தண்டாக் காட்சி "

என்பது இடம்பெறுகின்றது.[1]

5.7.3.

விரும்பிய துணைவரை எதிர்ப்பட்ட மங்கையர் நிலைமை பூ மேற்படிந்த வண்டின் தன்மையைப் போல்வது.[2]

5.7.4.

பல மகளிரை நாடும் ஆடவர் தன்மை, மலர்தோறும் தேனுண்டு பெயரும் வண்டின் செய்கையை ஒப்பது என்பதைப் புலப்படுத்தும் பாடல்கள் உவமைத் திறம் வாய்ந்தவை.[3]

5.7.5.

பொதுமகளிர் செய்கை, வறும்பூத் துறக்கும் வண்டின்

---

1. நற். 25:9,10

2. " தாம்வேண்டு காதற் கணவரெதிர்ப்படப்
பூமேம்பாடுற்ற பூவை சுரும்பின் " - பரி. 10:35,36

3. " தண்கமழ் புதுமலர் ஊதும்
வண்டென மொழிப மகன் என்னாரே " - நற்.290:8,9

" மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண்டன கொல்
வண்டின் மாண்குணம் மகிழ்நன் கொண்டனன் கொல் "
- ஐங்.90:1,2

" நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தள்
கொங்குண் வண்டின் பெயர்ந்து புறமாறிநின்
வன்புடை விறற்கவின் கொண்ட
அன்பிலாளன் " - ஐங். 226:2-5

தன்மையை நிகர்ப்பது.[1]

5.7.6.

நல்லவர்க்கு வேண்டுவனஉதவும் விருந்தோம்பலை நிகர்ப்ப வண்டு சூழ்ந்தொலிக்கும் நேரத்தில் காந்தள் முகைகள் நெகிழ்ந்து விரிந்தன.[2]

5.7.7.

சொல்லும் பொருளும் சிறப்புற அமைந்த இனிய தமிழ்ச் செய்யுளை மல்லிகை மாலையாகவும், செவிச்செல்வம் நுகரும் மாந்தரைத் தும்பிகளாகவும் காட்டுகின்றது ஒரு வெண்பா.[3]

5.8. அறிவுரை அடங்கிய உவமைகள்

அரும்பு வளர்ந்து முகைப்பருவம் அடையுங்காலை, அதன் வாழ்வின் எல்லை குறைகின்றது. மனித வாழ்வும் இது போன்றதே. தண்ணீரில் வளர்ந்த முகைகள் சிறிதே நேரத்தில் நிலைமாறிப் போதாகி

---

1. மதுரை. 572 - 574
2. ஐங். 67:3-5
3. " சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலான் - மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மற்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ். " - மதுரைக்காஞ்சி இறுதி வெண்

மலர்ந்துவிடும். அரும்புநிலை பலநாள் காணப்படும். மலர்ந்த நிலையும் நாள் முழுவதும் தோன்றும். ஆனால், முகைப்பருவத்தைச் சிறிது நேரத்திற்கு மேல் குளத்தில் காண்பதற்கில்லை என்னும் இத்தன்மையை யாக்கையின் இளமை நிலையாமைக்கு ஒப்புமை காட்டிப் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறிய திறம் வியந்து போற்றற்குரியது. 1

மணங்கமழ மலர்ந்த நிலையில் மரங்கள் எளிதில் புலப்பட்டு விளங்கும். பூவாதே காய்க்கும் மரங்கள், அடங்கிய தன்மையுடன் அரும்பணி ஆற்றும் ஆன்றவர் தன்மையை நிகர்ப்பன. 2

வேண்டியவர் வேண்டுவ கொய்து கொள்வதற்கு ஏற்றவாறு பல மலர் பூத்துத் திகழும் மரங்கள், வறுமையை உணர்ந்த வள்ளல்கள் காக்க வைக்காமல் அன்றே பொருள் கொடுத்து அனுப்பும் நிலையினைப் போல்வன. 3

---

1. கலி. 17:15,16
2. "ஆன்றவர் அடக்கம்போல் அலர்ச் செல்லாச் சினையொடும்" -கலி. 32:8
3. "உணர்ந்தவர் ஈகைபோல் இணரூழ்த்த மரத்தொடும்" - கலி. 32:11

## 5.9. 'பொருளே உவமம்' ஆதல்

" பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃ துவம மாகும் " [1]

என்னும் தொல்காப்பியக் கொள்கைக்கு ஏற்புடைய உவமைத் தொடர்களும் சங்க இலக்கியத்தில் உள.

5.9.1.

" கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர் " [2] எனவும்,
" ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ் " [3] எனவும்,

பிறவாறும் [4] பாடல்களில் பயின்றுள்ளன.

---

1. தொல். 1230
2. திரு. 75
3. அகம். 48:8
4. கண்போல் குவளை : நற். 262:1; ஐங். 464:1,2; அகம். 294:3-5;
   " குவளை : ஐங். 299:2,4; அகம். 228:4,
   " நீலம் : நற். 161:2, 273:8; ஐங். 234:10,11
   " நெய்தல் : நற். 8:8; 27:10,11; 283:2; ஐங். 151:2; பதிற். 51:17; அகம். 150:8; 170:4; 230:2;

5.9.2.

" தகைறு, வாண்முகம் ஒப்ப மலர்ந்த குவளை "[1] எனவும்,
" முகம்போலும் தாமரை "[2] எனவும்,
" திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை "[3] எனவும்,

வருவன எடுத்துக்காட்டத் தக்கன.

5.9.3.

எயிறு போல்வன முகை என்று சில பாடல்கள் காட்டுகின்றன.[4]

5.9.4.

" கைபோல் காந்தள்"[5] எனவும்,
" செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்ப "[6] எனவும்,

---

1. கலி. 64:15,16
2. அகம். 176:5,6
3. சிறுபாண். 29
4. குறுந். 186:2,3; 254:2,3; கலி.56:23,24; சிறுபாண்:28-30.
5. பரி. 19:76
6. சிறுபாண்: 167

" கோடற் குவிமுகை அங்கை அவிழ " [1] எனவும்,

சொல்லப்பட்ட பொருளுவமைகள் அறிந்து இன்புறத்தக்கவை.

5.9.5.

" சுணங்குபோல் புந்தாது " [2] எனவும்

பசலைபோல் பீர்க்கம்பு [3] எனவும் வருவனவும் இத்தகையவே.

## 5.10. முடிப்புரை

இதுகாறும், மலர்களைச் சார்ந்து சங்க இலக்கியத்தில் உவமை சொல்லப்பட்ட தன்மையைப் பற்றிய, கருத்துக்கள் குறிக்கப் பெற்றன. சங்க காலப் புலவர் காட்டிய மரபுகள் பெரும்பாலும் இன்று வரையிலும் மறையாது வழக்கில் உள்ளன என்பதும் இவண் குறிப்பிடத்தக்கது.

***

---

1. முல்லை. 95
2. கலி. 33:4
3. கலி. 31:4.

## 6. மலர்களும் குறியீட்டு மரபும்

6.0. இருள், ஒளி, இடி, மின்னல் ஆகியவை இலக்கியப் படைப்பில் அவற்றோடு ஒப்புமையுடைய நிகழ்ச்சிகளையும் கருத்துக்களையும் அறிவிக்கப் பயன்படுவதுபோல மலர்களும் அவற்றின் தன்மைக்கேற்ப, நுட்பமான வாழ்க்கை நிகழ்ச்சிகளை உணர்த்த ஆளப்படுகின்றன. மற்றும், இம்மலர்களின் வருணனைகள் உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் பயன்படுவதோடு ஆட்சி வழக்கின் செல்வாக்கினால் ஒருசில செய்திகளுக்குக் குறியீடுகளாக வழங்கி வருகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## 6.1. சொற்பொருள் வளர்ச்சி

" எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே "[1]

என்றார் தொல்காப்பியனார். சொற்பொருண்மை காலப்போக்கில் வளர்வது நடைமுறையில் காணும் உண்மை. சொல்லின் எல்லையைக் கடந்த பொருள் வளர்ச்சித் தன்மையை ஆராய்ந்து ஆகுபெயர்,[2] எனவும் தகுதி வழக்கு[3] எனவும் இலக்கண அறிஞர் குறித்தனர். இயல்பாகிய மக்கள் பேச்சுவழி அமைந்த சொல் வழக்காறு அன்றி, அறிஞர் குறித்து வழங்குவன இடுகுறிப்பெயர் எனப்பட்டன.[4]

பண்டைச் செய்யுளிலும் பொதுமக்கள் பேச்சிலும் சொற்-பொருளைக் கடந்த உணர்ச்சி நுட்பங்கள் பல உள்ளன. ஏகாரம்,[5] ஓகாரம்[6] உம்மை[7] முதலிய இடைச் சொற்கள் நுண்ணிய

---

1. தொல். 640
2. நன். 290
3. நன். 267, தொல். 500;
4. நன். 62
5. நன். 422
6. நன். 423
7. நன். 425

( நன்னூல் மூலமும் விருத்தியுரையும், ( சைவ சித்தாந்தக் கழகம், சென்னை) 1961, மூன்றும் பதிப்பு.

உணர்ச்சி நிலைகளையும் கருத்தின் சிறப்பினையும் விளக்கும் ஆற்றல் உடையவை. " உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே "[1] என்பதற்கேற்ப, உணரும் தன்மையுடையவர்க்கு ஒன்றைச் சுட்டிக் காட்டுதலே அமையும்; பல்வகைச் சொற்களால் வெளிப்படக் கூறுமலே விளங்கும், நுண்ணிய அறிவுடையார் நிகழ்த்தும் உரையாடலில் ஆழ்ந்த கருத்தும் நுணுகிய உணர்வும் சின்மென் சொற்களால் விளக்கப்பட்டிருந்தலைக் காணமுடிகின்றது.

## 6.2. குறிப்புப் பொருள்

" முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொன்முறை யான் "[2]

என்றார் தொல்காப்பியர்.

" வெளிப்படை குறிப்பின் விரிப்பன சொல்லே "[3]

என்றார் பவணந்தியார்.

---

1. தொல். 876
2. தொல். 912
3. நன். 269

சொற்பொருளாகிய வெளிப்படைப் பொருளொடு மற்றொரு பொருளும் உறையும் நிலையினைப் பண்டை இலக்கணமும் உரையும் உணர்த்துகின்றன.[1] குறிப்பினில் உணர்த்தப்படும் பொருள் நுட்பமும் திட்பமும் உடையதென்பதைப் பழம்பாடலுள் பெரிதும் காணலாம். சொல்வார் தன்மைக்கேற்பத் தெளிவும் உணர்வார் நிலைமைக்கேற்ப நுட்பமும் பாட்டின் சொற்றொடர்களில் விளங்கக் காணலாம்.

" எல்லா மேம்பட்ட பாடல் இலக்கியத்தையும் போல, இயற்கை வருணனை என்பது புலவர் தம் கருத்தில் உணர்ந்த வண்ணமே பாட்டின் உட்பொருளைப் படிப்பவர்க்கு விளக்கும் அறிகுறியாக அமைகின்றது, "[2] என்பர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.

---

1. தொல். 1188

ஒட்டணி - தண்டியலங்காரம், நூற்பா, 52, பக்.122,
பரியாயம்- " " 72, பக்.151

2. "Description of Nature, as in any high poetry, stands as a symbol to reveal to us the inner meaning of the story, as seen by the poet in his vision."
— Prof. T.P. Meenakshisundaran,
A History of Tamil Literature, P.28 (Annamalai University, Chidambaram, Tamil Nadu) 1965, I Ed.

மலர்களோடு தொடர்புடைய சங்கப்பாடல்களில் காணப்பட்ட குறியீட்டு வழக்காறுகள் பின்வருமாறு:-

மலர்கள் : - வளமை - அன்பு*

பாட்டில் மலர்கள் இடம்பெறின், புறப்பொருளில் பெருகிய வளத்தினை உணர்த்தும்; அகப்பொருளில் அன்பினைக் குறிக்கும்.

---

வளமை:

பதிற்: 13:3,8,13; 19:19; 19-21; 23:18-25;
30:1-4;1-5;16, 26; 40:22; 51:5-7,17,18;
64:16-18; 66:15-17; 71:2; 78:4.

பரி. 8:23-27; 11:16-30; 12:1-10;12; 77-81;
18:33-50; 102:1-4; 105:11,12.

கலி. 101:1-5; 102:1-4; 105:11,12.

அகம். 78:18; 84:11-13; 181:11; 201:6,7; 205:11,1
371:7.

புறம். 11:4; 16:13,14; 28:12-14; 33:19,20;
42:16; 48:3; 61:2; 63:12; 116:10; 117:3;
137:8-10; 200:9,10; 209:2,3; 339:2-8;

340:1,2; 351:10,11; 352:5; 384:1-7; 386:10
395:6; 396:2; ~~384:1-7; 386:10,11~~

திரு. 72:-75; 198-203

பொருந. 195-202,205,209

சிறுபாண்: 51;69-75,146-149,160,164-167,178;

பெரும். 289-296,389

முல்லை. 51,93-96

மதுரை. 171, 249-252, 277-285, 423

பட்டின. 33, 37, 105, 240, 241

மலைபடு. 120, 124, 145-151, 283, 305, 498, 519

குறுந். 156:2 (பாரிப்பனப் பாங்கன் அறிவு வளம்)

புறம். 348:6; 352:12, 13 (இளமையழகு வளம்)

<u>அன்பு:-</u>

நற். 10:4; 15:4; 31:5; 33:12; 66:12; 66
73:9; 74:5; 113:7; 118:4; 122:11;
147:8; 155:2; 157:5; 159:2; 160:8-10;

166:3; 169:4; 184:9; 187:3; 197:2;
202:6, 11; 205:6; 221:6; 221:1-4, 11;
222:1; 223:3; 235:4; 241:11; 250:4;

252:9; 258:1; 271:8; 273:8; 284:12;
293:5; 301:1, 1-3; 307:8; 308:2;
355:1-3; 370:8, 10, 11; 375:2; 383:1, 2;

391:8-10.

குறுந். 1:4; 5:5; 13:5; 24:1; 57:1; 72:1;
95:2; 101:4; 123:3; 142:1, 2; 147:1, 2;
167:1, 3; 183:5-7; 233:3; 329:6; 334:3;

338:3; 340:4; 341:1, 2; 377:1.

ஐங். 3:5; 8:4; 16:3, 4; 18:1-3; 23:1, 2;
62:1; 72:1-3; 75:2; 76:1; 81:3; 82:4;
99:3; 101:4; 109:1, 2; 135:3; 142:1;

144:1; 149:1; 170:1-4; 181:1; 187:5;
188:3, 4; 190:4; 201:3; 210:3; 220:3;
242:3, 4; 243:4; 277:5; 290:3; 294:1;

315:1; 334:5; 351:4; 368:1-3; 375:5;
376:4; 405:3; 414:2; 423:4; 427:1,2;
458:2-4; 469:5; 471:2; 477:12; 479:5;
485:4.

கலி. 3:13; 7:11,12; 13:11,12; 14:2,3;
25:13,14; 27:17; 28:18; 30:15; 33:6-10;
28; 36:1,2,7; 39:2,44,50; 40:11-13;

45:11,17; 46:1-5; 48:1; 22:49:10; 5
57:9,11; 58:2; 62:4,5; 63:6; 64:2026;
70:6; 84:10; 11,37; 85:27; 92:1; 103:6

108:27,42,43; 111:3,4,14; 112:1,9,24;
114:3; 117:10-12; 118:22; 124:8; 130:16
131:4; 135:6,9,12,13; 142:11,12; 143;

143:49-51; 144:30-32.

அகம். 10:5; 11:9,12; 16:1-3; 17:18; 18:15;
19:9-11; 20:10; 27:13,14; 33:9; 36:8
42:1-3; 45:6,7; 48:4,8; 51:9; 52:3,14;

54:22; 57:11; 62:4,5; 65:10; 66:12;
69:1,2; 19:80:7,8; 83:12-14; 108:14-16
109:1; 115:11; 120:16; 121:7,8;

129:16; 135; 2,3; 138:2; 146:10,11;
150:8; 161:14; 162:10,11; 172:10;
174:10-12; 176:16; 179:12; 180:2,3;

197:1,16; 198:15; 229; 12; 240:1-3;
14:249:1; 262:13; 279:12; 285:13;
290:9; 295:19,20; 310:5; 317:5; 320:6;

329:1; 334:15,16; 340:7,13; 353:20;
354:13; 360:1; 361:1,2; 363:18; 373:19
398:3,4; 20.

முல் லை. 23,51

குறிஞ்சி. 61-96,196-198,214.

6.2.2.

மலர் தருதல் என்பது அகப்பொருளில் நெகிழ்ந்த மனத்தின் அன்பினைத் தருதலையுணர்த்தும்.[1]

" காமன் கணையிரப்பேன் "[2]

என்னும் தலைவி கூற்று, நெகிழ்ந்த அன்பு மனத்தை விரும்பி வேண்டும் தன்மையைக் குறிக்கும்.

தந்த மலரை ஏற்றுக் கொள்வது அன்பினை ஏற்பதற்கு அடையாளமாகும்.[3]

மலரை ஏற்றுக் கொள்ளாமை அன்பினையும் களவுத் தொடர்பினையும் நயவாமையைக் காட்டும்.[4]

---

1. நற். 80:4,5; 96:7-9; 138:5-8; 173:1-3; 349:2,3; 359:4; குறுந். 214:2-4; 346:4; 366:1-7; ஐங். 187; 201:2; 211:1-3; 366:1-5; கலி. 76:6; 7,10,11; 111:12,13; அகம்.330:1-3;
2. கலி. 147:59;60.
3. நற். 80:4,5; 96:7-9; 138:5-8; 173:1-3; 349:2,3; 359:5,6; குறுந். 214:2-4; 346:4; 366:1-7; ஐங். 201:2; 211:1-3; 366:1-5; கலி. 76:6,7; 10,11; அகம். 330:1-3.
4. ஐங். 187

" கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப்பூவின் குலைக்காந் தட்டே " [1]

என்று கையுறை மறுப்பது, களவுத் தொடர்பினை நயவாத நிலைமைக் காட்டும்.

" தாரல்நின் தாரே " [2]

என்பது ஊடல் கொண்டமையால், அன்புச் செய்கையை ஏற்க மறுப்பதைக் குறிப்பது.

6.2.3.

முகை நெகிழ்ச்சி என்பது அன்பினால் மனம் நெகிழ்தலை யுணர்த்தும். அகப்பொருளாயின், காதலன்பு; புறப்பொருளில் ஈகையை உளப்படுத்தும் சமுதாய அன்பு.

---

1. குறுந். 1:3,4
2. குறுந். 258:1

ஈகைக்குரிய மனநெகிழ்ச்சி:

பரி: 14:1,2;14,16

புறம்: 11:3; 117:3; 119:2; 166:27-29; 371:3; 383:7,8;

பொருந:13,20,108,146-148,161,164-166,183,255

சிறுபாண்: 13,20,108,146-148,161,164-166,183, 155.

காதலால் மனம் நெகிழ்தல்:

நற்: 59:9,10; 74:6; 86:7; 91:2; 99:8-10; 115:5, 118:6; 147:8; 160:8; 161:2; 188:1-5; 190:5; 206:7; 231:6,7; 242:1-5; 246:8;

248:1-3; 256:6,7; 257:5; 260:9; 275:4-6; 294:7; 296:5; 299:2; 302:1; 313:7; 321:8; 335:5; 366:3-5; 367:9; 369:3,4; 371:1,2;

373:6; 373:3,8,9; 11,12; 384:6,7; 389:1;

குறுந். 35:2,3; 66:4; 98:5; 175:4; 183:1,2; 209:5,6; 251:1-3; 254:2,3; 259:2,4; 265:15 273:1,2; 284:1-3; 291:5-8; 296:4; 300:1-4;

311:5-7; 349:1; 366:4; 382:1-3; 387:1;

ஐங்: 4:4; 10:4; 33:2; 34:2; 40:4; 82:2; 94:4; 108:2; 110:2; 146:1; 169:2,3; 185:1; 186:3 190:1; 198:2; 215:5; 276:5; 277:5; 299:2;

308:2,3; 331:1-4; 346:2; 347:3; 348:3; 357:1; 361:2; 412:1-3; 4;6:1; 242:3,4; 435:2,3; 436:2,3; 437:3; 438:2,3; 440:3;

448:3; 462:1-5; 464:1-3; 489:2; 492:2; 494:2; 496:5; 497:1; 499:1,2; 500:1-3;

கலி. 26:1-7; 28:8; 29:12,16,20; 30:2; 7:11: 31:5; 32:5,11; 33:4,9,10; 38:6,25; 39:50, 42; 16:44:4; 48:1; 49:5; 52:21; 53:15;

54:9; 57:9; 59:1; 64:15,16; 66:1,6,8; 69:1,2; 71:2,8; 72:6-8; 73:5; 74:3; 77:2,7 85:14,15; 133:5; 150:20,21.

அகம்: 2:16; 4:1,2,10,11,16; 11:3,9; 21:9,10; 23:3,4; 11; 34:1,2; 36:4; 10; 38:10,11; 41:2; 80:11; 85:10,11; 90:3; 92:9; 94:2,3;

97:16,21; 99:2-5; 105:1,16; 117:1; 124:11 125:6; 139:11; 143:14,15; 144:4; 147:1; 150:9; 154:7; 160:13; 170:4; 172:7;

178:9,10; 184:7; 188:9; 217:8-10; 228:4;
229:17; 230:1,2; 232:7; 235:7-10; 238:17;
240:13; 243:2,3; 244:4; 252:10; 260:9;

264:1,2; 270:1; 272:17; 291:10,11; 298:4;
304:11; 310:12; 336:8; 344:3; 345:15;
355:3; 357:14,15; 364:4-7.

முல் உல: 93-96.

குறிஞ்சி: 141,196,197,223.

6.2.4.1.

பூமணமும் மற்றுள்ள நறுமணமும் அகப்பொருளில் இன்பத் தழுவலை எதிர் கொள்ளற்குரிய காமச் செவ்வியை - இன்பியல் விருப்பத்தைப் புலப்படுத்தும்.

---

நற்: 9:10,11; 48:5; 56:1-3; 78:4; 106:6,7; 117:4; 123:6; 131:8; 137:1; 169:5,9; 175:4,5; 176:6,7; 191:11; 221:5; 235:3; 244:2; 249:5; 250:8; 259:2; 261:8,9; 262:7; 267:5; 270:1,2; 278:2; 283:2; 290:8; 292:2; 294:8; 298:11; 301:9; 304:10; 307:9; 313:8; 334:4; 335:6; 337:3-8; 339:9; 346:9-11; 361:1,4; 367:8,9; 368:5,6; 394:9; 396:5; 399:2.

குறுந்: 2:5; 10:3; 19:4; 22:4; 52:3; 59:3; 62:1-5; 70:2; 84:4,5; 90:4; 115:4; 116:1,4; 168:1-4; 192:5; 193:6; 199:3,4; 209:5,6; 259:2,3; 270:6-8; 272:8; 273:3; 286:2,3; 296:4; 300:1-4; 304:1-4; 304:6; 312:3-6; 313:3; 321:1; 323:4,5; 355:6; 359:3; 361:2-4; 381:1-7; 382:1-3; 386:1-6

ஐங்: 19:1-3; 73:3; 97:4; 141:1; 146:1,2; 148:1,2; 150:1; 151:2-4; 162:3; 173:3; 174:2; 176:1,2; 177:3; 182:2; 190:1; 212:1,2; 225:2,5; 227:2,3; 244:1,2; 253:1,2; 254:1-3; 259:4,5; 267:4; 276:2; 290:3; 293:1; 324:5; 331:1-4; 342:3; 344:2,3; 348:3; 404:3; 413:1; 416:1; 421:2; 446:1,2; 463:1.

பரி: 11:140.

கலி. 14:4; 15:20; 17:11; 21:6; 22:9; 28:3;
29:21; 30:11; 32:5, 11,16,17; 37:12;
39:3; 43:23; 47:11,18; 49:16; 52:7;

53:5; 54:5; 55:3; 59:3; 60:2; 66:6;
12; 71:20; 72:19; 90:16; 93:30; 95:2;
123:1; 126:10-13; 132:8; 12; 136:13.

அகம். 2:7; 4:11; 14:8; 22:3; 25:4,5; 30:14;
34:2; 36:11; 41:13; 43:9,10; 47:17;
78:24; 84:8; 85:10-12; 90:14; 107:20,21;

108:16; 114:3; 116:7; 117:3; 118:2; 124:12
126:15; 137:8; 141:26; 144:9; 150:11;
152:18; 159:14; 164:7; 170:2,5; 174:11;

181:26; 182:16; 184:7; 202:5; 204:5;
204:7,13; 208:23; 218:21; 223:15; 237:4;
238:10-19; 244:4,5; 254:15,16; 257:1,2;

274:12; 291:22,23; 302:7; 308:13;314:20;
324:9; 332:13,14; 338:7; 345:515-17;
360:18,19; 365:15,16; 366:14; 370:11;

374:10; 378:4; 379:12; 388:6,8; 391:6;
399:2-4;

புறம். 113:9.

குறிஞ்சி. 9; " நறுந்தோள் " ( பார்க்க: குறிஞ்சிப்பாட்டு, விளக்கம், மாணிக்கப்புநந்த, எஸ். ஆர். சர்மா, எம்.ஏ., ) தொல்காப்பியர் நூலகம், சென்னை.

போது தாது என்பவற்று மிகுதி காமக்களிப்பினை உணர்த்தும்.

( அகம். 246:5,6; மதுரை. 447,551,564,567, 589)

காஞ்சித்தாது மேனி ஒப்பனைக்கு அணியப்படுதலும் இன்பியல் விருப்பப் பணியினையே உணர்த்தும்.

( குறுந். 10:2,3; அகம். 296:1,2.)

6.2.4.2.

அன்றியும், கமழும் மணம் என்பது புறப்பொருளில் புகழினையும் அகப்பொருளில் அலர் பரவுதலையும் காட்டும்.

---

<u>புகழ்:-</u>

பதிற்: 12:10; 51:17,18; 55:4,5

புறம். 36:8; 48:3; 70:14; 90:1,2; 176:4; 209:16; 337:10; 347:5; 354:10; 380:7; 390:3.

151:12 "மணங்கமழ் மால்வரை"-த்தே இகழ்ச்சிக் குறிப்

108:2-4; "புகைகமழ்தல்" - உடல்மாயப் புகழ் வளர்தலை யுணர்த்தும்.

திரு. 290

பொருந. 19,157

சிறுபாண். 4,45,68,88,100,108,116,178

மதுரை. 253,297,329,487

மலைபடு. 262,466

<u>அலர் பரவுதல்</u>

நற். 19:5; 49:9; 55:5-12; 63:3-5; 143:10; 149:6; 167:9; 203:7; 244:4; 259:2; 261:8 267:5; 283:2; 368:5,6.

குறுந். 73:3; 82:2; 84:3; 141:1; 222:2; 240:3,4; 241:3;

கலி. 39:15; 44:7; 45:6; 52:9; 53:5; 105:53-56 131:19; 136:13.

6.2.5.1.

வண்டும் மலரும் ஒன்றும் தன்மை அகப்பொருளில் இன்பத் தழுவலையும், தழுவியதை நினைந்து வாழ்வதையும் உணர்த்தும்.[1] வண்டு துய்த்தல் அல்லது ஊதுதல் என்பது காதலர் இன்ப நுகர்ச்சியையும் அதற்குரிய முயற்சியையும் உளப்படுத்தும்.[2] புறப்பொருளில் இக்கருத்துகள் விருந்தோம்பலையும், விருந்தினர் இன்புறலையும் உணர்த்தும்.[3] வண்டின் இடப்பெயர்ச்சியும்[4] வண்டினை ஓட்டும் செய்கையும்[5] காமம் நீக்கிக் கடமையாற்றுதலைத் தெரிவிக்கும்.

---

1. இன்பத் தழுவல்

நற்: 27:1,2; 56:1,2; 76:6; 105:8,9; 112:3; 161:2,3; 168:1; 173:8; 176:2; 185:9,10; 190:5; 197:7; 211:8; 235:8; 238:3;

244:2-4; 249:5,6; 270:2; 277:6-8; 297:7; 311:9-11; 348:5,6; 399:1-3.

குறுந்: 30:4,5; 175:1-4; 211:4-6; 254:1-3; 260:1,2; 265:1,2; 321:2.

ஐங்: 40:5; 82:2-4; 88:1; 89:3; 90:1,2; 93:4,5 226:2,3; 254:2,3; 256:2; 267:4; 342:2,3; 364:1-3; 370:1,2; 383:1-4; 406:2-4;

416:1-5; 417:1-4; 447:2-4; 489:1,2; 494:1;

கலி. 17:15,16; 28:12,16; 30:2-4; 11;12; 32:9;
33:5; 35:10; 43:8,9; 45:16,17; 46:1-6;
64:12; 66:1-8; 71:1-3; 74:1-5; 78:1,2;

79:16; 80:25,26; 96:25-54; 98:2; 119:7,8;
123:1,2,5; 127:1-3; 131:9,10,45.

அகம். 4:10,11; 22:13; 25:9; 41:2,3,13; 46:5,6;
59:1; 74:8; 82:6; 104:1,2; 108:15,16;
124:12; 128:9; 131:3,4; 132:9-12; 136:27,2

138:17,18; 149:17; 152:16,17; 153:16,17;
164:5,6; 170:2-6; 180:6; 183:11,12;
184:6; 198:8; 204:6,7; 218:20; 231:14,15;

237:4; 238:12,13; 242:1,2; 244:4-6;
245:15,16; 250:3; 262:1; 277:17,18;
290:14; 302:6; 304:11; 308:12; 317:10,13;

319:10; 324:11; 340:18; 355:5-7; 368:15;
370:10; 371:12,13; 379:10; 381:18-20;
388:8; 391:5.

முல் லை. 8,9

2. நற். 17:10; 25:1-4; 9,10; 112:2,3; 187:8;
214:4; 290:8,9; 323:7,8; 342:8;
344:6,7; 366:5,6.

குறு. 306:5,6; 370:1,2;

ஐங். 67:4.

கலி. 22:7; 26:9,13; 33:23; 34:6;12,16; 35:9,10;
36:3-6; 64:12; 78:1-10.

அகம். 41:2,3; 130:12; 176:7; 234:12,13; 257:7-9;
260:2; 298:12,13.

மதுரை. 573;574,684,685.

குறிஞ்சி. 111,115,147-149.

3. விருந்தோம்பல்

நற்: 118:9,

பதிற்: 51:6,7; 81:24.

அகம். 94:6; 161:10; 213:4,5; 280:13; 291:10,11; 317:7; 345:12; 381:15,18-20.

புறம். 24:10; 70:11-13; 105:2,3; 227:9

சிறுபாண்: 23,24; 75-77,87,88,184,185,254,255

மதுரை. 253,596,654-656,700,701,717,718,

மலை. 466,486.

4. அகம். 71:3,4

5. நற். 202:5,6

6 கலி. 46:1,2

அகம். 204:10,11.

6.2.5.2.

பூக்களைக் குயில் கொழுதுதலும்,[1] தலைவி கொழுதும் செய்கையும்,[2] இன்ப நாட்டத்தைக் காட்டும்.

பூக்கள் விலங்கினத்துக்கும்,[3] பறவைகளுக்கும்,[4] உணவாதல் தனிப்பேரன்பு மாட்சியைத் தெரிவிக்கும்.

தெய்வப் பாட்டில் வண்டும், மலரும் இடம்பெற்றால், பிறர் இன்புறுதற்கு வழிபாடு செய்தலையும், உலகம் வாழ நோன்பு இயற்றுவதையும்,[5] குறிப்பிடும் தன்மையுடையன.

தேனும் தேனடையும் இல்லறப்பயன் உள்ளது என்பதையும் அப்பயன் வேண்டும் என்பதையும் உணர்த்தும்.[6]

---

1. குறுந். 192:5; கலி.34:8; அகம். 229:15-19.
2. நற். 106:6-8
3. குறுந். 170:1-4; ஐங்.217:1-4; அகம்.15:13-16; 95:6-9; 149:3,4; 157:5-7; 321:4-6; 331:1-4; 349:10,11.
4. " நாரை, அறைக் கரும்பின் பூவருந்தும் "-புறம்.384:2,3
5. திரு. 72-76,199,203.
6. நற்.1:3,4; 168:2; 183:9; 268:3-5; 282:3; 292:1-3; 396:2. குறுந். 3:3,4; 49:1; 175:1-4; 392:7,8; கலி. 39:7-9; 40:12,13; 41:13; 42:22

   அகம். 58:5,6; 132:12; 228:1; 242:18-23; 322:12; 348:5.

   " விளையா இளங்கள்நாற " – அகம். 400:21

   என்பது வதுவை முயற்சியொடு வரும் மாட்சி உணர்த்தும்.

புறப்பொருளில் எல்லாரும் இன்புற்றிருக்க உதவும் பண்புடைமை காட்டும்.[1]

6.2.7.1.

சிறிதே அரும்பிய தோற்றம் என்பது, அன்பு முதிர்ச்சியும் ஆழமும் அறியாத பேதைமையைக் காட்டும்.[2]

6.2.7.2.

காதலன்பு நிலை முதிர்ந்து முயற்சி விளைக்காமையையும் வருவைக்கு முயலாத பேதைமையையும் குவிமுகைத் தன்மையும்போது நிலையும் காட்டும்.[3]

---

1. புறம். 42:15; 375:9; திரு.299:300; பொருந.214; சிறுபாண். 51,81
2. நற். 54:9; 94:5,6; 122:4; 224:3; 230:1-3; குறுந். 53:2; 81:2; 126:3-5; 127:2; ஐங்.1:4; 30:1; 132:2; கலி.101:1; அகம். 10:2,3; 30:13; 176:5,8; 362:5.
3. நற். 188:1-5; 203:3; 211:8; 225:3; குறுந். 81:3; 117:1; 185:5-7; அகம். 242:1.

6.2.7.3.

போதும் பெருமுகைத் தோற்றமும் ஏற்ற செவ்வி பெறாத ஏமாற்றத்தைக் காட்டும். 1

புறப்பொருளிலும் விரும்பும் நிலைமை கைகூடாத தன்மையை முகை நிலை தெரிவிக்கும். 2

6.2.7.4.

முகையினை வலிய மலர்த்தல் என்பது பெரிதும் முயன்று உறவாக்கிக் கொள்ளுதலை உணர்த்தும். 3

---

1. குறுந். 127:2; 148:1-6; 155:2; 162:4; 186:2,3; 188:1,2; 191:5,6; 358:5-7; 370:1,2, ஐங். 6:4; 232:1; 454:1-4; 461:1,2; கலி.22:9; 15; 27:4; 32:16; 56:23; 58:4; 59:4; 117:2,3 118:9,10; 121:9; 145:39; அகம்.24:1-3; 85:12; 130:3,4; 162:12; 191:14,15; 229:16; 237:3; 240:11; 273:3; 291:23.
2. புறம். 144:8,9; 336:10.
3. நற். 203:3-6; 239:4-7; 345:1-5; 366:7-10; ஐங். 40:4,5; 50:2,3; 151:2,3; கலி. 72:6-8; 78:25,26; 83:11-13; அகம். 160:11,12; 180:6; 298:12,13; திரு. 198:199; மதுரை. 567.

6.2.7.5.

போது உடைதல் என்பது மனநெகிழ்ச்சியின்றியே கூடுவதைக் காட்டும்.[1]

6.2.8.1.

பூந்தாது உதிர்ந்து நிலத்தில் சிதறுதல் என்பது இளமைச் செவ்வி பயனின்றிக் கழிதலைக் காட்டும்.[2]

6.2.8.2.

பூந்தாது சிதறித் தளிர்மீது படிதல் என்பது மனத்தின் ஆசை சிதறுவதை உணர்த்தும்.[3]

---

1. நற். 87:6; 176:6; 231:6,7; கலி. 78:3;

 " நெஞ்சு உடைந்து நோகும்வண்ணம் ஏற்படும் துயரமும் போது உடைதலால் அறிவுறுத்தப் படுவதுண்டு. "

 " கூடி மகிழும் செவ்வி கூடாத துயரம் " –ஐங். 343:2,3
 " வரைவுக்கு முயலாமை பற்றிய துயரம் " – அகம். 238:15.

2. நற். 74:6–8; 87:6–9; 157:8–10; 203:5; 249:4; 299:2–4; 319:1,2; 359:2; 375:1; குறுந். 46:4; 48:1; கலி. 27:6; 33:12; 34:8; 73:8; 108:60–6 121:13; 131:10; அகம். 23:3,4; 80:12; 320:10 355:7.

3. கலி. 29:7–9; 35:3,4; 77:8,9; அகம். 41:12,13; பட்டின. 152; 153.

6.2.8.3.

பூந்தாது மலரிடைச் சிதறுதல் என்பது இன்பத் தொடர்பினையும் மணவுறவினையும் எதிர்நோக்கும் தன்மையைக் குறித்துக் காட்டும்.[1]

6.2.8.4.

பூந்தாது சிற்றில் அமைக்கப் பயன்படுதல் என்பது காதல் கனிந்து கற்பு மலர்வதை எதிர்நோக்கும் தன்மையைப் புலப்படுத்தும்.[2]

6.2.8.5.

பூந்தாதும், காயின்கண் உள்ள பொடியும் ஒப்பனைக்குப் பயன்படும் நிலை என்பது பெருகிய வளத்தையும் ஏமர் வாழ்க்கையையும் காட்டும்.[3]

---

1. நற். 78:2-4; குறுந். 399:1-3; ஐங். 189:1-4; அகம். 25:9-11.

2. அகம். 230:6-8; 250:3-5; 341:9,10.

3. அகம். 353:19
பெரும். 220:223.
" ஈட்டும் பொருள் வளமை காட்டுவது " - அகம். 85:10,11
" பூந்தாது பன்றிமீது படிதல் "- அகம். 178:9-11
வரைவொடு வந்த வளத்தை உணர்த்தும்.

6.2.8.6.

பூந்தாது மயில்மீது படிதல் வதுவைக்கோல மாட்சியை நினைவூறுத்தும். [1]

6.2.8.7.

காஞ்சித்தாது எருமைப் புறத்துப் படிதல் என்பது, காமக் களிப்பின் பெருக்கத்தையும், பரத்தையொடு வதுவையயர்ந்த வளத்தையும் காட்டும். [2]

6.2.8.8.

பூந்தாது தலைவன் மேனியில் படத் தழுவியமை, அன்பு செறிந்த இன்பத் தழுவலைக் காட்டும். [3]

6.2.9.1.

கயமலர்களை எருமையுண்ணுதல் என்பது புறப்பொருளில் பெருகிய வளத்தினை உணர்த்தும். [4]

---

1. நற். 396:1-5; அகம். 378:2-4;
2. அகம். 56:3-6
3. அகம். 142:23,24.
4. ஐங். 91:1,2; 93:1; பதிற். 13:3,4; அகம். 100:16, சிறுபாண். 41-45.

தலையில் சூடி ~~ப்ரிந்~~ உதிர்ந்தவற்றை மேய்தல் -பதிற். 13:5,6.

6.2.9.2.

கயமலர்களை எருமையுண்ணுதல் என்பது அகப்பொருளில் தலைவனது தன்னல வேட்கைப் பெருக்கத்தையும், இன்பச் செவ்வியில் எளியனாம் தன்மையையும் காட்டும். 1

6.2.9.3.

தாமரை குலமகள்; ஆம்பல் பிறமகள் 2

6.2.9.4.

கருங்குவளை குலமகள் எனில் வெண்ணெய்தல் பிறமகள் .3

---

1. நற். 260:1, 290:1-3, 395:6-8, அகம்.46:5-6, 56:3-5, 316:2.

2. குலமகள்: நற்.260:2, 300:1-4, ஐங்.20:2, 53:3, 65:1, 68:2, 94:4, கலி.71:1-8, 72:7, 73:1-5, 74:3, 77:1-7, 78:1, 79:1-7
   அகம்.106:1.

   பிறமகள்: நற்.100:1-3, 230:1-5, 280:2, 290:1, 300:1-4, குறுந். 370:1, ஐங்.21:2, 41:2, 57:2, 68:1, 96:2, கலி.72:6.

3. ஐங். 2:3.

6.2.9.5.

குவளைப் பன்மலர் என்பது காமக் கிழத்தியரைக் குறித்தல் இயல்பு.[1]

6.2.10.

தாவரம் இரண்டின் மலரும் மணமும் செறிதல் என்பது இருவேறு குடிப்பிறந்தார் வதுவையாய் இணைதலை உணர்த்தும்.[2]

6.2.11.

முல்லை மலர், மனக்கட்டுப்பாடு என்னும் கற்புத் திண்மையை உணர்த்தும்.[3]

6.2.12.

புலவு நாற்றத்தை மலர்மணம் போக்குதல் என்பது அலர் நீங்க வரைந்து கொள்ளுதலை உணர்த்தும்.[4]

---

1. அகம். 36:3,4; 56:4,5
2. நற். 49:8,9; 96:1-3; 167:8,9; 235:3; 315:6,7 367:8,9. குறுந். 318:2,3; ஐங். 103:1-4; 182:1,2 அகம். 70:9; 180:12,13; 270:1-3; 272:8.
3. நற். 142:10; ஐங்.408:2; பதிற். 21:33; கலி.32:16, அகம். 274:12; 314:19,20; சிறுபாண்.30 முல்லை.9,10.
4. நற். 163:7-12; 203:4-6; குறுந். 351:5-8; ஐங்.10: அகம். 130:8.

6.2.13.1.

நறுமணமில்லா மலர்கள் பொருள் வறட்சியையும் அன்பு வறட்சியையும் தெரிவிக்கும்; பாலைத்திணைக்குரிய பிரிவின் ஆற்றுமையைப் புலப்படுத்தும். [1]

6.2.13.2.

நறுமணமில்லா மலர்கள் வெறுப்புணர்ச்சியாம் புலவிக் குறிப்பினை உளப்படுத்தலும் உண்டு. [2]

---

1. நற். 124:4; ஈங்கை: 193:1,2; 241:5,6;
வேழம்: நற். 366:7-9; குறுந். 35:2-5; கரும்பு: 85:4,5
குறுந். 103:2; கலி. 149:3; கரும்பு (பெற்றோர் அன்பின்மை).

குறுந். 315:3,4; நெருஞ்சி: 330:2-4; பகன்றை (மண மில கமழும்) ஐங். 4:4; கரும்பு. 12:1; 13:2; 14:1; 16:1; 17:1; ஐங். 338:1-3; இலவம்: 456:1-5; கலி. 31:15;

அகம். 1:16: முருங்கை: 3:15: கவிர். 9:1-9; இருப்பை: அகம். 11:3-5; 13:22; 53:4; 125:2,3; ஈங்கை: 185:11,12: இலவு: அகம். 217:4-10: கரும்பு, பகன்றை, அவரை.

தோன்றி: அகம். 223:5,6; முருக்கு: 229:14-18; முருக்கு: 235:8-12; கரும்பு: முசுண்டை, அகம். 243:1,2; 243:14,15; இலவம்: 294:5-9; அகம். 306:3; 335:13:18,23; கமுகு: 367:11,12 -கவிர்: நெடு. 13- முசுண்டை, பட்டின. 162,240; கரும்பு: வரைவிடைப்பிரிவு: ஐங். 209:3; - அவரைப்பூ.

2. குறுந். 107:1; 110:4,5; ஐங். 97:1; அகம். 116:6; 176:10.

6.2.13.3.

" ஏறிய மடற்றிறம் " என்பபடும் அன்பின்மையைப் புலப்படுத்து-வதும் நறுமணமில்லா மலர்களே. ஆவிரை, எருக்கு, பூளைப்பூ, என்பனவே மடலேறும் தலைமகன் சூடும் மலர்கள். [1]

6.2.14.1.

மலர் கூம்புதல் என்பது, பிரிவினால் மனம் சோர்தலை உணர்த்தும். [2] பெருமழையில் மலர் குழைதலும், பனியால் கரிதலும் மனத்தின் ஆற்றாமைக் கலக்கத்தினை உணர்த்தும். [3]

6.2.14.2.

வாடைக் காற்றினால் மலர்கள் துயல்வரல், தண்டு ஒசிதல் ஆகியவை, ஆற்றாமையால் நொந்த மனத்தின் நடுக்கத்தைக் குறிக்கும். [4]

---

1. கலி. 138:18,19; 139:8,9; 140:4-7;
2. நற். 117:3; 187:1; 382:2; 388:1; குறு. 46:1; 55:1; 122:1,2; 376:4; ஐங். 116:2; 183:5; கலி. 119:5; 121:5; 130:12; 134:8; 148:6; அகம். 40:1; 150:10; 260:8; 350:1.
3. அகம். 163:1,2,8; (முள்ளி கரியும் முன்பனிப்பானாள்) - அகம். 163:8.
4. அகம். 78:8-10; 217:4,5; 223:5-7; 255:14,15

6.2.14.3.

மலர்வாடுதல் என்பது புறக்கணிப்பினால் மனம் வாடுதலைக் காட்டும். [1]

6.2.14.4.

மலர் நசுங்குதல் என்பது மனம் புண்ணுறுதலைக் குறிக்கும். [2]

6.2.14.5.

சூடப்படாத மலர் என்பது தழுவப்படாத தனிமைத் துயரம் உணர்த்தும். [3]

6.2.14.6.

அதுவே புறப்பொருள் பாடலின் வரும்போது பயனற்ற வாழ்க்கையைக் குறிக்கும். [4]

---

1. நற். 11:1,2; 260:8-10; 315:11,12; 350:8; 359:7; 363:7; குறுந். 9:1, 1-3; கலி. 3:9,5:14, 15; 23:13; 41:31; 75:18; 78:2; 86:19,20; 147:15; அகம். 5:24,25; 211:1,5,6; 363:4. பட்டின. 10-12.
"பெற்றோர் ஆற்றுமைத் துயரம்" - குறுந். 343:5,6; அகம். 165: 10,11.

2. நற். 53:8; 161:7; 183:9-11; 239:6,7; 363:7; 372:2,3; குறுந். 185:5-7; 227:1-4; 336:3-6; 349:1,2.

3. குறுந். 9:23; கலி. 68:15

4. புறம். 235:17-20.

6.2.15.1.

தலையில் மலர் இடம்பெறுமை என்பது பிரிவினால் ஏற்பட்ட பெருந்துயரம் காட்டும். [1]

6.2.15.2.

புறப்பாட்டில் தலையில் மலரின்மை குறிக்கப்பெறின் கையறு நிலையும் [2] போர்முற்றுகைத் துயரமும் [3] காட்டும். கிளையை வெட்டுதலால் பூ உதிர்தல் என்பது கைம்மையை உணர்த்தியது. [4] தாழியில் பல மலரில்லாமை என்பது மகட்போக்கிய தாயின் மனத்துயரம் காட்டுவது. [5]

6.2.16.

பாடலில் மலர் இடம்பெறுவிடின், அகப்பாட்டேயாயினும், உணர்ச்சியினும் அறிவே சிறந்துள்ள நிலை புலப்படும். [6]

---

1. குறுந். 192:5,6; கலி.77:16,17; 80:23; அகம்.144:
2. குறுந். 19:1,2; புறம்.235:18-20; 242:1-3; 247:5
3. புறம். 44:6,7
4. புறம். 224:13-17
5. அகம். 369:6
6. நற். 208:210,217,226,229,233,234,240,324,33
குறுந். 7,15,23; கலி.4,6,8,9,10,11,18-21,24,50
அகம். 8,29,32,55,122,151,155,169,173,193,20
311, புறம். 182,192. ( பிறவும் உள.).

6.2.17.1.

மலர்சூடிய தோற்றம் வளமான வாழ்க்கை மகிழ்ச்சியை உணர்த்து

---

1. நற். 119:8,9; 121:7; 125:9; 128:9; 145:1-3;
150:8; 161:8,9; 187:8; 190:4; 200:1,2;
238:1,2; 245:2-5; 266:1-3; 269:3; 273:9;

314:3,4; 339:7; 342:8,9; 361:1,2; 367:8-10;
376:5-8: குறுந். 281:3,4; 321:2; 326:1,2;
336:2; 358:6; 386:3,4; 401:1-3; ஐங்.87:1;

439:2; 476:1-3; பதிற். 21:20:27:2-4; 30:9;
40:9; 24; 41:8-10; 43:16; 46:1,4; 48:11;
62:17; 76:11,12; 81:22. கலி. 36:1,2; 51:2,

~~[illegible]~~

கலி. 52:8; 102:5,6; 103:1-4; 104:52; 105:6
134:1; 135:18; 150:1. அகம். 1:1; 5:23,24;
6:1; 14:7,8; 44:9; 49:16; 60:10; 76:7/8

83:1,2; 94:5,6; 118:2; 127:13,14; 138:5;
141:12; 158:8; 180:2; 182:1; 191:1-4;
213:4,5; 216:8-11; 264:3-6; 270:1-3;

280:1,2; 301:11-15. புறம். 24:8-11; 100:3-
திரு. 199:200; பொருந. 219; பெரும்.59:60;
174,218,296; மதுரை. 265,311, நெடு. 54,
பட்டின. 64,65,85,88,91,109,110; மலைபடு.427-4
459,466.

6.2.17.2.

அகப்பொருளில் மலர்சூடிய மங்கலத் தோற்றம், இன்பத் தழுவலுக்கு ஏற்ற செவ்வியைப் புலப்படுத்தும். 1

---

1. தலைவி:- நற். 42:11,13; 52:1-5; 264:5; 337:3-
357:8; 366:5-7; 367:7-10; ஐங்.91:4;
(கரும்பின் பூ - 'காமஞ்சாலா இளமை ')
ஐங். 191:2.

361:3; 408:2; ஐங்.417:4; 496:5; பதிற். 81:24;
கலி.32:16,17; 56:2,3; 60:2; 64:3,4; 107:6-10;
29-31; 113:25; 115:5,6; அகம்.59:14; 104:17:17;

142:23; 188:8-10; 223:14,15; 225:14.

தலைவன்:-

நற். 234:8; 304:10; 357:9; 376:5-8; ஐங்.182:1,2,
362:3,4; பதிற்.88:31.; கலி. 39:3; 66:11; 90,15,1
91:1-3; 108:10; 111:7; 112:2,3; 115; 4,5;

அகம். 28:6; 38:1,2; 48:8;8-10; 102:11; 128:9;
250:7; 282:9,10; 288:3,4; குறிஞ்சி. 103,104,
111-118,122.

பரத்தை:-

குறுந். 80:1; ஐங்.54:5இ 121:2; 127:2; கலி.70:9;
72:19;78:17,18; 88:18; மதுரை:447,551,564,567,
581.

6.2.18.1.

சூடிய மலரை நீக்குதல் ஆற்றுத் துயரத்தை உணர்த்தும்.[1]

6.2.18.2.

சூடிய மாலையைச் சிதைத்தலும் அறுத்தெறிதலும் ஊடலைக் குறிக்கும்.[2]

6.2.18.3.

மலரையும் மாலையையும் தாக்கும் கருவியாகப் பயன்படுத்துதல் என்பது, கூட்டக்கருதும் ஊடலைப் புலப்படுத்தும்.[3]

6.2.18.4.

தழுவுதலால் தார் குழைதல் என்பது காம நுகர்ச்சிநிலையைக் காட்டும்.[4]

---

1. கலி. 23:13.
2. கலி. 90:15,16; அகம். 306:13.
3. பதிற். 52:20-24; பரி.9; 39-47; கலி.128:18,19;
4. நற். 20:11; குறுந். 383:1,2; பதிற். 79:6,7; கலி.12,13; 68:14; 73:12; 78:13,14; 112:3; அகம். 1:10; 75:12,13; 144:9; 206:9,10; புறம். 73.

6.2.18.5.

குழந்தையின் கையால் மாலை அறுபடல் என்பது, மகப்பேற்று இன்பமாட்சியை உணர்த்தும்.[1]

6.2.19.1.

மலர்சூட்டுதல் என்பது அகப்பொருளில் நெகிழ்ச்சியுடன்கூடிய மகிழ்ச்சியைக் காட்டும்.[2]

6.2.19.2.

வாடுமலர் சூட்டும்நிலை, நெஞ்சு நெகிழ்ந்த அழுகையினை உணர்த்தும்.[3]

6.2.19.3.

புறப்பொருளில் மலர்சூட்டுதல் என்பது, மனம் நெகிழ்ந்து பணிதல், பாராட்டுதல், வரவேற்றல், வாழ்த்தல் என்னும் நிலைகளைத்

---

1. கலி. 79:15,16; 80:15,16
2. நற். 204:3,4; 214:4,5; 313:1-5; ஐங்.294;3-5; 396:1-3; 463:1-3; 495:3; கலி.111:12,13; அகம். 180:5-7இ 221:7-9; 257:5-7; 261:1-4; 389:2-6; 391:4-7; புறம்.146:9-11; திரு.20-30; 198-200.
3. அகம். 165:11.

தெரிவிக்கும்.[1]

6.2.10.

நீர் அல்லது நெல், பொன், மலர் என்பவை முறையே அறம், பொருள், இன்பம் என்பவற்றை உணர்த்தும்.[2]

6.2.21.

குழிமறையப் பூ உதிர்தல் என்பது பழிநீக்கி இன்பம் பெறுதலை உணர்த்தும்.[3]

6.2.21.1.

நண்டுவளை நிறையும்படி நெற்பூ உதிர்தல் என்பது, வறுமையை விரும்பிப் பொருள்மிகக் கொணர்ந்து மகட்கொடை வேண்டுதலையுணர்த்தும்.[4]

---

1. வழிபாடு:— நற். 321:3-5; குறுந். 214:5-7; அகம் 22:8; 382:3; புறம். 95:1.

பாராட்டு:— பொருந. 159, 160; பெரும். 480-482; மதுரை. 103, 225.
வரவேற்றல்: நற். 145:1-4; அகம். 269:2;
வாழ்த்து: அகம். 136:10-14.

2. "ஏர்பரந்த வயல் நீர்பரந்த செறுவின்
நெல் மலிந்த மனை பொன்மலிந்த மறுகின்
படுவண்டார்க்கும் பன்மலர்க் காவின்" — புறம். 338:1-4.

3. ஐங். 208:1-5

4. ஐங். 301:3.

6.2.21.2.

நிலவெடிப்பில் பூ உதிர்தலும், [1] பாதை மறையப் பூ உதிர்தலும் பொருட்குறை நிரப்புதலைத் தெரிவிக்கும்.

6.2.21.3.

சிதறும் மலர்கள் இடப்பெயர்ச்சியை அறிவுறுத்தும். [3]

6.2.21.4.

உதிர்ந்து சிதறும் மலர்கள் உடன்போக்குப் பிரிவினைத் தெரிவிப்பன. [4]

---

1. அகம். 53:2,3.
2. குறுந். 329:1-3
3. நற். 322:12; குறுந். 53:4; ஐங்.345:2,3; 350:2; அகம். 78:8; 225:12; 227:8,9; 317:6,7; சிறுபாண்: 4,5; குறிஞ்சி. 196,197.
4. நற். 28:6; 51:11; 76:7; 106:6-8; 144:9; 149:6; 199:1-4; 218:2; 257:5,6; 267:4,5; 271:7; 384:6,7. குறுந். 47:7; 53:2; 56:2; 138:3-5; 247:5,6; 299:3; 397:1-3; ஐங்.308:2; கலி. 41:10,11; 48:10,11; 121:13,14; 132:18; அகம். 17:18-21; 99:1-9; 107:20; 153:15-18; 202:3-7.

6.2.21.5.

உதிர்தலும் சிதறலும் பொருட் பிரிவினைப் புலப்படுத்தும்.[1]

6.2.21.6.

பூக்கள் மக்களால் கொய்யப்படுதலும்,[2] நீர்ப்பூ அரியப்படுதலும்[3] இடப்பெயர்ச்சியை வலியுறுத்தும் குறிப்பு உடையன; அதாவது வரைவு கடாவும் கருத்தினைத் தருவன.

---

1. நற். 79:1-3; 124:4-6; 286:1-3; 343:1; குறுந். 50:1-3; 110:5,6; 282:3-6; 329:1-3; 348:1-4; 380:5,6; ஐங். 320:1-3; 328:1; கலி.

   கலி. 7:15,16; 23:2; 31:3,4; 32:1-5; 33:4,11; அகம். 1:16-19; 14:1,2; 21:9-13; 74:6,7; 84:8; 101:15,16; 133:14,15; 134:9,10;

   141:25-28; 199:1-4; 205:20; 211:1-6; 243:1;

   பூவுதிர்தல் என்பது உள்ளத்து அன்பின் இடப்பெயர்ச்சியையும் ஓரிடத்தில் குறிக்கின்றது. - அகம். 26:1-3.

   பெற்றோர்க்கும் களவுக் காதலனுக்கும் ஏற்றவாறு தன் நடைமுறையை மாற்றி அமைக்கும் தலைவியின் நிலைமையைப் பூ உதிர்த்தல் என்பது புலப்படுத்துகின்றது. - குறுந். 312:5.

2. நற். 254:2; 283:1,2; 313:1-3; 349:2,3; குறுந். 26:3; 311:5-7; ஐங். 297:1,2; 344:2,3; அகம். 302:5.

3. நற். 195:5-9; 275:1-6; 317:9,10; 332:2; 349: குறுந். 144:1.

6.2.21.7.

பூக்கள் உதிர்ந்து மணலை அழகுபடுத்தும் தோற்றம் வதுவை முயற்சியை நினைவுபடுத்தும் குறிப்பினது.[1]

6.2.21.8.

மலர்கள் மணலை அழகுபட வரிக்கும் தோற்றம், வரைவு மலிதலையும் காட்டும்.[2]

6.2.21.9.

வினைமுற்றி மீள்வான் மனையை நாடும் மகிழ்ச்சித் தன்மையும் மணலில் மலர் வரிக்கும் காட்சியால் உணர்த்தப்படுதல் உண்டு.[3]

6.2.21.10.

ஒருவகைப்பூவின் இதழில் வேறு சிறுமலர்கள் உதிர்ந்த அழகு என்பது, வினைமுற்றி மனைக்கு மீளும் தலைமகனது உவகை மாட்சியும் பொருள் வளமையும் புலப்படுத்தும்.[4]

---

1. நற். 91:1,2; 159:6; 232:7,8; 267:4,5; 283:1-3 குறுந். 51:1-3; 53:2-5; 318:2,3; ஐங்.17:2,3; 219:1,2; கலி.49:23,24; அகம்.182:16,17; 232:7-9; 360:17,18.

2. அகம். 70:9,10.

3. ஐங். 483:1; 485:4; 495:1,2; அகம்.114:2,3; 133:4; 134:3-5; 154:4,5; 237:1,2; 324:9-11; 345:15,17.

4. ஐங். 422:1-3; அகம்.9:5-9; 317:8-11.

பாசறைத் தலைமகன் மனையை நினைக்கும் தன்மையும் உதிர் மலர் வனப்பினால் உணர்த்தப்படுதல் உண்டு.[1] பூவினில் பூவிழும் காட்சியால் கணவனை எதிர்நோக்கும் மனைவியின் ஆர்வமும்உவகையும் புலப்படும்.[2]

6.2.21.11.

மழைத்துளி போல மாம்பூத்திரள் உதிர்ந்த தோற்றம் இன்பியற் செவ்வி வாய்த்தலைக் காட்டும்.[3]

6.2.21.12.

வேப்பம்பூவும்,[4] வேங்கைப்பூவும்,[5] உதிர்ந்து சிதறி மணலில் விழுந்த நிலை, எண்ணம் சிதைந்து சிதறும் துயரம் குறிப்பன.

6.2.21.13.

புறப்பொருளில் பூவுதிர்தல் ஊழ் முதிர்ச்சியை உணர்த்தும்.[6]

---

1. அகம். 304:13-16;
2. ஐங். 311:1; 383:1-3; 396:1,2
3. அகம். 236:7,8
4. புறம். 371:6-8
5. அகம். 292:11-13
6. புறம். 298: 302; திரு. 298,302; பெரும். 497.

6.2.21.14.

வேங்கை மலர்கள் பாறை மீதும் வேறிடத்தும் உதிர்ந்த தோற்றம் புலியை நிகர்த்துக் காட்சி தருதல் உண்டு. இந்தத் தடுமாறு தோற்றத் தன்மை புறப்பொருளில் ஏமாற்றத்தைக் குறிப்பது. 1

6.2.21.15.

அகப்பொருளில், தடுமாற்றத்தோற்றம் என்பது களவுத் தலைமகன் வதுவைக்கு முயற்சி செய்யல் வேண்டும் என்பதை அறியாது தடுமாறிக் களவில் திளைக்க விரும்பும் பான்மையை உணர்த்தும். 2

6.2.21.16.

மருதத்திணையாயின், குலமகளுக்கும் பிறமகளுக்கும் வேறுபாடு காணமல் மயங்கி ஒழுகும் தன்மை உணர்த்தும். 3

---

1. புறம். 202:17-20.
2. பாம்பின் தோற்றம்: நற். 14:4; 4-9; குறுந்.185:5-7; 239:3-5; கலி. 45:1-7; அகம். 138:17-19.
   புலிபோல்வன: நற். 217:2-5; 249:3-7; 323:7-11; குறுந். 47:1,2; கலி.38:6; 46:1-5; 48:1-7; 49:1-9; அகம்.12:9-11; 228:8-12; 368:5-7;
   யானைப்புகர்முகம்போல்வன: நற். 176:5,6; குறுந்.284:1
3. நற். 230:3,4; குறுந். 127:1,2; ஐங்.2:4; 12:1

6.2.21.17.

பொருளீட்டச் செல்வதா செலவழுங்குவதா என்னும் தடுமாற்றத்தையும் உணர்த்தும்.[1]

6.2.22.1.

மலர்கள் உதிர்ந்து நீரில் விழுந்த தோற்றம் புறப்பொருளில் வளமை இனிமை உவகை வழிபாடு வணக்கம் ஆகியவற்றை உணர்த்தும்.

பரிசில் பெற்று மீளும் கலைஞர் மகிழ்ச்சி ஆற்றுப்படையிலும் மதுரைக் காஞ்சியிலும் காட்டப்பட்டது.[2]

6.2.22.2.

நீரோடுகூடிய மலரின் நிலைமையில் அகப்பொருளில் வகைவயின் பொருட்டுத் தலைவனை வேண்டிக் கொள்ளும் குறிப்பு உணர்த்தப்படும்.[3]

---

1. அகம். 199:1-5.
2. மதுரை. 338-341; மலைபடு. 51-53
3. நற். 195:1-9; 272:7,8; குறுந். 163:4; கலி. 48:15; 131:37,38; அகம். 18:1,2; 68:2,3; 298:4-6; குறிஞ்சி. 247:248.

6.2.22.3.

" மகட் போக்கிய தாயின் கனிந்த வேண்டுகோளும் உள்ளது.[1]

6.2.22.4.

ஆற்றாமையால் நொந்து வேண்டிக் கொள்ளும் தன்மையும் உள்ளது.[2]

6.2.22.5.

நீரும் மலரும் இசைந்த பொலிவினால் காமக் களிப்பும் அன்பின் வழிப்பெறும் இன்ப மேம்பாடும் உணர்த்தப்படுதலும் இயல்பு. [3]

6.2.23.

பூச் சிதறுதலாகிய வழிபாட்டு நிகழ்ச்சி என்பது, மங்கலமுடைய நல்ல பொருட்களை விரும்பிப் படைக்கும் இனிய மனப்பான்மையை உணர்த்துவது. [4]

---

1. அகம். 219:4,5
2. நற். 193:1-4; அகம். 294:3; 299:4 395:1-3; 398:11-14;
3. நற். 53:6-8; 67:6; 68:4.5; 91:1,2; 119:6; 139:9,10;159:2; 197:6,7; 203:4-6; 334:3,4; குறுந்.134:3-5; 317:3,4; 387:1-3; ஐங்.69:1-4: 72:4; 367:1-3; 395:4,5; கலி.30:15,16;33:3-5; 34:1-6; 35:5-10; 9,10;36:7,8;கலி.44:1-7; 45:1-3;8,9;67:1-3;98:10,13-18;34:35;அகம். 126:3-5;133:8-10;184:9-11,252:9-11,324:9-13
4. திரு.188;218,229;பெரும்.338;முல்லை.8-10;குறிஞ்சி.5; பட்டின. 160,178, 248,252.

6.2.24.1.

தாழை மடல்கள் களவுக் காலத்தில் தாயர் காவலும் கட்டுப்பாடும் உணர்த்துவன.[1]

6.2.24.2.

துறைமுகக் காவலின் செறிவினை உணர்த்தவும் தாழை மடல்கள் பட்டினப் பாலையில் அமைகின்றன.[2]

6.2.24.3.

இலை சூழ் மலர் என்று வருவதும், இற்செறிப்புக் காவலை யுணர்த்தும்.[3]

6.2.25.1.

முள்ளுடை மலர் இடம்பெறுதல் நெஞ்சு புண்பட்ட தன்மை காட்டும்.[4]

---

1. நற். 19:1,2; 178:5; 191:5; 203:2; 211:7; 235:2; 335:4; 363:1; 372:13; குறுந். 304:7; 340:4; குறுந். 345:5; அகம். 90:3; 100:18; 130:5,6; 170:9-11; 180:11,12; 210:12; 330:11-14; 340:23.
2. பட்டின. 118
3. நற். 287:5
4. குறுந். 49:1; அகம். 236:1.

6.2.25.2.

புறப்பொருளில் நாட்டுக்கு ஏற்படும் அழிவுத் தீமையால் உண்டாகும் அவலத்தைக் காட்டும்.[1]

6.2.26.

தழை உடுத்தல் என்பது இன்பியற்கேற்ற இளமைச் செவ்வி பொருந்தியமை காட்டும்.[2]

6.2.27.

இருப்பைப்பூ என்பது பாலைப் பாட்டுகளில் செல்வப் பொருளின் ஈட்டத்தைக் குறிக்கும்.[3]

---

1. பட்டின. 236
2. நற். 8:1-5; 80:4,5; 96:7-9; 123:5-7; 155:2; 173:1; 204:1,2; 320:3; 368:3,4; 390:4-6; குறுந். 125:3; 159:1; 214:3,4; 293:5,6; 294:1-7; 295:1-3; 333:3; 342:5; 345:4; ஐங். 15:1,2; 52:1; 72:1,2; 73:1,2; 147:1,2; 191:3; 256:2; 296:3; கலி. 181:7-11; அகம். 7:2; 20:9,10; 28:9; 59:5,6; 70:10-12; 105:1,2; 156:8,9; 176:13-15; 188:12; 189:8; 226:3,4; 230:1-3; 275:16; 320:3; 390:6,7; புறம். 116; 1-3; 340:1; 341:2,3; திரு. 201-204; குறிஞ்சி. 101, 102; பட்டின. 91
3. நற். 111:1-5; 9-10; குறுந். 329:1-3; அகம். 9:3-9; 135:8,9; 171:13-15; 225; 10-12; 247:4,5; 267:6,8 331:1-7; 351:8.

6.2.28.1

பொன்னும் மணியும் மலர்களுக்கு உவமையாதல் என்பது செல்வச் செழுமை காட்டும்.[1]

6.2.28.2.

பெரும்பொருளீட்டி வதுவைக்கு முயலல் வேண்டுமெனக் குறிப்பால் உணர்த்தும்.[2]

6.2.28.3.

பண்டமாற்றுப் பொருள் முயற்சியைக் கருத்தில் வலியுறுத்தலும் உண்டு.[3]

---

1. பரி. 14:10,15,16; நெடு. 14.

   " உடன்போகும் தலைமகன் தன்துணைவியே பெருஞ்செல்வம் என்று கருதியமை உளப்படுத்தியது " - நற். 384:6,7.

2. நற். 221:1-4; 235:3; 239:6; 249:3,4; 257:6; 259:1,2; 278:3; 313:1-3; 396:4; குறுந். 320:6, ஐங். 217:1; 420:1,2; 452:5; குறுந். 464:1,2,

   கலி. 42:16இ17; அகம். 52:3; 70:9; 178:11; 180:14 182:1; 188:8,9; 202:5-8; 227:7; 229:13; 232:8; 240:3, 242:2; 272:16,17; 280:1, 290:15,16; 360:17,18; 376:4; 388:8.

3. ஐங். 430:1,2; 432:2; 435:3; 436:2,3.

6.2.28.4.

பொருளையும் மனைவி மாட்சியையும் சீர்தூக்கும் தன்மையைக் காட்டுதலும் உண்டு.[1]

6.2.29.1.

புறப்பொருளில் கன்னி குறுதல் கடமையுறுதியைக் காட்டும்.[2]

6.2.29.2.

கன்னியை வாழ்த்துதல் குடிமையும் செங்கோன்மையும் சிறக்க என்றும் குறிப்புடைத்து.[3]

பண்டைத் தமிழிலக்கியத்தில் காணப்படும் இந்தக் குறியீட்டியல் பூகள் வழிவழி வரும் ஏனைப் புலவர் பாடலிலும் இல்லாமலில்லை.[4]

---

1. அகம். 319:8-10; 364:4,5;
2. பதிற். 58:2; 67:13; 70:6-8

4. " எழில் மலரில் தேனில்லை என்உயிர் வண்டுக்கே " - புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார், - பாண்டியன் பரிசு, பக்.118, (செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சி), 1969, ஒன்பதாம் பதிப்பு.

என்னும் பாரதிதாசனார் பாடலில் காதலார்வம் ஏற்றுக் கொள்ளப் படாமையைக் கருதி இவ்வாறு சொல்லப்பட்டது.

தமிழ்ச் செய்யுள் உலகில் பல நூற்றாண்டுகள் அமைந்த இம்மரபுவழிக் குறியீட்டுத் தொடர்பினை நோக்கும்போது,

" குறிப்புக் கணிதத்திலும் தருக்கத்திலும் வரும் சமிக்ஞை மரபுவழி வருவது. குறியீடுகளை ஒத்தமைந்தது. இது ஆகுபெயர் நிலையையும் உடையது," [1] என்று மேலை நாட்டறிஞர் சொல்லியவையும் இவண் ஒப்பு நோக்கற்குரியன. தமிழில் உள்ள குறியீட்டு மரபுத் தன்மை என்பது ஆகுபெயர்த்தன்மையும் உருவகத் தன்மையும் கொண்டு மரபு வழி வழங்கும் நிலைமையும் உடையன என்பது அறிதற்பாற்று.

***

---

1. ரெனிவெல்லாக்கு, ஆஸ்டின்வாரன், இலக்கியக் கொள்கை, பக்.281 (குளோரியா சுந்தரமதி மொழிபெயர்ப்பு, ( கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை ) 1976, முதற்பதிப்பு.

*************************************
*                                   *
*    7. மலர்கள் கவிதைப் பொருளாதல்    *
*                                   *
*************************************

7.0. புலவர்கள் மலர்களைக் கருவியாக வைத்துத் தாம் உணர்த்த விரும்பும் செய்திகளைக் குறிப்பாக உணர்த்தினர் என்பதற்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன. அகப்பொருள் புறப்பொருள் துறைச் செய்திகளில் இவை அடிப்படைச் செய்திகளாக அமைந்து அவற்றைச் சுற்றி நுவலும் பொருள் பின்னப்படுதல் ஒரு மரபாக அமைந்துள்ளது. புலவர்கள் நம் கவிதைத் திறனையும் கற்பனையையும் இம்மலர்களைக் கொண்டு புலப்படுத்தியுள்ளனர்.

7.1.

அறத்தொடு நிற்றல் துறையில் கவிஞர்கள் பூக்களைப் புகுத்துவது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

7.1.1.

தலைவன் தனக்குத் தந்த நீலமலரை நினைந்து தலைவி அடைந்த பிரிவுத் துயரைத் தோழி எடுத்துக் கூறுகிறாள். அறத்தொடு நிற்றல் துறையில் இப்பாடல் இடம்பெறுகிறது.

" பால் வரைந்து அமைத்தல் அல்லது அவர்வயின்
சால்பு அளந்து அறிதற்கு யாஅம் யாரோ
வேறுயான் கூறவும் அமையாள், அதன்தலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி அவிழ்ந்த
வள்ளிதழ் நீலம் நோக்கி உள் அகைபு
ஒழுகு கண்ணள் ஆகிப்
பழுதன்று அம்ம இவ்வாயிழை துணிவே "1

என்று பெரிசாத்தனார் இயற்றிய பாடலில் நீலமலர் அறத்தொடு நிற்றற்கண் இடம்பெறுகிறது.

7.1.2.

கோங்கம் என்னும் உயர்ந்த மரத்துப் பூவும் பெண்களுக்கு எட்டாத நிலையில், ஒருவன் உதவினான். அதனால் நட்பு மலர்ந்தது. அதைப்பற்றித் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் தன்மையை

---

1. குறுந். 366
2.

ஓதலாந்தையார் பாடல் காட்டுகின்றது.

" அன்னாய் வாழிவேண்டு அன்னைஎன் தோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதியாயின் என்னதூஉம்
அறிய ஆகுமோ மற்றே
முறியினார்க் கோங்கம் பயந்த மாறே " 1

7.1.3.

பத்துப் பாட்டில் குறிஞ்சிப் பாட்டு அறத்தொடு நிற்றல் துறைபற்றியது என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. அதில் அவள் கொய்யும் பல்வகை மலர்கள் பேசப்படுகின்றன.

## 7.2. பூவிஞல் தலைவனோடு தொடர்பு

வேங்கை மலர் பூத்த வேனில் நாளில் இளம்பெண்கள் அதைச் சூட விரும்பி மரங்களை நெருங்கி வருதல் வழக்கம். வேங்கையின் உயர்கிளையில் திகழும் பூதுமலர் எட்டாதபோது சிறுமியர் ஒரு தந்திரம் செய்வதும் இயல்பே. " புலி, புலி ", என்று கூக்குரல் எழுப்பினுல் அருகில் எங்காயினும் உள்ள ஆடவர் விரைந்து வருவர். அவர்தம் உதவியால் மலர்களை அடையலாம் என்ற எண்ணத்தினுல்

---

1. ஐங். 366.

அப்படிக் கூச்சல் இடுவது இளமகளிர் பண்புளன்பதை நொச்சி நியமங்கிழார் பாடல் தெரிவிக்கின்றது. 1

புலி என்னும் கூக்குரல் கேட்டு உதவிசெய்ய வந்தவன் உயிருக்குத் துணைவனாகிப் பழகும் நிலை நேர்ந்தது. இந்தக் களவு நிகழ்ச்சியை அழகிய நாடகக் காட்சியாகத் தங்கால் முடக்கொற்றனார் பாடல் காட்டுகின்றது.

" மலிபூஞ் சாரல் என்தோழிமா ரோடு
ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழி
புலி புலி என்னும் பூசல் தோன்ற . . .
வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு
'யாதோ மற்று அம்மா திறம் படர்' என
வினவிநிற் றந்தோனே அவற்கண்டு
நாணி நின்றனெமாக . . . . . .
மையீரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யும் உளவோ ' என்றனன் . . .
நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்றோன் . . . . . . . . . " 2

## 7.3. ஊடல் துறையில் மலர் இடம்பெறல்

சேர நாட்டுக் கோப்பெருந்தேவியின் கையில் பிடித்த சிறுசெங்குவளை மலரினையும் புறத்திணைப் பாட்டின் துணைப் பாத்திரமாக

---

1. அகம். 52:1-8
2. அகம். 48:5-7; 12-14;16,18,19,21,22

இனைத்துக் காக்கைப்பாடினி நச்செள்ளையார் பாடல் காட்டுகின்றது. 1

மகளிர் ஆடுங்களத்திற்குச் சென்று காலந்தாழ்த்து வந்தான் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன். அதனால், மனைவி ஊடல் கொண்டாள். அவள் கையில் விளங்கியது சிவந்த மலர். அந்தப் பூவினைக் கணவன் மீது வீசுவதற்கு ஓங்கிய மனைவியிடம் அதை இரந்து கேட்டுநின்றான், அரசன். 2

" முழாஇமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணையாகச்
சிலைப்புவல் லேற்றின் தலைக்கை தந்துநீ
நளிந்தனை வருதல் உடன்றனள் ஆகி ...
பல்சில கிண்கிணி சிறுபரடு அலைப்பக்
கொல்புனல் தளிரின் நடுங்குவனள் நின்றுநின்
எறியர் ஓக்கிய சிறுசெங் குவளை
ஈயென இரப்பவும் ஒல்லாள் நீயெமக்கு
யாரையோ எனப் பெயர்வோள் " 3

என்னும் பாடலில் ஊடலைப் புலப்படுத்தற்கும், ஊடலைத் தணிப்பதற்கும் இடையே ஒரு சிறு கருவியாக செங்குவளைப்பூ விளங்குவதைக் காணமுடிகின்றது.

---

1. பதிற். 52

2. " மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய " - தொல். 1173

3. பதிற். 52: 14-16, 20-24.

## 7.4. செலவழுங்கல் துறையில் மலர்பெற்ற இடம்

அனைத்துச் சுமந்த சிறு குழந்தையின் தலையில் சூடிய குவளைப் பூவினை, நெட்டுயிர்ப்பை மறைத்தவாறே தாய் மோந்து பார்த்தாள். பிரியப் போகும் தலைவன் - விடைபெற நிற்கும் கணவன் - அவள் மூச்சுக் காற்றினால் பூவின் வண்ணம் வாடி வனப்பிழந்த தன்மையைக் கண்டதும், ஆற்றுமை பெரிதென்று அறிந்து வேற்றூர் செல்லும் கருத்தை மாற்றினான் என்று பாலைபாடிய பெருங்கடுங்கோ காட்டியுள்ளார்.

> " பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
> ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
> தூநீர் பயந்த துணையமை பிணையல்
> மோயினள் உயிர்த்த காலை மாமலர்
> மணியுரு இழந்த அணியழி தோற்றம்
> கண்டே கடிந்தனம் செலவே ... " 1

இந்தப் பாட்டில் செலவு அழுங்குவதற்குத் துணைசெய்த குவளைப் பூவும் ஒரு நாடகப் பாத்திரம் என்று அமைவது நோக்கி இன்புறத்தக்கது.

---

1. அகம். 5:21-26

## 7.5. நொச்சிப்பூ, பாடல் துறைகளில் இடம்பெறல்

ஆடவர் மதில் காக்கும் போரில் ஈடுபடும்போது அணிவதற்கும் நொச்சித்தழை பயன்பட்டது; மகளிர் தழையுடை அமைப்பதற்கும் உதவியது. இருபாலாரும் நொச்சியைப் பயன்படுத்த முற்படும் தன்மையை வியந்து பாராட்டினர் மோசி சாத்தனார்.

" மணிதுணர்ந் தன்ன மாக்குரல் நொச்சி
போதுவிரி பன்மரன் உள்ளும் சிறந்த
காதல் நன்மரம் நீமற் றிசினே
கடியுடை வியன்நகர்க் காண்வரப் பொலிந்த
தொடியுடை மகளிர் அல்குலுங் கிடந்தி
காப்புடைப் புரிசை புக்கு மாறழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே " 1

## 7.6.1. காலம் அறிவிக்கும் அறிகுறியாதல்

கார்காலம் வந்தது என்னும் செய்தியை அறிவிக்கும் நிலையில் முல்லை பூத்தது என்று கூறப்படுகிறது. தன் தனிமையைக் கண்டு முல்லை நகும் என்ற குறிப்புப் பொருளையும் மலர்ந்து ஒளிவிடும் என்ற வெளிப்படைப் பொருளும் அமைய முல்லையின் மலர்ச்சியைப் புலவர் குறிப்பிடும் நயம் பாராட்டத்தக்கதாகும்.

---

1. புறம். 272.

" இளமை பாரார் வளம்நசைஇச் சென்றோர்
இவணும் வாரார் எவனரோ எனப்
பெயல்புறந்தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை இலங்கெயிறு ஆக
நகுமே தோழி நறுந்தண் காரே " 1

7.6.2.

முல்லை முகை எள்ளி நகைப்பதாகக் கண்டது ஒருவகைக் கற்பனை. காலத்தை மறந்து கடமையில் மூழ்கியிருக்கும் தலைமகனுக்குப் பருவ வரவினை நினைவுறுத்தும் தன்மையும் முல்லை முகைகளுக்கு உண்டு என்பது மற்றொரு வகைக் கற்பனைக் காட்சி. தோழி கூற்றாக இந்தக் காட்சியைச் செல்லூர்க்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார் காட்டியுள்ளார்.

" வருவேம் என்ற பருவம் உதுக்காண்
தனியோர் இரங்கும் மாலைப் (பல்லான்-கோவலர்)
பல்லான் கோவலர் கண்ணிச்
சொல்லுப அன்ன முல்லை வெண்முகையே " 2

தலைமகள் நெஞ்சத்தின் ஆர்வம் உடைமை திரண்ட முகை எனவும், தலைமகன் வருகையால் உள்ளம் நெகிழ்ந்து மலர்ந்து இன்பத்தே தன் அன்பு மணம் பொங்கிக் கமழும் தன்மைத்து என்பதும் உள்ளுறையும் பொருளாக உய்த்து உணரத்தக்கது.

---

1. குறுந். 126
2. குறுந். 358: 4-7

## 7.6.2.1 கொன்றை காலத்தின் அறிகுறியாதல்

கொன்றை மலர்ந்து விளங்கிய தோற்றம் கார்காலத்தை அறிவுறுத்தியது. தலைவன் வருகையை எதிர்நோக்கும் காலமும் அதுவே. எனவே, தலைவி வருந்துவாள் என்று எதிர்பார்த்துத் தேற்ற முனைந்த தோழியிடம் ஒரு தலைவி சொல்லியவை இவண் நோக்குதற்குரியன.

" புதப்புங் கொன்றைக்
கானம் காரெனக் கூறினும்
யானோ தேறேன் அவர் பொய்வழங் கலரே " 1

இயற்கையின் ஆணைவழி ஒழுகும் தாவரத்தின் மலர்ச்சியைத் தலைவி மதிக்கவில்லை. தன் கணவர் ஆணையிட்டுச் சொன்ன சொற்களைத் தான் நம்பினாள்; மதித்தாள். கணவர் சொன்ன சொல் தவற மாட்டார். எனவே, அவர் வரும் காலமே கார்காலம். அதற்கு முன்னரே மழைக்காலம் வந்ததென்று எவர் சொன்னாலும் அவள் நம்பவும் மாட்டாள்; நெஞ்சில் இரங்கவும் மாட்டாள் என்பதை இப்பாடல் காட்டுகின்றது.

---

1. குறுந். 21: 3-5

7.6.2.2.

மனநெகிழ்ச்சி மிகவுடைய ஒரு தலைவி, தலைவன் தேர் வருமுன்பே கொன்றை முதலிய மரங்களில் மலர்கள் விளங்கக் கண்டு நெஞ்சில் துயரம் கொண்டாள். அவளைத் தேற்ற முற்பட்ட தோழி மரங்களின் அறியாமையைச் சுட்டினாள். கோடையில் சிதறும் சில துளியைக் கொண்டு அவை மலர்ந்து விட்டன; உண்மையான கார்காலம் இன்னும் வரவில்லை என்றாள்.

" மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங்கு அத்தம் சென்றோர் கூறிய
பருவம் வாரா அளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே " 1

7.6.2.3.

பேயனார் பாட்டிலும் இதே உத்தியைக் கடைப்பிடித்துத் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

" ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய
பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி
எவன் இனி மடந்தைநின் கலிழ்வே நின்வயின்
தகையெழில் வாட்டுந ரல்லர்
முகையவிழ் புறவின் நாடிறந்தோரே " 2

மரத்தில் விளங்கும் மலர்கள் மனித உள்ளத்தில் உணர்ச்சியைத் தூண்டுகின்றன என்பதுவும், அன்பு முதிர்ந்தும் அறிவு நெகிழ்ந்தும் உள்ள தலைவியின் கலக்கம் நீக்குதற்குக் குழந்தைக்குச் சொல்வதுபோல் புனைந்துரையால் தோழி ஆறுதல் சொல்ல வேண்டியுள்ளது என்பதுவும் இவற்றால் அறியப்படும்.

---

1. குறுந். 66
2. ஐங். 462

7.7.1. தலைவன் கூற்றில் முல்லை மலர் இடம்பெறல்

சென்ற வினைமுடித்துத் தேரில் தன் ஊருக்கு மீளும் தலைமகன் மனையைப் பற்றிய நினைவுகளில் ஆழ்ந்திருந்தான். அவனுடன் இருந்த ஒரு நண்பன் இந்நிலையைப் பார்த்து நகைக்கும் குறிப்பைப் புலப்படுத்தினன்.

" ஊருதின் நோய் காக்கைக்குத் தெரியுமா? "

மனைவியைப் பிரிந்தவன் மீண்டும் தன் இல்லம் சேர்வதை எண்ணுவதால் ஏற்படும் இன்பப் பெருமிதத்தை அறியாமல் தன்னைப் பார்த்து நகைக்கும் தோழனுக்கு எவ்வாறு உண்மையை உணர்த்துவது? ஒன்றுமே சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. நண்பனுடைய மனித உணர்ச்சிகளைப் புண்படுத்தாமல் தன் உள்ளத்துடிப்பை வெளிக்காட்ட விரும்பிய தலைமகன் வழியெங்கும் முகையுடன் பொலிந்த முல்லைக் கொடியை முன்னிலைப் படுத்தித் தன் ஆற்றாமையைப் புலப்படுத்தினன்.

" முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர் மாட்டே " 1

---

1. குறுந். 162:3-6.

" நகுவை போலக் காட்டல் என்பது தற்குறிப்பேற்றம், மற்றவர் நிலையை எள்ளி நகை செய்தல் விரும்பத் தக்கதன்று ( நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி ")[1] என்னும் அறக்கருத்தை வற்புறுத்தப் புலவர் கையாண்ட கற்பனைத் திறம் உள்ளுதொறும் உவகை தருவது.

## 7.8. களவுக் காதலை மனையறமாக்க மலர்கள் பயன்படல்

ஓர் ஆடவன் காளையை எதிர்த்துப் பாய்ந்த போது அவன் சூடிய முல்லைக் கண்ணியை ஏறு தன் கொம்பினால் எடுத்து வீசியது. உயர்ந்த இடத்தில் அமர்ந்து ஏறு தழுவுதலைப் பார்க்க வந்த ஒரு பெண்ணின் கூந்தலில், அந்த முல்லைக் கண்ணி சென்று சேர்ந்தது. அவளும், தன் காதலன் சூடிய கண்ணி என்னும் காரணத்தால் அதை விருப்புடன் கூந்தலின் உள் வைத்து முடித்துக் கொண்டாள்.

களவில் அமைந்த நட்பினை ஏற்க விரும்பாத பெற்றோரும் ஏனை முதியோரும், அந்தக் கண்ணி வாயிலாக அவனே கணவன் என்று தெய்வமே காட்டியதென்று நம்பி வதுவைக்கு ஏற்பாடு செய்யலாயினர்.

மற்றொரு தலைவி, களவுக் காதலனுடன் கூடி மகிழ்ந்தபோது, அவன் கண்ணியைத் தன் கூந்தலில் புதைத்து முடித்தாள். அதன் பின்பு

---

1. திருக்குறள் : 995

கூந்தல் ஒப்பனைக்காகத் தாய்முன் அமர்ந்தாள். மகளது கூந்தலைத் தாய் அவிழ்த்தபோது அதில் மறைந்த பொருள் எல்லாரும் காண வெளிப்பட்டு வீழ்ந்தது. இதைக் கண்ட தாய் உள்ளம் திடுக்கிட்டது. மகளை யாதொன்றும் கேட்கவுமில்லை; சினத்தை அவள்மீது செலுத்தவுமில்லை. அங்கு நிற்க நாணித் தலைவி தோட்டத்தை அடைந்தாள். இந்த இரண்டு நிகழ்ச்சிகளிலும் முல்லைப் பூங்கண்ணியும் களவுக் காதலை மனையறமாக்குதற்கு உதவும் நாடகப் பாத்திரங்களாக அமையக் காணலாம்.

ambiguous

## 7.9. கேட்குந போலவும் கிளக்குந போலவும் மலர்களை அமைத்தல்

ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன் மறைந்த துயரத்தை ஆற்றாமல் புலவரும் பாணரும் பெரிதும் வருந்துகின்றனர். பூத்த முல்லைக் கொடிகளின் வாயிலாகத் தம் ஆற்றாமை மிகுதியைப் புலவர் தெரிவிக்கின்றார்:

" இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே " 1

---

1. புறம். 242

பூச்சூடி மகிழும் நிலை நாட்டில் எவர்க்கும் இல்லாதபோது முல்லைக் கொடி மலர்வதும் மங்கலக் காட்சி தருவதும் புலவர் நெஞ்சின் ஆற்றுமையைப் பெருகச் செய்தமையால் முல்லையை விளித்தே தம் துயர் சொல்லினர்.

கேட்குந போலவும் கிளக்குந போலவும் மலரோடு உரையாடும் திறன் இதில் இடம்பெறுகிறது. இவற்றுள் முல்லைக்கொடி ஈண்டு முன்னிலைப் பொருளாக அமைகிறது. இவ்வாறு கூறல் மரபு என்பது தொல்காப்பியச் சூத்திரத்தாலும் பெறப்படுகிறது. [1]

7.10. பூவிலையாட்டியும் தலைவியின் துயரும்

சில பொருட்களைப் பார்க்கும்போது நெஞ்சின் உணர்ச்சி பெருகுகின்றது. ஒல்லையூர் நாட்டில் மலர்ந்த முல்லைகளில் புலவர் ஆற்றுமை பெருகியதைப் போலவே பூவிற்கும் பெண்ணினைப் பார்க்கும்போது கணவன் வருகையை எதிர்பார்த்திருந்த பெண்ணின் உள்ளத்தில் ஆற்றுமை வளர்ந்தது என்பதை ஓர் அகப்பாட்டிலும் ஒரு புறப்பாட்டிலும் காணமுடிகின்றது. மனைதோறும் சென்று தொடுத்த பூக்களைக்

---

1. " ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுதலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர் " - தொல்.1456

கொடுக்க வருகிறாள் பூவிலைப்பெண்டு. அவளிடமிருந்து பூவினை வாங்கிச் சூடுதல் என்பது மகிழ்ச்சி தரும் நிகழ்ச்சி. ஆனால், கணவனைப் பிரிந்தமையால் பூச்சூட விரும்பாத மகளிர் அவளிடம் பூ வாங்காமல் அனுப்பி விடுகின்றனர். பூவினை வாங்காமல் விடுவது பூ விலையாட்டிக்கு ஏமாற்றம் தருகிறது; "தன்துயர் காணாத் தகைசால் " மகளிர் சிலர் பூ விற்கும் பெண்ணின் ஏமாற்றத்தை எண்ணி இரங்கும் தன்மையைப் புலவர்கள் காட்டியுள்ளார்கள். [1]

" எம்மினும் பேரெழில் இழந்து வினையெனப்
பிறர்மனைப் புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே

துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவு தொறும் நுவலும்
நொதுமலாட்டிக்கு நோமென் நெஞ்சே "

7.11. கணவனை வரவேற்கப் பூ முடித்தல்

தன் கணவன் மீண்டுவரும் செய்தியை அறிந்தாள் ஒரு தலைவி. அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்க ஏற்பாடுகளைச் செய்யலானாள். விரைந்து நீராடித் தலைவாரிப் பூமுடிக்கத் தலைப்பட்டாள். தொடுத்த முல்லையை எடுத்தாள். கூந்தலில் செருகி முடிப்பதற்குள்

---

1. புறம். 293:4-6; நற். 118:9-11

தேரினின்று கணவன் இறங்கி வருதலைக் கண்டாள். ஒருகையால் பூவினைச் செருகியவாறே கணவனையும் தழுவி வரவேற்றாள் அவள். ஆர்வம் சிறந்த அந்த நிகழ்ச்சியைத் தலைமகன் பின்பு ஒருமுறை பிரிந்து மீளும் வழியில் நினைத்து நெஞ்சு உவந்து பாகனுக்குப் பழைய நிகழ்ச்சியைச் சொல்லுவதாகக் காட்டியுள்ளார்.

" மறத்தற்கு அரிதால் பாக பல்நாள்
அறத்தொடு வருந்திய அல்குதொழில் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க மாண்வினை
மணிஒலி கேளாள் வாணுதல்; அதனால்
ஏகுமின் என்ற இளையர் வல்லே
இல்புக்கு அறியுநராக மெல்லென
மண்ணாக் கூந்தல் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குரல் அழுத்திய
அந்நிலை புகுதலின், மெய்வருத்துறாஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலையே " 1

இந்தப் பாட்டில் இடம்பெற்ற தலைவிக்குத் தலையில் பூ முடிக்காமல் தலைவனைத் தழுவுதற்கும் விருப்பம் இல்லை. ஒப்பனை முடித்துவிட்டுத் தழுவலாம் என்னும் நிலையும் இல்லை. ஆர்வநெஞ்சம் அப்போதே தழுவ முயல்கின்றது. பூ முடிக்கும் கடமையை அறிவு வற்புறுத்துகின்றது. எனவே, இரண்டும் ஒருங்கே நிகழும் அன்பு நெகிழ்ச்சியை,

---

1. நற். 42

" அவிழ்பூ முடியினள் கவைஇய "

என்னும் அடி சொல்லோவியமாய்க் காட்டுகின்றது.

'அவிழ்பூ' என்பது முல்லைப்போது மெல்ல நெகிழ்ந்து விரியும் நிலையைத் தெரிவிக்கின்றது. இந்தத் தொடருக்கு நெஞ்சு நெகிழும் அன்புத் துடிப்பைப் புலப்படுத்தும் ஆற்றலும் உள்ளது. பூவைச் செருக ஒருகை; கணவனைத் தழுவ ஒரு கை என்னும் நிலையில் மனைவி தன்னை வரவேற்றதை நினைத்து உவகையும் பெருமிதமும் கொண்டான் தலைவன். மங்கல மலர்களைச் சூடி அன்புடைக் கணவனை வரவேற்பது இந்த நாட்டில் வழிவழிப் பயின்ற பண்பாடு என்பது அறிதற்பாற்று.

## 7.12. பிரிவை உணர்த்தும் பீர்க்கம் பூ

துணைவன் வாராத துயரத்தில் மூழ்கிய பெண் ஒருத்தி பீர்க்கம் பூவைப் பார்த்தாள்; தன் மேனியையும் பார்த்தாள். இரண்டும் ஒப்புமையுடன் அமைந்த தன்மையை நோக்கினாள். இந்த ஒப்புமையால் ஒரு பயன் உண்டு என்றும் கருதினாள். பீர்க்கம் பூக்களைக் கொண்டு சென்று தலைவனிடம் காட்டி,

" இந்த மலர்களின் இயல்பினை உன் மனைவியும் பெற்றாள் "

என்று யாரேனும் சொல்லி வருவது நலம் பயக்கும். தன்நிலை

அறிந்து தலைவன் மீளுவான் என்று அவள் மனம் எண்ணித் தோழியிடம் தெரிவிப்பதைக் கோக்குள முற்றனர் பாடல் காட்டுகின்றது.

" மனைவி நிலையே வினையிடத் துரையார் " [1]

என்பதற்கேற்ப, கடமையைக் கண்ணென மதித்த தலைமகன் தன் மனைவியைப் பற்றி நினைப்பதற்கும் நேரமின்றிப் பணிகளில் ஈடுபட்டான்.

" வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் " [2]

என்பதற்கேற்ப, எவரேனும் பீர்க்கம் பூவினைக் காட்டி இன்னள் ஆயினள் என்று சொல்வதே அமையும், கணவன் விரைந்து தன்னிடம் மீளுவான் என்று தலைவியின் உள்ளம் எதிர்பார்த்ததை இந்தப் பாடல் காட்டுகின்றது. [3] தலைவனுக்கு மனைவியின் துயரத்தை நினைவு படுத்துவதற்கும் தெரிவிப்பதற்கும் பூவினைக் கருவியாகக் கொள்வது ஓர் இலக்கிய உத்தி எனலாம்.

7.13. பீர்க்கும் தலைவியின் வாடிய மேனியும்

மற்றொரு தலைவி பிரிந்த கணவன் நெடுநாளாகியும் வாராமைக்கா

---

1. தொல். பொருள். 1132
2. தொல். பொருள். 1132:2
3. குறுந். 98:1

வருந்தியபோது தோட்டத்தில் படர்ந்த பீர்க்கங் கொடியின் மலர்களைூதிப் பறந்துவரும் தும்பியைப் பார்த்தாள். பீர்க்கம் பூவின் நிறத்தினைத் தன் பசலை மேனி பெற்றிருந்த போதிலும் தும்பி தன்னருகில் வரவில்லை; தன் மேனியை மொய்க்கவுமில்லை. இதற்கொரு காரணம் கண்டாள் தலைவி. தும்பி மொய்த்த மலர்களில் மணம் கமழும். பிரிவு காரணமாக தன் ஒப்பனை செய்யாத மேனியில் எவ்வகை மணமும் இல்லை; எனவேதான் தன்மீது தும்பி விரும்பிப் படியவில்லை என்று தலைவி தன் ஆற்றாமையை

" நாற்றம் இன்மையின் பசலை ஊதாய் " 1

என்று புலப்படுத்துகிறாள். இக்கூற்றில் வேற்றுமையணி பொருந்தியுள்ளது, என்பது குறிப்பிடத்தக்கது.

## 7.14. பிரிவுக் கலக்கத்தில் குவளை மலர்

தாய்மைப்பேறு எய்தித் தனக்கொரு மகனை அளித்த மனைவியை நள்ளிரவில் தனியே பார்க்கும்பொருட்டு வந்தான் தலைவன். பலர் தூணும் பகற்பொழுதில் அங்குவர நாணி அவன் ஒதுங்கியிருந்தான்.

---

1. நற். 277:8

பலநாளாக மனைவியைப் பார்க்காமல் புறக்கணித்த செய்கையின் விளைவே அவன் கொண்ட நாணம்.

மற்ற எவரும் இல்லாத் தனிமையில், ஊர் அடங்கி உறங்கிய யாமத்தில், சேய் பயந்த மென்மையுற்றவள் தன்மையை நோக்கினன். மலரினும் மெல்லிய மனமும் உடலும் கொண்டவளிடம் தன் உணர்ச்சியைப் புலப்படுத்தும் சொற்களை அறியாமல், தன் கையில் வைத்திருந்த குவளைப்போது கொண்டு அவள் வயிற்றின்மீது மெல்ல ஒற்றினன் தலைமகன். மீண்டும் பலமுறை மலர்கொண்டு ஒற்றித் தன் நெஞ்சு நெகிழ்ச்சியைப் புலப்படுத்தினன்.

" விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வன் ஈன்றென . . . . . . . . .
. . . . . . . . . முதுபெண்டாகித்
துஞ்சுதியோ மெல்லஞ்சில் ஓதியெனப்
பன்மாண் அகட்டிற் குவளை யொற்றி
உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல
முகைநாண் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் கையுதைத் ததுவே " 1

இந்தப் பாட்டில் பலநாள் பிரிவுக் கலக்கத்தை மாற்றவும் உணர்ச்சியைப் புலப்படுத்தவும் ஒரு வாயிலெனக் குவளைப்போது பயன்பட்டமை உணர்ந்து மகிழற்குரித்து.

---

1. நற். 370:5-11, உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்.

## 7.15. மலர்கள் செவிச் செல்வமாதல்

சுற்றுப்புற உலகத்தைச் செவியால் மதித்தற்குரிய நேரம் இரவுப் பொழுது, தலைமகன் தேடி வருவான் என்று எதிர்பார்த்திருக்கும் இளம்பெண்களின் செவி நுட்பத்தையும் மனத்தின் ஆர்வத்தையும் நொச்சிப்பூ உதிர்ந்து விழும் ஓசையை வைத்து அளந்து காட்டும் அறிவு நுட்பத்தைக் கொல்லன் அழிசியார் பாட்டில் காணமுடிகின்றது.

" கொன்னூர் துஞ்சினும் யாமதுஞ் சலமே
எம்மில் அயலது ஏழில் உம்பர்
மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே " 1

என்னும் பாட்டில் மனிதர் செவிப்புல நுட்பத்திற்கு அளவுகோலாகப் பூக்கள் உதிர்ந்து விழும் ஓசை சொல்லப்பட்டது. பூவின் வடிவமும் மணமும் மென்மையும் தன்மையும் உவமையாகக் காட்டப்படுவது பரந்து வழங்கிய மரபு. ஆனால், பூவின் வீழ்ச்சியால் ஏற்படும் ஓசையையும் செவிப்புல நுட்பத்திற்கு ஓர் எல்லையாகக் காட்டும் தன்மையால் புலவரின் நுண்ணிய அறிவும் மென்மை கொண்ட உள்ளமும் புலனாகின்றன.

---

1. குறுந். 138

## 7.16. முடிவுரை

மலர்களை உவமையாகவும் உள்ளுறையாகவும் பதித்து வைப்பதை இலக்கியத்துள் யாண்டும் காணலாம். அதனினும் மேலாகப் பாட்டின் அடிப்படைக் கருத்துடன் மலர்களைப் பின்னிப் பிணைத்துத் தொடுக்கும் அழகினை உடைய பாடல்கள் நெஞ்சை அள்ளும் நீர்மை பெற்றவை எனலாம். இவற்றை இயற்றிய புலவர்களின் திறமை எண்ணி அறிந்து இன்புறத்தக்கது.

***

```
*************************
*                       *
*     8.   தொகுப்புரை    *
*                       *
*************************
```

8.0. எடுத்துக்கொண்ட தலைப்பு:

" சங்க இலக்கியத்தில் மலர்கள் "

8.1. அறிமுகம் என்னும் முதற்பிரிவில் சில அடிப்படைச் செய்திகள் தரப்பட்டுள்ளன. சங்க இலக்கியப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை 2381. அவற்றுள் மலர்களைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவன 1019. அவற்றைப் பாடியோரின் எண்ணிக்கை 337.

8.1.1. மலர்கள் புறப்பாட்டில் இடம்பெறுவதைவிட மிகுதியாக அகப்பாட்டில் காணப்படுகின்றன. நிலத்தியல்புக்கு ஏற்றவாறு தாவர வளர்ச்சி சிறந்து அமைவது உலகியல்பு.

எனவே, அகத்திணைக்குரிய நிலத்தன்மைக்கேற்றவாறு அவ்வத்திணைப் பாடல்களில் அவற்றுக்குரிய மலர்கள் பெரிதும் பயிலும் நடைமுறையியல்பினைப் புலவர்கள் பெரிதும் கடைப்பிடித்துள்ளனர் என்பது அறியத்தக்கது.

8.1.2. ஆய்வின் பகுப்புகள்

1. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்,
2. மலர்களும் மக்கள் வாழ்வியலும்,
3. மலர்களும் இலக்கிய மரபுகளும்,
4. மலர்கள் உவமைகளாதல்,
5. மலர்களும் குறியீட்டு மரபும்,
6. மலர்கள் கவிதைப் பொருளாதல்.

8.2. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்

சங்கப்பாடலில் இடம்பெறும் மலர்கள் பின்வருமாறு:
அகத்தி, அகில், அடும்பு, அதிரல், அரலை, அலரி, அவரை, அனிச்சம், ஆத்தி, ஆம்பல், ஆரம், ஆவிரை, இருப்பை, இலவம், இல்லம், ஈங்கை, உந்தூழ், உழிஞை, உன்னம், ஊகு, எருக்கு, எருவை, எறுழ், ஓமை, கடம்பு, கணவிரி, கமுகு, கரந்தை, கரும்பு, கருவிளை, கல்லகாரம், கவிர், களா, கள்ளி,

காஞ்சி, காந்தள், காயா, குடசம், குமிழ், குரவம், குரீஇப்பூளை, குருகிலை, குருக்கத்தி, குருந்து, குல்லை, குவளை, குளவி, குறிஞ்சி, குறுநறுங்கண்ணி, கூதளம், கூவிரம், கூவிளம், கைதை, கொகுடி, கொன்றை, கோங்கம், கோடல், சிறுசெங்குரலி, சிறுமாரோடம், சுள்ளி, சூரல், செங்கழுநீர், செங்கொடுவேரி, செண்பகம், செம்மல், செயலை, செருந்தி, செருவிளை, சேடல், ஞாழல், தணக்கம், தமாலம், தளவு, தாமரை, தாழை, திலகம், தில்லை, தும்பை, துழாய், தெறுழ், தொய்யில், தோன்றி, நந்தியாவர்த்தம், நரந்தம், நள்ளிருள்நாறி, நறவம், நறை, நாகம், நெய்தல், நெருஞ்சி, நெல், நொச்சி, பகன்றை, பயினி, பலாசம், பனை, பாங்கர், பாதிரி, பாரம், பாலை, பிடவம், பித்திகை, பீரம், புழகு, புன்கு, புன்னாகம், புன்னை, பூளை, கோங்கம், மணிச்சிகை, மராம், மருதம், மல்லிகை, மா, மால்வெள்ளோத்திரம், முசுண்டை, முண்டகம், முருங்கை, முல்லை, முள்ளி, மௌவல், யா, வகுளம், வஞ்சி, வடவனம், வழை, வள்ளி, வள்ளை, வாகை, வாழை, வாள்வீரம், வானி, வெட்சி, வேங்கை, வேரல், வேம்பு, வேழம், வேளை.

8.2.1. மேற்காட்டிய இவற்றுள், அடும்பு, அதிரல், ஆம்பல், காந்தள், காயா, குவளை, கொன்றை, கோங்கம், செருந்தி, ஞாழல், தளவு, தாமரை, பகன்றை, பாதிரி,

பிடவு, பித்திகம், புன்னை, முல்லை, வேங்கை என்னும் மலர்கள் பாடலில் பெரிதும் பயிலுகின்றன. மேலும், சூடுதற்கும் சூட்டுதற்கும் பயன்படுத்தாத அவரை, இலவம், பீர்க்கு, புன்கு, முசுண்டை, வாழை ஆகிய மலர்களைப் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன.

8.2.2. மலர்களின் வகை, வடிவம், வண்ணம், மணம், பயன் ஆகியவற்றுள் அறிமுடிந்தவை தரப்பட்டுள்ளன.

8.2.3. அவரையென்பது சங்க காலத்தில், குளிர்காலத்தில் மலர்ந்து உணவுக்குப் பயன்படும் விதைகளைத் தரும் பலவகைக் கொடிகளுக்கும் உரிய பொதுப்பெயர் என்று தெரிய வருகின்றது.

8.2.4. கொன்றை என்னும் பெயர் மஞ்சள் வண்ண மலர்களையுடைய மரங்களைக் குறித்த பொதுச்சொல்லாக வழங்கியது என்பதைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

8.2.5. காந்தள், கோடல் என்னும் சொற்கள் பொதுப்பெயராகவும் சிறப்புப் பெயராகவும் சங்கப் பாடல்களில் வழங்கப்பட்டுள்ளன. சூழ்நிலைக்கேற்றவாறு பொருள்கொள்ள வேண்டும். எனினும், செங்காந்தள் வேறு, தோன்றி என்பது வேறு என்பதைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

## 8.3. மலர்களும் மக்கள் வாழ்வியலும்

மக்கள் வாழ்வில் மலர்கள் பயன்பட்ட தன்மையை இப்பகுதி காட்டுகின்றது.

8.3.1. கடவுள் வழிபாட்டில் மலர்கள் முதன்மைபெற்றன.

8.3.2. மக்கள் மிகப் பழங்காலத்தில் பயன்படுத்திய தழையாடை சிறுமியர்க்குரிய பூவாடையாகச் சங்ககாலத் தமிழகத்தில் அமைந்திருந்தது.

8.3.3. ஆடவர் வாழ்க்கை நிலை எதுவாயினும் அவரவர் தகுதிக்கும் தன்மைக்கும் ஏற்பக் கண்ணி அணிந்தனர். அரசர்தம் குலமரபும் வீரர்கள் ஆற்றும் கடமையின் இயல்பும் சூடிய கண்ணியைக் கொண்டே உணரமுடிந்தது. தார் என்பது அரசரும் செல்வரும் அணிந்த மாலை.

8.3.4. மகளிர் ஒப்பனையில் மலர்கள் சிறந்த இடம்பெற்றன. முல்லைப் பூவினைக் கன்னியர் சூடுதல் வழக்கமில்லை என்பதும், மனைவியரே அதைச்சூடும் மாண்புடையர் என்பதும், சங்கப் பாடல்களினின்று தெரிகின்ற உண்மைகள். பொதுமகளிர் பூக்களை மிகுதியாகப் பயன்படுத்தினர்.

8.3.5. தாமரையை மாந்தர் சூடுவதாகப் பாடல்கள் தெரிவிக்கவில்லை. தெய்வத்துக்கே உரிய சிறந்த மலரென்று கொள்ளப்பட்டது.

8.3.6. பூக்களின் மலர்ச்சியைக் கொண்டு பருவகாலம் அறியப்பட்டது.

8.3.7. இயற்கை மலர்களைப் போன்று உலோகத்தாலும் பிறவற்றாலும் செய்யப்பட்ட செயற்கை மலர்களும் மாலைகளும் மக்கள் வாழ்வில் பயன்பட்டன.

8.4. மலர்களும் இலக்கிய மரபுகளும்

மலர்களைச் சார்ந்து காலப்போக்கில் உண்டாகிய மரபுகள் இந்தத் தலைப்பின்கீழ் ஆராயப்பட்டன.

8.4.1. அகப்பொருளில் ஐந்திணைகளின் பெயர் அமைவதற்கு மலர்களே அடிப்படைக்காரணம், புறப்பொருளில் பெரும்பாலானவை சூடும் மலர்ப்பெயர்களைச் சார்ந்து அமைந்தவையே.

8.4.2. மலர்களைத் தெய்வங்களோடு தொடர்புபடுத்திய மரபின்வழி அமைந்த கதைக்குறிப்புகள் தமிழிலுள்ள பல்வேறு

இலக்கியப் பாடல்களிலும் ஏற்றம்பெற்றுத் தோன்றுகின்றன. சங்க இலக்கியத்துள்ளும் இடம்பெற்ற சில செய்திகள் இவண் காட்டப்பட்டன.

8.4.3. பூ, மலர், அலர் என்னும் சொற்கள் வினைப்பகுதியாகவும் பண்புச் சொற்கள் என்னும் நிலையில் பெயரடையாகவும் பயன்படும் தன்மையும், உருவக அழகுடன் விளங்கும் அழகிய சொல்லாட்சி வளர்ச்சியும் சொற்பொருள் மரபினை உணர்த்தும் வகையில் இவண் அமைக்கப்பட்டுள்ளன.

## 8.5. மலர்கள் உவமைகளாதல்

இந்தத் தலைப்பின்கீழ், மலர்கள் மற்றைய பொருள்களுக்கு உவமையாகப் பாட்டில் பயின்ற சில நிலைகள் குறிக்கப் பட்டுள்ளன.

8.5.1. புலவர்தம் கண்கள் கூர்த்தறிந்து பார்த்த மாட்சியை இவ்வுவமைகள் எடுத்துக்காட்டுகின்றன. காட்சிக்குப் புலனாகும் வண்ணமும் வடிவமும் அன்றி, முகர்வுப் புலனுக்குரிய மணமும் உவமித்துச் சொல்லப்படும் தன்மையை அகப்பாடலில் பெரிதும் காணமுடிகின்றது.

8.5.2. மேலும், சில வாழ்வியல் உண்மைகளை மலர்களின் சார்புடைய உவமை வாயிலாகத் தெளிவுபடுத்தும் முறைமையும் சங்கப் பாடல்களில் அமைந்துள்ளன என்பதும் இப்பகுதியில் காட்டப்பட்டுள்ளது.

## 8.6. மலர்களும் குறியீட்டு மரபும்

சொற்களுக்குரிய அகராதிப் பொருளுக்கு அப்பாற்பட்ட நுண்கருத்துக்களை உணர்த்துதற்கு மலர்களின் வெவ்வேறு நிலைகள் சங்கப் பாடல்களில் பயன்பட்டுள்ளன என்பது இத்தலைப்பின்கீழ் உணர்த்தப்பட்டுள்ளது.

8.6.1. மலர்களின் வளர்ச்சி, மலர்ச்சி, வீழ்ச்சி, வாட்டம், மணம், மணமின்மை என்னும் தன்மைகளாலும் இன்னபிற நிலைகளாலும் உள்ளுறுத்து உணர்த்தப்பட்ட கருத்து நுண்மைகள் இயன்றவாறு முறைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன.

8.6.2. காலத்தாலும் இடத்தாலும் வேறுபட்ட பல புலவர் பாடல்களிலும் இவ்வாறு உருவகத்தன்மை பொருந்திய கருத்தோவியங்கள் பெரிதும் காணப்படுகின்றன என்பதனால், குறியீட்டுப் பொருள் அமையும்படி பாடுதல் வழி வழி வளர்ந்து பயின்று வழங்கிய மரபு என்பதும் புலனாகின்றது.

## 8.7. மலர்கள் கவிதைப் பொருளாதல்

பாடல்களைப் படைக்கும் புலவர்கள் மலர்களுக்கு மிக மேம்பட்ட நிலைமையைத் தருவதனைச் சங்கப்பாடல் சிலவற்றில் காணமுடிகின்றது..

8.7.1. மலர்களைப் பாடல்கள் சிறப்பிக்கின்றனவா, பாடல்களை மலர்கள் சிறப்பிக்கின்றனவா என்பதை அறுதியிடல் ஆகாதவா இவற்றின் இயைபு சிறந்து பொருந்தியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

புலவர்களின் கற்பனைத் திறமையால் இத்தகைய இயைபு ஏற்படுகின்றது. எனவே, பாடல்களில் மலர்களின் மாட்சியு புலவரின் திறமையும் ஒருங்கே விளங்கக் காணலாம்.

8.7.2. மலர்களை நாடகப் பாத்திரமாக்கிப் புலவர் சிலர் பாடல் இயற்றியுள்ளனர். இவ்வாறு, உணர்ச்சியும் கற்பனையும் கருத்தாழமும் பிரிக்கலாகாதவாறு கலந்திசைக்கும் பாடல்க சிலவற்றைப்பற்றிய மதிப்புரைகள் இத்தலைப்பில் தரப்பட்டுள்ளன.

## 8.8. முடிப்புரை

மலர்களையும், மலர்களோடு இயைந்த வாழ்வியலையும், வாழ்வினின்று முகிழ்த்த இலக்கியத்தையும், இலக்கியத்தில் காணப்பட்ட சிறப்பியல்புகளைப் பற்றி, மேற்காட்டியவற்றுள் வகுத்தும் தொகுத்தும் விரித்தும் காட்டி அமைகின்றது இந்த ஆய்வு.

***

**பிற்சேர்க்கை ... ...**

## சங்க இலக்கிய மலர்களும் புலவர்களும்

சங்க இலக்கியத்தில் மலர்களைப் பற்றியும், அவற்றால் தொடுக்கப்பட்ட மாலைகளைப் பற்றியும், மலர்களைப் பிணைத்த தழையுடையைப் பற்றியும் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 337; பாடப்பட்ட பாடல்கள் 1019.

### அ. சிறப்புடைய சில பாடல் உடையார் பதின்மர்

1. காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் : பாடியது முல்லைப் பாட்டு.

2. தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் :

   அகம். 48; புத்தரு புணர்ச்சியைப் புலப்படுத்தும் நாடகக் காட்சி.
   அகம். 108; உவமையும் உள்ளுறையும் செறிந்த பாடல்.

3. நம்பி குட்டுவன் :

   குறுந். 243; நற். 145; 345; கடற்கரைக் கவிஞர். ஆ
   அடும்பு பற்றிய சொல்லோவியம் அமைத்தார். ஆம்பலின் மலர்ச்சியை
   உள்ளுறையுவமமாக்கினார்.

4. நெய்தல்தத்தனார் :

நற். 49; அகம். 243; மலர்களின் வழியே உரிப்பொருளின் உணர்ச்சியை உள்ளுறுத்து அமைத்த திறம் விளங்கக் காணலாம்.

5. படுமரத்து மோசி கொற்றனார் :

குறுந். 376; கூம்பிய தாமரையின் உள்ளக வெம்மை தலைவி மேனியைப் பனிக்காலத்தில் நிகர்ப்பது என ஊற்றுணர்ச்சி நுட்பம் உணர்த்தினார்.

6. பதடிவைகலார் :

குறுந். 323; முகர்வுப்புல மாட்சி உடையவர். உணர்ச்சி நலம் கனிந்த பாட்டில் தலைவியின் மேனி மணத்துக்கு முல்லையை உவமை சொன்னார்.

7. பாண்டியன் பன்னாடுதந்தான் :

குறுந். 270; முல்லைத்திணைத் தலைமகளின் கூந்தல் மணத்தைச் சிறப்பித்தார்.

8. மருங்கூர்கிழார் மகனார் பெருங்கண்ணனார் :

அகம் 80; அடும்பும் புன்னையும் அமைந்த கானற்சோலை காதலர்க்கு இடந்தரும் தன்மையைப் பாடினார்; வரைவு கடாவும் குறிப்பினைப் பூக்களால் மறைத்துணர்த்திய மாட்சி பொருந்திய பாட்டு.

9. விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் :

நற். 242; மானின் அன்பு நிலையையும் மழைக்குச் செழித்து மலர்ந்த கானத்து அழகையும் காட்டித் தன் நெஞ்சத்து உணர்ச்சியைத் தலைமகன் புலப்படுத்துவதாக அமைந்த அழகிய பாட்டு. அரும்ப, அவிழ, மலர, கால எனவரும் சொல்லழகு சிறப்புடைத்து.

10. வெண்கண்ணனார் :

அகம். 130; காட்சிப்புல மாட்சியும் முகர்வுத்திறமும் உணர்த்தும் பாட்டு.

" வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தல்
போது புறங் கொடுத்த உண்கண் "

என்பதில் ஏனையுவமமும் உள்ளுறை நுட்பமும் உள்ளன.

" தாழை எயிறுடை நெடுந்தோடு "

" வயிறுடைப் போது "

என்பவை தலையாய சொல்லோவியங்கள்.

ஆ. பல பாடல் உடையார் பதின்மூவர்

1. இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் :

பாடியது சிறுபாணாற்றுப்படை. 21 மலர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மலர்களின் வழி உவமையும் உள்ளுறை நயமும் அமைத்துள்ளார்.

2. இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் :

மலைபடுகடாம்; உவமைச் சிறப்பும் நறுமணக்குறிப்பும் உடைய பாடல் இது.

3. எயினந்தைமகனார் இளங்கீரனார் :

அகம். 3:15; 225:10,11; 361:1-3;10; 371:12- 393:1-3; பாலைப்பண்பில் படிந்த புலவர் இவர்.

4. உலோச்சனார் :

அகம்.20,100,210,330,400; நற்.11,63,74,111, 149,167,175,203,223,249; கீழைக்கடலோரத்தைச் சிறப்பித்த புலவர் இவர்.

5. ஔவையார் :

அகம். 11, 147:1-3; 273:1-4, குறுந். 80, 183, 200, 388, நற். 187, 371, 390, புறம். 90, 99, 100, 235, 269, 387, 390.

6. கோவூர்க்கிழார் :

புறம். 32, 33, 44, 45, 70, 386, 11. வாழ்வினையும் தாழ்வினையும் புவினைக்கொண்டே புலப்படுத்திய புலமைச்சான்றோர்.

" தனிமகன் வழங்காப் பனிமலர்க்கா " 1

என்று புறப்பாட்டில் குறித்த திறத்தால் காமவுணர்ச்சி மலர்களால் சிறக்கும் தன்மையது என்பதை அறியலாம்.

7. சிறைக்குடியாந்தையார் :

குறுந். 57, 62, 168, 222, 273; முகர்வுப் புலமாட்சி காட்டும் பாட்டுக்களை இயற்றியவர்.

8. நல்லுருத்திரனார் :

கலி. 101, 102, 103, 105, 107, 108, 111, 112, 115, 117;

முல்லை நிலத்து மலர்களைக் காட்டினார். மலர்தொடுத்த முல்லைக் கன்னியை நாடகப் பாத்திரமும் ஆக்கினார்.

9. பேரிசாத்தனார் :

அகம். 38; 242; குறுந். 81, 366 (பூத்தரு புணர்ச்சி) நற். 25, 37, 67, 299, 323, புறம். 198.

10. மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் :

அகம். 33, 144, 174, 244, 314, 344, 353, குறுந். 188 நற். 321. முல்லைத்திணை மாட்சியில் ஈடுபட்டவர்.

---

1. புறம். 33:19

11. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் :

அகம். 56, 124, 230, 254, 272, 302, குறுந். 185, நற். 157, 221.

12. மாங்குடி மருதனார் :

குறுந். 173; புறம். 24, 335, 396; மதுரை. 96, 103, 225 249-285.

13. வெறிபாடிய காமக்கண்ணியார் :

அகம். 22, 98; நற். 268; புறம். 271, 302.

நொச்சித்தழையும் மலரும் மகளிர்க்கும் மைந்தர்க்கும் பயன்படும் நிலைமை காட்டினார் (புறம். 271). அகப்பாடல்களை மலர்களே பின்னித் தொடுத்தவர்.

இ. மிகப் பல பாடலுடையார் ஒன்பதின்மர்

1. அம்மூவனார் :

மேலைக்கடல் வளம் மாண்புறக் காட்டினார். 58 அகத்திணைப் பாடலுள் மலர்களின் மாட்சி தெரிவித்தார். மலர்களின் புறத் தோற்றம் புலப்படுத்தி மக்களின் உள்ளத் தன்மை உணர்த்தும் பெற்றியர்.

2. ஓதலாந்தையார் :

32 பாடல்களில் மலர்களின் நிலைமையைக் காட்டினார். ஐங்குறு நூற்றுப் பாலையிலும் குறுந்தொகைப் பாட்டிலும் (21, 329) மலர் மாட்சி தெரிவித்தார்.

3. ஓரம்போகியார் :

50 பாடல்களில் மலர்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மருதத்திணைக் காட்சியும் உள்ளுறை வளமும் உடைய பாடல்களை இயற்றியுள்ளார்.

4. கபிலர் :

78 பாடல்களில் மலர்களைக் காட்டியுள்ளார். குறிஞ்சித் திணை பாடிய குணங்கெழுகுன்று. உள்ளுறை நயத்தால் ஒப்பற்ற பாடல் பற்பல பாடினர்.

5. நல்லந்துவனர் :

நெய்தற்கலி, அகம். 43; பரி.6,8,11,20: 28 பாடல்களில் மலர்பற்றிக் குறித்தவர். மலர்கள் இயற்கையில் காணப்படும் தோற்றத்தைச் சுருங்கிய அளவிலும் பரந்த அளவிலும் காட்டியுள்ளார்

6. பரணர் :

வரலாற்றுச் செய்திகளைப் பாடுவதில் விருப்புடையர் எனினும், 44 பாடல்களில் மலர்பற்றிய செய்திகள் மாண்புற இடம்பெற்றுள்ளன

7. பாலைபாடிய பெருங்கடுங்கோ :

34 பாலைப்பாட்டினுள் பூவின் தோற்றமும் ஏற்றமும் எழில்படக் காட்டியுள்ளார். வெப்பப் பெருமூச்சினல் மலரிதழ் வாடியதுவே செலவழுங்குதற்குக் காரணமாயிற்று என்று காட்டிய நுண்ணறிவினர் (அகம். 5).

8. பேயனர் :

50 பாடல்களில் மலர் நலம் புனைந்தவர். பூத்த மலர்ப் பின்னணியில் முல்லைத்திணை உரிப்பொருளை அழகுபட அமைத்துக் காட்டினர்.

9. மருதனிள நாகனர் :

35 பாடல்களில் மலர்களைப் பற்றித் தெரிவித்தார். மருதத்திணை மலர்களின் வழியாக உள்ளுறைத்திறம் காட்டியவர்.

***

****************************************
*                                      *
*   மேற்கோள் காட்டிய தொகை நூல்கள்   *
*                                      *
****************************************


1. அகநானூறு, பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க வெளியீடு, 1970, நான்காம் பதிப்பு.

2. ஐங்குறுநூறு, உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1949, நான்காம் பதிப்பு.

3. குறுந்தொகை, உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1962, ஆறாம் பதிப்பு.

4. சங்க இலக்கியம் (பாட்டும்தொகையும்) பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை பதிப்பு, பாரிநிலையம், சென்னை, 1967, இரண்டாம் பதிப்பு.

5. நற்றிணை அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை-17, 1966, முதற்பதிப்பு.

6. நற்றிணை, " " 1968, முதற்பதி[ப்பு]

7. நற்றிணை மூலமும் உரையும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1967, நான்காம் பதிப்பு.

8. பதிற்றுப்பத்து, உ.வே.சா.பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1957, ஆறாம் பதிப்பு.

9. " சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்[னை] 1968, ஐந்தாம் பதிப்பு.

10. பதினெண்கீழ்க் கணக்கு, மூலம், " " " 1970, இரண்டாம் பதிப்பு.

11. பத்துப்பாட்டு மூலமும் நச்.உரையும், உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1956, ஐந்தாம் பதிப்பு.


***

```
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
*                                                         *
*     எடுத்தாண்ட   தமிழ்   நூல்கள்                          *
*                                                         *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
```

## இலக்கணமும் நிகண்டும்


| | | |
|---|---|---|
| 1. | அமித சாகரர், | யாப்பருங்கலக் காரிகை (பதிப்பாசிரிய மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை, பாரி நிலையம், சென்னை) 1968, முதற்பதிப்பு. |
| 2. | இறையனார் அகப்பொருள் (மூலமும் உரையும்) | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969, ஐந்தாம் பதிப்பு. |
| 3. | ஐயன் ஆரிதனார், | புறப்பொருள் வெண்பா மாலை (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை,) 1967, நான்காம் பதிப |
| 4. | | தண்டி அலங்காரம், ( சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை,) 196 ஏழாம் பதிப்பு. |
| 5. | திவாகர முனிவர், | சேந்தன் திவாகரம், (சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை), 19 முதற்பதிப்பு. |
| 6. | தொல்காப்பியனார், | தொல்காப்பியம் (மூலம் மட்டும்) சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக சென்னை) 1967, மூன்றும் பதிப்பு. |
| 7. | " | தொல். பொருள். இளம். உரையுடன் (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழ சென்னை,) 1953, முதற்பதிப்பு. |

8. தொல்காப்பியனார் — தொல். பொருள். (1–5இயல்) நச். உ (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக சென்னை), 1970, ஐந்தாம் பதிப்பு.

9. " " — தொல். பேராசிரியர் உரையுடன் (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக சென்னை), 1966, மூன்றும் பதிப்பு.

10. நாற்கவிராச நம்பி, — அகப்பொருள் விளக்கம், (சைவ சித்தா நூற்பதிப்புக் கழகம், சென்னை),

11. பவணந்தி முனிவர், — நன்னூல் விருத்தியுரையுடன், (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை,) 1961, மூன்றும் பதிப்பு.

12. பிங்கல முனிவர், — பிங்கல நிகண்டு (சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை), 1968, முதற்பதிப்பு.

***

## ஏனைய தமிழ் நூல்கள்


1. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1960, ஏழாம் பதிப்பு.

2. " சிலப்பதிகாரம் " " பாகனேரி தமிழ் இலக்கிய சங்க வெளி 1959, ஆறும் பதிப்பு.

3. இளஞ்சேரன், கோவை 'கலைஞர்கோ', முல்லை மணக்கிறது, கலைக்குடில் வெளியீட்டகம், நாகப்பட்டினம், 1978, முதற்பதிப்பு.

4. கல்லாடனார், கல்லாடம், மூலமும் பொ.வே.சோ உரையும், சைவ சித்தாந்த நூற்பதிப் கழகம், 1963, முதற்பதிப்பு.

5. கொங்குவேளிர், பெருங்கதை, உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1968, நான்காம் பதிப்பு.

6. சாமி, பி.எல்., பி.எஸ்ஸி., சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், சைவ சித்தாந்த நூற்பதிப் கழகம், சென்னை, 1967, முதற்பதிப்

7. சுப்பிரமணிய பாரதியார், சி. பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், சென்னை-13, 1976, முதற்பதிப்பு.

8. தாமரைச் செல்வர், வ. சுப்பையாபிள்ளை பவள விழா மலர், தென்னிந்திய தமிழ்ச்சங்க வெளியீடு, சென்னை, 1973, முதற்பதிப்பு.

9. திருத்தக்கதேவர், சீவக சிந்தாமணி, மூலமும் நச்சினார்க்கினி உரையும், உ.வே.சா. பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1969, ஏழாம் பதிப்பு.

10. பாரதிதாசன், புரட்சிக் கவிஞர், பாண்டியன் பரிசு, செந்தமிழ் நிலையம், இராமச்சந்திர புரம், திருச்சிமாவட்டம் 1969, ஒன்பதாம் பதிப்பு.

11. மாணிக்கம், வ.சுப. டாக்டர், எம்.ஏ., பிஎச்.டி., தமிழ்க்காதல், சௌத் இந்தியா பிரச காரைக்குடி, 1962, முதற்பதிப்பு.

12 " " பதிப்பாசிரியர், இரட்டைக் காப்பியங் செல்விப் பதிப்பகம், காரைக்குடி, 1960, இரண்டாம் பதிப்பு.

13. மார்க்கபந்து சர்மா, எஸ், குறிஞ்சிப்பாட்டு விளக்கம், தொல்காப்பியர் நூலகம், சென்னை, 1964, முதற்பதிப்பு.

14. முத்து கண்ணப்பன், தி, டாக்டர், சங்க இலக்கியத்தில் நெய்தல் திணை, அதிபத்தர் அச்சகம், சென்னை, 20, 1978, முதற்பதிப்பு.

15. ரெனிவெல்லாக்கு-ஆஸ்டின் வாரன், இலக்கியக் கொள்கை, குளோரியா சுந்தரமதி மொழிபெயர்ப்பு, சிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1976, முதற்பதிப்பு.

***

## REFERENCE BOOKS IN ENGLISH


1. T. Burrow & M.B. Emeneau, A Dravidian Etymological Dictionary, Oxford University Press, London, 1961, I Ed.

2. " " A Dravidian Etymological Dictionary, Supplement, Oxford University Press, London, 1968, I Ed.

3. J.P. Fabricious's, Tamil and English Dictionary, Tranquebar, 1972, I Ed.

4. Prof. T.P. Meenakshi-sundaram, - A History of Tamil Literature, Annamalai University, Chidambaram, 1965, I Ed.

5. Dr.M. Varadarajan, M.A., M.O.L.Ph.D. The Treatment of Nature in Sangam Literature, The South Indian Saiva Siddhanta Works Publishing Society, MADRAS, 1969, II Ed.


***

பேராசிரியர் டாக்டர் தி. முத்து-கண்ணப்பன், எம்.ஏ.,
பிஎச்.டி.,

தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை - 600 030.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

" சங்க இலக்கியத்தில் மலர்கள் " என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகப் பேராசிரியை சாரதா கலாவதி, எம்.ஏ., அவர்கள் என் மேற்பார்வையில் 1977 ஜூலைத் திங்கள் முதல் 1981 டிசம்பர் வரை ஆய்வு நிகழ்த்தி எழுதிய இவ் ஆய்வேடு. இவ் ஆய்வாளர் தம் சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும், இதுமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை எதற்கும் யான் சான்றிதழ் வழங்குகின்றேன்.

சென்னை - 30
24.12.81

[signature] 24/12/81
(தி. முத்து-கண்ணப்பன்),
மேற்பார்வையாளர்.

```
************************
*                      *
*     8.   தொகுப்புரை   *
*                      *
************************
```

## 8.0. எடுத்துக்கொண்ட தலைப்பு:

" சங்க இலக்கியத்தில் மலர்கள் "

8.1. அறிமுகம் என்னும் முதற்பிரிவில் சில அடிப்படைச் செய்திகள் தரப்பட்டுள்ளன. சங்க இலக்கியப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை 2381. அவற்றுள் மலர்களைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவன 1019. அவற்றைப் பாடியோரின் எண்ணிக்கை 337.

8.1.1. மலர்கள் புறப்பாட்டில் இடம்பெறுவதைவிட மிகுதியாக அகப்பாட்டில் காணப்படுகின்றன. நிலத்தியல்புக்கு ஏற்றவாறு தாவர வளர்ச்சி சிறந்து அமைவது உலகியல்பு.

எனவே, அகத்திணைக்குரிய நிலத்தன்மைக்கேற்றவாறு அவ்வத்திணைப் பாடல்களில் அவற்றுக்குரிய மலர்கள் பெரிதும் பயிலும் நடைமுறையியல்பினைப் புலவர்கள் பெரிதும் கடைப்பிடித்துள்ளனர் என்பது அறியத்தக்கது.

## 8.1.2. ஆய்வின் பகுப்புகள்

1. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்,
2. மலர்களும் மக்கள் வாழ்வியலும்,
3. மலர்களும் இலக்கிய மரபுகளும்,
4. மலர்கள் உவமைகளாதல்,
5. மலர்களும் குறியீட்டு மரபும்,
6. மலர்கள் கவிதைப் பொருளாதல்.

## 8.2. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மலர்கள்

சங்கப்பாடலில் இடம்பெறும் மலர்கள் பின்வருமாறு:
அகத்தி, அசில், அடும்பு, அதிரல், அரலை, அலரி, அவரை, அனிச்சம், ஆத்தி, ஆம்பல், ஆரம், ஆவிரை, இருப்பை, இலவம், இல்லம், ஈங்கை, உந்தூழ், உழிஞை, உன்னம், ஊகு, எருக்கு, எருவை, எறுழ், ஓமை, கடம்பு, கணவிரி, கமுகு, கரந்தை, கரும்பு, கருவிளை, கல்லகாரம், கவிர், களா, கள்ளி,

காஞ்சி, காந்தள், காயா, குடசம், குமிழ், குரவம்,
குரீஇப்பூளை, குருகிலை, குருக்கத்தி, குருந்து, குல்லை,
குவளை, குளவி, குறிஞ்சி, குறுநறுங்கண்ணி, கூதளம்,
கூவிரம், கூவிளம், கைதை, கொகுடி, கொன்றை,
கோங்கம், கோடல், சிறுசெங்குரலி, சிறுமாரோடம்,
சுள்ளி, சூரல், செங்கழுநீர், செங்கொடுவேரி,
சென்பகம், செம்மல், செயலை, செருந்தி, செருவிளை,
சேடல், ஞாழல், தணக்கம், தமாலம், தளவு, தாமரை,
தாழை, திலகம், தில்லை, தும்பை, துழாய், தெறுழ்,
தொய்யில், தோன்றி, நந்தியாவர்த்தம், நரந்தம்,
நள்ளிருள்நாறி, நறவம், நறை, நாகம், நெய்தல்,
நெருஞ்சி, நெல், நொச்சி, பகன்றை, பயினி, பலாசம்,
பனை, பாங்கர், பாதிரி, பாரம், பாலை, பிடவம்,
பித்திகை, பீரம், புழகு, புன்கு, புன்னாகம், புன்னை,
பூளை, கோங்கம், மணிச்சிகை, மராம், மருதம்,
மல்லிகை, மா, மால்வெள்ளாத்திரம், முசுண்டை,
முண்டகம், முருங்கை, முல்லை, முள்ளி, மௌவல், யா,
வகுளம், வஞ்சி, வடவனம், வழை, வள்ளி, வள்ளை,
வாகை, வாழை, வாள்வீரம், வானி, வெட்சி, வேங்கை,
வேரல், வேம்பு, வேழம், வேளை.

8.2.1. மேற்காட்டிய இவற்றுள், அடும்பு, அதிரல், ஆம்பல்,
காந்தள், காயா, குவளை, கொன்றை, கோங்கம்,
செருந்தி, ஞாழல், தளவு, தாமரை, பகன்றை, பாதிரி,

பிடவு, பித்திகம், புன்னை, முல்லை, வேங்கை என்னும் மலர்கள் பாடலில் பெரிதும் பயிலுகின்றன. மேலும், சூடுதற்கும் சூட்டுதற்கும் பயன்படுத்தாத அவரை, இலவம், பீர்க்கு, புன்கு, முசுண்டை, வாழை ஆகிய மலர்களைப் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன.

8.2.2. மலர்களின் வகை, வடிவம், வண்ணம், மணம், பயன் ஆகியவற்றுள் அறிமுடிந்தவை தரப்பட்டுள்ளன.

8.2.3. அவரையென்பது சங்க காலத்தில், குளிர்காலத்தில் மலர்ந்து உணவுக்குப் பயன்படும் விதைகளைத் தரும் பலவகைக் கொடிகளுக்கும் உரிய பொதுப்பெயர் என்று தெரிய வருகின்றது.

8.2.4. கொன்றை என்னும் பெயர் மஞ்சள் வண்ண மலர்களையுடைய மரங்களைக் குறித்த பொதுச்சொல்லாக வழங்கியது என்பதைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

8.2.5. காந்தள், கோடல் என்னும் சொற்கள் பொதுப்பெயராகவும் சிறப்புப் பெயராகவும் சங்கப் பாடல்களில் வழங்கப்பட்டுள்ளன. சூழ்நிலைக்கேற்றவாறு பொருள்கொள்ள வேண்டும். எனினும், செங்காந்தள் வேறு, தோன்றி என்பது வேறு என்பதைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

## 8.3. மலர்களும் மக்கள் வாழ்வியலும்

மக்கள் வாழ்வில் மலர்கள் பயன்பட்ட தன்மையை இப்பகுதி காட்டுகின்றது.

8.3.1. கடவுள் வழிபாட்டில் மலர்கள் முதன்மைபெற்றன.

8.3.2. மக்கள் மிகப் பழங்காலத்தில் பயன்படுத்திய தழையாடை சிறுமியர்க்குரிய பூவாடையாகச் சங்ககாலத் தமிழகத்தில் அமைந்திருந்தது.

8.3.3. ஆடவர் வாழ்க்கை நிலை எதுவாயினும் அவரவர் தகுதிக்கும் தன்மைக்கும் ஏற்பக் கண்ணி அணிந்தனர். அரசர்தம் குலமரபும் வீரர்கள் ஆற்றும் கடமையின் இயல்பும் சூடிய கண்ணியைக் கொண்டே உணரமுடிந்தது. தார் என்பது அரசரும் செல்வரும் அணிந்த மாலை.

8.3.4. மகளிர் ஒப்பனையில் மலர்கள் சிறந்த இடம்பெற்றன. முல்லைப் பூவினைக் கன்னியர் சூடுதல் வழக்கமில்லை என்பதும், மனைவியரே அதைச்சூடும் மாண்புடையர் என்பதும், சங்கப் பாடல்களினின்று தெரிகின்ற உண்மைகள். பொதுமகளிர் பூக்களை மிகுதியாகப் பயன்படுத்தினர்.

8.3.5. தாமரையை மாந்தர் சூடுவதாகப் பாடல்கள் தெரிவிக்கவில்லை. தெய்வத்துக்கே உரிய சிறந்த மலரென்று கொள்ளப்பட்டது.

8.3.6. பூக்களின் மலர்ச்சியைக் கொண்டு பருவகாலம் அறியப்பட்டது.

8.3.7. இயற்கை மலர்களைப் போன்று உலோகத்தாலும் பிறவற்றாலும் செய்யப்பட்ட செயற்கை மலர்களும் மாலைகளும் மக்கள் வாழ்வில் பயன்பட்டன.

## 8.4. மலர்களும் இலக்கிய மரபுகளும்

மலர்களைச் சார்ந்து காலப்போக்கில் உண்டாகிய மரபுகள் இந்தத் தலைப்பின்கீழ் ஆராயப்பட்டன.

8.4.1. அகப்பொருளில் ஐந்திணைகளின் பெயர் அமைவதற்கு மலர்களே அடிப்படைக்காரணம், புறப்பொருளில் பெரும்பாலானவை சூடும் மலர்ப்பெயர்களைச் சார்ந்து அமைந்தவையே.

8.4.2. மலர்களைத் தெய்வங்களோடு தொடர்புபடுத்திய மரபின்வழி அமைந்த கதைக்குறிப்புகள் தமிழிலுள்ள பல்வேறு

இலக்கியப் பாடல்களிலும் ஏற்றம்பெற்றுத் தோன்றுகின்றன. சங்க இலக்கியத்துள்ளும் இடம்பெற்ற சில செய்திகள் இவண் காட்டப்பட்டன.

8.4.3. பூ, மலர், அலர் என்னும் சொற்கள் வினைப்பகுதியாகவும் பண்புச் சொற்கள் என்னும் நிலையில் பெயரடையாகவும் பயன்படும் தன்மையும், உருவக அழகுடன் விளங்கும் அழகிய சொல்லாட்சி வளர்ச்சியும் சொற்பொருள் மரபினை உணர்த்தும் வகையில் இவண் அமைக்கப்பட்டுள்ளன.

## 8.5. மலர்கள் உவமைகளாதல்

இந்தத் தலைப்பின்கீழ், மலர்கள் மற்றைய பொருள்களுக்கு உவமையாகப் பாட்டில் பயின்ற சில நிலைகள் குறிக்கப் பட்டுள்ளன.

8.5.1. புலவர்தம் கண்கள் கூர்ந்தறிந்து பார்த்த மாட்சியை இவ்வுவமைகள் எடுத்துக்காட்டுகின்றன. காட்சிக்குப் புலனாகும் வண்ணமும் வடிவமும் அன்றி, உணர்வுப் புலனுக்குரிய மணமும் உவமித்துச் சொல்லப்படும் தன்மையை அகப்பாடலில் பெரிதும் காணமுடிகின்றது.

8.5.2. மேலும், சில வாழ்வியல் உண்மைகளை மலர்களின் சார்புடைய உவமை வாயிலாகத் தெளிவுபடுத்தும் முறைமையும் சங்கப் பாடல்களில் அமைந்துள்ளன என்பதும் இப்பகுதியில் காட்டப்பட்டுள்ளது.

## 8.6. மலர்களும் குறியீட்டு மரபும்

சொற்களுக்குரிய அகராதிப் பொருளுக்கு அப்பாற்பட்ட நுண்கருத்துக்களை உணர்த்துதற்கு மலர்களின் வெவ்வேறு நிலைகள் சங்கப் பாடல்களில் பயன்பட்டுள்ளன என்பது இத்தலைப்பின்கீழ் உணர்த்தப்பட்டுள்ளது.

8.6.1. மலர்களின் வளர்ச்சி, மலர்ச்சி, வீழ்ச்சி, வாட்டம், மணம், மணமின்மை என்னும் தன்மைகளாலும் இன்னபிற நிலைகளாலும் உள்ளுறுத்து உணர்த்தப்பட்ட கருத்து நுண்மைகள் இயன்றவாறு முறைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன.

8.6.2. காலத்தாலும் இடத்தாலும் வேறுபட்ட பல புலவர் பாடல்களிலும் இவ்வாறு உருவகத்தன்மை பொருந்திய கருத்தோவியங்கள் பெரிதும் காணப்படுகின்றன என்பதனால், குறியீட்டுப் பொருள் அமையும்படி பாடுதல் வழி வழி வளர்ந்து பயின்று வழங்கிய மரபு என்பதும் புலனாகின்றது.

## 8.7. மலர்கள் கவிதைப் பொருளாதல்

பாடல்களைப் படைக்கும் புலவர்கள் மலர்களுக்கு மிக மேம்பட்ட நிலைமையைத் தருவதனைச் சங்கப்பாடல் சிலவற்றில் காணமுடிகின்றது..

8.7.1. மலர்களைப் பாடல்கள் சிறப்பிக்கின்றனவா, பாடல்களை மலர்கள் சிறப்பிக்கின்றனவா என்பதை அறுதியிடல் ஆகாதவாறு இவற்றின் இயைபு சிறந்து பொருந்தியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

புலவர்களின் கற்பனைத் திறமையால் இத்தகைய இயைபு ஏற்படுகின்றது. எனவே, பாடல்களில் மலர்களின் மாட்சியும் புலவரின் திறமையும் ஒருங்கே விளங்கக் காணலாம்.

8.7.2. மலர்களை நாடகப் பாத்திரமாக்கிப் புலவர் சிலர் பாடல் இயற்றியுள்ளனர். இவ்வாறு, உணர்ச்சியும் கற்பனையும் கருத்தாழமும் பிரிக்கலாகாதவாறு கலந்திசைக்கும் பாடல்கள் சிலவற்றைப்பற்றிய மதிப்புரைகள் இத்தலைப்பில் தரப்பட்டுள்ளன.

## 8.8. முடிப்புரை

மலர்களையும், மலர்களோடு இயைந்த வாழ்வியலையும், வாழ்வினின்று முகிழ்த்த இலக்கியத்தையும், இலக்கியத்தில் காணப்பட்ட சிறப்பியல்புகளையும்பற்றி, மேற்காட்டியவற்றுள் வகுத்தும் தொகுத்தும் விரித்தும் காட்டி அமைகின்றது இந்த ஆய்வு.

***